

# மயிலாப்பூரில்

# 28-1-55

## வெள்ளிக்கிழமை அன்று

# திறப்பு விழா!

★

● பட்டு ஜவுளி விற்பனையில் ஓர் புதிய சகாப்தம் ● தமிழ் நாட்டின் உடை யழகும் கலைத்திறனும் ஒருங்கே அமைந்து விளங்கும்

* கண்கவர் கொள்ளேகாலம் பட்டுப் புடவைகள்
* மனதிற்குகந்த மைசூர் கிரேப் சேலைகள்
* நூதன பார்டர்களில் பாவாடைகள்
* சோபிதமான டிசைன்களில் சோளி பீஸ்கள்

இவையன்னியில் கலியாணங்கள் மற்றும் இதர விசேஷங்களுக்கு ஏற்ற எல்லாவிதமான ரகங்களும் ஏராளமாய் ஸ்டாக் செய்துள்ளோம்.

எங்களிடம் கொள்ளேகாலம் டிஷ்யூ சேலைகள் ஓர் விசேஷ விற்பனை!

# சக்தி ஸில்க் எம்போரியம்

8, வடக்கு மாட வீதி
மயிலாப்பூர், மதராஸ்-4

மலர் 14 :: இதழ் 27



# கல்கி

ஜய ௵ :: தை 17

## பொருளடக்கம்

1955 ஜனவரி 30



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

மலர் 14 இதழ் 27




தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்

# குன்றின் மேலிட்ட தீபம்!

உலகில் ஒவ்வொரு நாட்டிலும் பல கட்சிகள் இருக்கின்றன. அந்தக் கட்சிகள் தங்கள் தங்கள் நாட்டு மக்களுக்குப் பல நன்மைகள் புரிந்திருக்கின்றன. பொருளாதார சுபிட்சத்தை யுண்டாக்கித் தந்திருக்கின்றன! சுதந்திரம் அற்ற நாடுகளில் சுதந்திரத்தையும் வாங்கித் தந்திருக்கின்றன!

ஆனால் அந்தக் கட்சிகள் எல்லாம் கடைப்பிடித்த முறைகள் ஆராய வேண்டிய விஷயம். அந்த நாடுகளில் எல்லாம் ஆட்சிப் பொறுப்பு அடைந்த கட்சிகள் கொடுமை கலந்த முறைகளைக் கையாண்டிருக்கின்றன என்பது அனைவரும் கண்டதே. ஆனால் பாரத நாட்டுக்குச் சுதந்திரத்தை உண்டாக்கித் தந்த காங்கிரஸ் கையாண்ட முறையோ பரிசுத்தமான அஹிம்சா மார்க்கம்.

1947-ல் பூரண சுதந்திரத்தைப் பெற்ற பிறகு நமக்கு எத்தனை எத்தனையோ பிரச்னைகளும் தொல்லைகளும் எழுந்தன! இந்து முஸ்லிம் வேறுபாடுகள், சமஸ்தானப் பிரச்னை, நாட்டுப் பிரிவினைச் சிக்கல்கள், பொருளாதாரக் கஷ்டங்கள், உணவுப் பஞ்சம், —இப்படிப் பல தொல்லைகளைச் சுதந்திரப் பொறுப்பைப் பெற்றவுடனேயே நாம் சமாளிக்க வேண்டியதாயிற்று. ஆயினும் நம்முடைய தலைவர்கள் கொஞ்சமும் மனம் தளராமல், அஹிம்சையைக் கைவிடாமலே நாட்டின் நிர்வாகத்தை நடத்தினார்கள். இதுவே காங்கிரஸின் பெரிய வெற்றி.

இந்தப் பிரச்னைகள் முற்றிலும் தீர்வதற்கு முன்னம், காங்கிரஸின் பலத்தையும் தலைவர்களின் தீரத்தையும் சோதிப்பதுபோல் ஆண்டவன் நமக்கு வழிகாட்டி உதவி வந்த அண்ணலைத் தன் பாதார விந்தங்களில் சேர்த்துக் கொண்டு விட்டான்.

இந்தப் பெரிய சோதனையிலும் காங்கிரஸ் வெற்றியடைந்தது. வழிகாட்டி அழைத்துச் சென்ற மகான் மறைந்த போதிலும், அவர் அடிச்சுவட்டைப் பின்பற்றி வந்த நம் தலைவர்களாகிய ஜவாஹர்லால் நேரு, சர்தார் படேல், ராஜாஜி முதலியவர்கள் ஆவன செய்து, சிக்கல்களைத் தீர்த்து நிர்வாகம் நடத்தி வந்தார்கள்.

மகாத்மா காந்தி மறைந்து போனதைக்கூட மக்கள் நினைத்து வருந்தாமல் நிற்கு மளவுக்கு, நம்முடைய தலைவர்கள் ஆட்சியை நிர்வகித்து வந்தார்கள். அனேக வழிகளில் நாடு மேம்பாடு அடையும்படி செய்தார்கள். இதுவும் காங்கிரஸின் பெரும் வெற்றி.

பாரத நாட்டுத் தலைவரான பண்டித 'நேரு' அவர்களின் பணி பாரத நாட்டோடு நின்று விடவில்லை.

கொரியாவில் ஆரம்பித்த போரை அன்பு நெறியிலே வாதாடி, நமது பண்டித ஜவாஹர்லால் நேரு அடக்கினார். வியட்நாம் போரையும் நிறுத்தி அமைதிக்கு வழிகாட்டினார்.

வெளிநாட்டு விஷயங்களில் பாரத நாட்டுத் தலைவர் அடைந்த வெற்றியெல்லாம் ஓரளவு காங்கிரஸின் வெற்றியே. ஜவாஹர்லால் நேரு அவர்களின் வெளிநாட்டுப் புகழில் காங்கிரஸுக்குப் பூரண பங்குண்டு.

மேற்கண்டவாறு காங்கிரஸ் கட்சியின் பெருமையையும் பலத்தையும் சரித்திர முறையில் உணரலாம். சென்னையில் நடந்த காங்கிரஸ் மகாநாட்டைப் பார்த்து வியந்தவர்களோ காங்கிரஸின் முழுச் சக்தியை நேருக்கு நேராகவே கண்டு உணர்ந்திருப்பார்கள்!

சௌராஷ்டிர ராஜ்யத்திலே ஆட்சித் தலைவராக இருந்த ஸ்ரீ தேபர் அவர்கள், காந்தி சீடர்களின் இளைஞர் கூட்டத்தில் தலைசிறந்தவர். அவரை ஜவாஹர்லால் நேரு பொறுக்கி எடுத்து, இதுகாறும் வகித்து வந்த அக்கிராஸன ஸ்தானத்தில் வைத்துவிட்டுத் தாம் அப்பதவியிலிருந்து விலகிக் கொண்டிருக்கிறார்.

குடத்து விளக்குப் போல், ஸ்ரீ தேபர் அவர்கள் சௌராஷ்டிராவில் மிக அடக்கமாகக் காந்திய வழியில் மக்களுக்கு அரும்பணி புரிந்து கொண்டிருந்தார்.

சென்ற வாரம் சென்னை மக்களின் மனத்தைக் கவர்ந்த அறுபதாவது காங்கிரஸ் மகாசபைக்கு ஸ்ரீ தேபர் அவர்கள் தலைமை வகித்து, நிர்வாகத்தைத் திறம்பட நடத்தியதைப் பார்த்தவர்கள் குடத்து விளக்கு குன்றின் மீது இட்ட தீபமாக ஒளி வீசியதைக் கண்டு உள்ளம் களித்திருப்பார்கள்.


தனி மனிதரா?
மகாத்மா
வினோபா
"எப்பொழுதாவது காங்கிரஸ்காரர்கள் உதவிக்கு வருவார்கள் என்று நம்பிக்கை வைத்து ஒருவர் சதா அலைந்து கொண்டிருக்கிறார்!" என்று வினோபாபவே, நேருக்கு எழுதியுள்ள கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

# கார்ட்டூன்


இரண்டு குரங்குகள்!
அணுசக்தி
அமெரிக்கா
அணுசக்தி
ரஷ்யா
உலகம்
இந்தியா
"உலக நிலைமை, இருகுரங்குகள் ஒரு ஓலைக்குடிசையின் கூரை மேல் கையில் தீவட்டியுடனிருப்பது போலிருக்கிறது!"—ராஜாஜி


ஆமையும் முயலும்!
சோஷலிஸம்
"நீ இடுக்கு வழியை நாடினாய்! அதனால்தானே உனக்கு விபத்து நேரிட்டது!"
பிரஜா-சோஷலிஸ்ட் கட்சி
காங்கிரஸ்

## ஒரே தலைவர்!

"நம் நாட்டில் ஒரே ஒரு தலைவர்; அவர் நேருஜி" என்று சென்னை நகர சபை அளித்த வரவேற்பில் தேபர் கூறினார்.

தேபர்

# கதம்பம்

## திறப்பு விழா!



"நான் ராஜாஜி அவர்களின் திருவுருவத்தைத் தான் திறந்து வைத்தேன். ஆனால் அவரோ காந்திஜியின் இலட்சியப் பாங்கையே திறந்து வைக்கிறார். அணுகுண்டையும், ஜலவாயுகுண்டையும் எதிர்த்துச் சமாதானம் நிலவ உலகுக்குச் சவால் விடுத்திருக்கிறார். அவர் விடுத்த செய்தி மிகப்பெரிய இடங்களிலெல்லாம் ஆர்வத்துடன் கவனிக்கப் பட்டிருக்கிறது!" என்று மகாவீர் தியாகி ராஜாஜி படத்தைத் திறந்து வைத்த பொழுது கூறினார்.



# மாசு களைவோம்!

**கா**ங்கிரஸின் புதிய தலைவர் ஸ்ரீ தேபர் நிகழ்த்திய பேருரையில் உண்மைக் காங்கிரஸ்வாதிகளுக்குப் புது நம்பிக்கையும் உற்சாகமும் ஊட்டும் பகுதிகள் பல இருக்கின்றன.

"காங்கிரஸ் என்பது என்ன? அதன் வேலையும் பொறுப்பும் எத்தன்மை யானவை!" என்றெல்லாம் கேட்டுக் கொண்டு தாமே பதில் கூறியிருப்பது மிக்க உண்மையோடு விளங்குகிறது.

"அடிமைத் தளைகளால் அவதியுற்ற மனித வர்க்கத்தின் கண்ணீர்த் துளியே காங்கிரஸ் என்ற பெயருடன் தோன்றியது. கண்ணீர் காட்டாறாகப் பெருகியது. பின்னர் கங்கை, பிரம்மபுத்திரா போன்ற ஜீவ நதியாக ஓடியது. அந்தப் புனித நீரிலே நாம் பல்லாண்டுப் பாபங்களைக் கழுவினோம். சோர்வை நீக்கிக் கொண்டோம். ஜனங்களிடை ஐக்கியம் ஏற்படுத்த அதைப் பயன்படுத்தினோம். மக்களின் உடலிலே ஒரு புதிய உயிர், ஒரு புத்துணர்ச்சி, ஒரு புது ஊக்கம், தூய்மை யாவும் தோன்றின. புதிய சக்தியுடன் இலட்சியத்தை அடைந்தோம். உலக சரித்திரத்திலே ஒப்புவமை இல்லாத ஒரு சக்தியாக அது மிளிர்ந்தது......"

இப்படியெல்லாம் பாடுபட்டு உண்மை நெறியில் நின்று முன்னேறிய காங்கிரஸ் ஸ்தாபனத்தில் சமீப காலத்தில் மாசு படியவும் செய்தது என்பதை நாம் மறந்துவிடக் கூடாது.

இந்த நிலைக்கு முற்றுப்புள்ளி வைத்துக் காங்கிரஸைத் தூய்மைப்படுத்தும் பொறுப்பு ஸ்ரீ தேபர் அவர்களுக்கு இருக்கிறது. பெரியோர்களின் தன்னலமற்ற தியாகத்தில் வளர்ந்த இப்பெரிய ஸ்தாபனம் மீண்டும் பழைய உன்னத நிலையை அடைய ஸ்ரீ தேபர் முயல்வார் என்பதற்கு அவருடைய பேருரை ஒரு நல்ல அறிகுறியாக விளங்குகிறது.

# அவர் பணி ஓங்குக!

**த**மிழகத்தில் சென்ற தேர்தலின் போது ஜாதி வித்தியாசம் அதிகம் தாண்டவமாடியது. இது யாவரும் அறிந்த உண்மை.

இத்தகைய கடும் வகுப்பு வெறிக்கும் ஸ்ரீ தேபர் சரியான எச்சரிக்கை விடுத்திருக்கிறார்:

"ஜாதி-வகுப்பு மனப்பான்மையானது மதத்துக்கு முரணானது; பண்பாட்டுக்கு ஒவ்வாதது; சமூக சமத்துவத்துக்குப் பாதகமான ஒரு தவறான பற்றுதலைத் தூண்டுகிறது. தனி மனித நிலையில் பார்க்கும் போது அது அகம்பாவத்தை வளர்க்கிறது. சமூக நிலையில் பார்க்கும் போது அது போட்டியைக் கிளறுகிறது. தேசிய நிலையில் கவனிக்கும் போது அது பிளவுகளை உண்டாக்குகிறது. ஆகவே யாரும் தங்கள் சமூக அமைப்பைச் சுதந்திர இந்தியாவின் கழுத்தை முறிக்கும் கிடுக்கியாகவோ, காலைக் கட்டும் தளையாகவோ இருக்கும்படி விடக் கூடாது. அரசியல் ஜனநாயகமும் சமூக ஜனநாயகமும் கைகோத்து முன்னேற வேண்டும். ஆகையால் நாம் ஓர் முடிவான முயற்சி மூலம் ஜாதி வகுப்பு ஏற்றத் தாழ்வு உணர்ச்சிகளையும் வேற்றுமைகளையும் உதறித் தள்ள உறுதி கொள்வோமாக!"

காந்தியின் தத்துவத்தில் ஊறி அதைக் காரியாம்சத்தில் நிறைவேற்றக் கூடிய செயல் வீரர் என்று ஸ்ரீ தேபர் ஏற்கெனவே புகழ் பெற்றிருக்கிறார்.

மகாத்மாஜி தமது வாரிசு என்று நல்கினார்: மனிதகுல மாணிக்கமாகத் திகழும் நேருவையும், மகான் வினோபாவையும்.

நமக்கு பண்டித நேரு ஸ்ரீ தேபர் அவர்களை வழங்கியிருக்கிறார். தேபரின் பணி சிறப்பதாக! நேருவின் புகழ் ஓங்குவதாக!

# சர்வோதயத்தின் சிகரம்!

**கா**ந்தி மகான் வாழ்க்கையிலே ஆங்கில ஆசிரியர் ஜான் ரஸ்கின் என்பவரின் 'அன் டு திஸ் லாஸ்ட்' என்ற நூலுக்கு முக்கிய பங்குண்டு. கேடு கெட்ட சமுதாயத்தில் மிகுந்த இழிநிலையடைந்தவனுக்கும் உய்வுண்டு, மார்க்கமுண்டு என்பதை அந்த நூல்தான் காந்தி மகானுக்குத் தெளிவாக அறிவுறுத்தியது.

அன்னிய ஆதிக்கம் காரணமாக, நம்மை நாமே ஆளும் சுதந்திரம் இழந்து இருந்தோம். பிரிட்டிஷ் அதிகாரத்தை அகற்றிய பிறகுதான் நாம் நம் மேலான வாழ்வைப் பற்றிச் சிந்திக்கலாம் என்று காந்தி மகானால் சும்மா இருந்துவிட இயலவில்லை. பாரத சமுதாயம் ஏழைக் கிராம மக்களைக் கொண்ட சமுதாயம். அவர்கள் உய்யும் வழி என்ன என்று யோசிக்கலானார். அப்பொழுதுதான் ரஸ்கின் அவர்களின் நூல் அவருக்கு அடிப்படைத் தத்துவத்தை விளக்கியது.

1 தனி மனிதனுடைய நலம் பொது நலத்துக்குள் அடங்கும்.

2 எல்லோரும் தம் உழைப்பின் மூலமாக ஜீவனோபாயத்தைச் சம்பாதித்துக் கொள்வதற்குச் சம உரிமை உண்டாகையால் ஒரு வக்கீலின் வேலைக்கு எவ்வளவு மதிப்புண்டோ அவ்வளவு ஒரு நாவிதரின் வேலைக்கு முண்டு.

3 உழைப்புள்ள (விவசாயி அல்லது தொழிலாளியின்) வாழ்க்கையே நாம் விழையத் தக்க வாழ்க்கை.

இதுதான் சர்வோதயத்தின் அடிப்படைக் கொள்கை என்றார் மகாத்மா. இந்த அடிப்படையிலேயே காந்தி மகான் பதினொரு அம்சங்கள் கொண்ட நிர்மாணத் திட்டத்தை வகுத்தார். இதன் பயனாக அவரவர் தங்கள் தங்கள் சுய தேவைகளைப் பூர்த்தி செய்து கொண்டுவிட முடியும். நமக்குத் தேவையான துணியை நாமே நூற்று, நெய்து கொள்ள வேண்டியது. நமக்குத் தேவையான உணவுப் பண்டங்களை நாமே உற்பத்தி செய்து கொள்ள வேண்டியது. இப்படி ஒவ்வொரு கிராமமும் சுய தேவையைப் பூர்த்தி செய்து கொண்டு விட்டால் சுயராஜ்யம் வந்து விட்டாற் போல்தான். அரசாங்கத்தின் தயவை நாடாத போது, அன்னிய அரசாங்கம் தானே

ஸ்தம்பித்து விடும்! சுயராஜ்யம் அடைந்து விடுவோம் என்ருர் காந்தி மகான்.

காந்திஜியின் கொள்கைகளை மூற்றும் உணர்ந்த விநோபா காந்தி மகான் வகுத்த வழியைப் பின்பற்றி, உலகுக்குக் காந்தி மகான் போதித்த அறநெறியின் உயர்வை அல்லும் பகலும் கிராமம் கிராமமாக நடந்து சென்று மக்களுக்கு உணர்த்தி வருகிருர்.

விநோபா அவர்களின் பூதான இயக்கம் காந்தி மகான் வகுத்துக் கொடுத்த நிர்மாணத் திட்டங்களின் சிகரமாக விளங்கி வருகிறது.

பூதானம் மக்களின் உள்ளத்திலேயே அன்பைப் பெருக்கி விடுகிறது; உள்ளத்தில் புரட்சியை உண்டு பண்ணுகிறது. காந்தி மகான் எந்த லட்சியத்தை அடைய விரும்பினுரோ, அதை எளிதில் சாதித்து விடுகிறது.

"பூதானம் மனமாறுதலையும் சிந்தனையில் ஒரு புதிய போக்கையும் வாழ்க்கையில் புது மதிப்புகளையும் ஏற்படுத்தும் மக்கள் இயக்கமாகும். மனிதர்களின் மனத்திலும், பரஸ்பர உறவுகளிலும் அது ஜீவனூட்டி உடனடியான புரட்சியை உண்டுபண்ணுகிறது. இப்போதுள்ள சுரண்டலும் ஏற்றத் தாழ்வும் கொண்ட சமூக அமைப்பை அது இப்போதே தகர்த்தெறிகிறது. தாங்கள் வைத்திருப்பதைச் சக மக்களுடன் பகிர்ந்து கொள்ளுமாறு அது போதிக்கின்றது!" என்கிருர் பூதான இயக்கத்துக்குத் தமது வாழ்வையே அர்ப்பணித்த ஸ்ரீ ஜயப்பிரகாச் நாராயண்.

காந்திமகான் வழியிலே, அதாவது அஹிம்சையும் அன்பும் தோய்ந்த நெறியிலே மக்கள் மனத்தில் உடைமைப் பற்றை அகற்றி மாபெரும் புரட்சியுண்டுபண்ணி வருகிருர் விநோபா முனிவர்! ரத்தமின்றி, சண்டையின்றிப் பாரத மக்கள் நிலம் வழங்கி வருவதையும், பாரத மக்களின் மனத்தில் ஏற்பட்டு வரும் புரட்சியையும் உலகம் முழுதும் பெரு வியப்புடன் பார்த்து வருகிறது!

காந்தி மகான் மக்கள் அனைவருக்கும் மேம்பட்ட வாழ்வு அளிக்க வேண்டும் என்று சர்வோதயக் கொடியைத் தூக்கிப் பிடித்தார்.

அதை அவருடைய முதல் சீடரான விநோபாஜி இன்று மிக மிக வெற்றியுடன் பறக்க விட்டுக் கொண்டிருக்கிருர்!

ஜனவரி 30-ந் தேதி நமது தேசத்தின் தந்தை காந்தி மகாத்மா தம் தியாகங்களுக்கெல்லாம் சிகரமாகத் தமது புனித உயிரையே தியாகம் செய்த நாள். ஓவியர் சந்திரா வரைந்துள்ள மகாத்மாவின் திருவுருவத்துக்கு அருகே அட்டைப் படத்தில் அவருடைய இலட்சியம் எல்லாம் சுடராக நின்று ஒளி வீசுகிறது. மகாத்மாவின் அந்தச் சுடர் நம்மை வழி நடத்துமாக!



## போலீஸ்காரர் நீடூழி வாழ்க!

1 போலீஸ்காரர்கள் வழி தவறிய குழந்தைகளுக்கு அன்னையாக விளங்கினார்கள்!

2 மனைவியைப் பிரிந்து தவிக்கும் கணவன்மார்களுக்கு மனைவியைப் போலிருந்து தொண்டாற்றினார்கள்!

3 பெண்மணிகளுக்குப் பாதுகாப்பாளராக இருந்து உதவி செய்தார்கள்!

4 ஆவடியிலும், ஆவடிபோகும் பாதைகளிலும், நகரத்திலும் காவல் புரிந்தார்கள்!

5 கூட்டத்தை அஹிம்சை முறையில் ஒழுங்கு படுத்தினார்கள்!

6 இத்தகைய பணிகள் புரிந்த அவர்களுக்குப் பொது ஜனம் தமது பாராட்டுதல்களைத் தெரிவிக்கலாம்!




சத்தியமூர்த்தி நகரில் ஜனவரி 21, 22, 23 தேதிகளில் நடந்த காங்கிரஸ் வைர விழாவுக்கு மூன்று லட்சம் பேருக்கு மேல் திரளாகக் கூடிச் சிறப்பித்தனர். யுகோஸ்லேவியாவின் தலைவர் மார்ஷல் டிட்டோ விஜயம் செய்து காங்கிரஸ் மகாசபையின் மகத்தான சக்தியைக் கண்டு வியந்தார். இந்தக் காட்சியை முன் பக்கத்தில் பார்க்கலாம். நேருவின் அருகில் இடப் பக்கம் நிற்பவர் டிட்டோ. இப் பக்கங்களில் காங்கிரஸ் தலைவர்கள் நின்று பேசிய அலங்கார மேடையையும், வரவேற்புக் கமிட்டித் தலைவர் ஸ்ரீமதி அம்புஜம்மாள், ஸ்ரீ மொரார்ஜி தேசாய், ஸ்ரீ ஜகஜ்ஜீவன் ராம் முதலியவர்களையும் பார்க்கலாம்.

ஆவடியில், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் புதிய காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ தேபர் நேருஜியுடன் அளவளாவுவதையும், ராஜாஜி ஸ்ரீ வி. கே. கிருஷ்ண மேனனுடன் பேசிக் கொண்டிருப்பதையும் காணலாம். இலங்கை மந்திரி ஸ்ரீ எஸ். நடேசனும், சென்னைப் பிரதம நீதிபதி ராஜமன்னார் அவர்களும் பிரசங்கங்களைக் கூர்ந்து கவனிக்கிறார்கள். இந்திய சர்க்கார் வர்த்தக மந்திரி ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரி ஏதோ சிந்தனையிலிருக்கிறார். ராஜாஜியும் மௌலானா அபுல்கலாம் ஆஸாத் அவர்களும் சுவாரஸ்யமான சம்பாஷணையில் ஈடுபட்டிருக்கும் காட்சியையும் காணலாம்.



# குப்பண்ணாவின் ஆவடி விஜயம்

"மீனாகு"

குப்பண்ணாவின் பொது வாழ்வுத் தொடர்புக் கொள்கை ஒரு பெரும் மாறுதலை அடைந்திருந்ததைக் கண்டு எனக்கு வியப்பும் சிரிப்புமாக வந்தது. ஊரில் கல்யாணம், மார்பில் சந்தனக் கொள்கை குப்பண்ணாவிடம் ஒரு பெரும் அடிப்படைக் கொள்கை — இல்லை, "தலைப்படை"க் கொள்கை என்று குப்பண்ணா விஷயத்தில் சொன்னால் பொருத்தமாக இருக்கும். ஏனெனில் அவன் தலை கேசமெல்லாம் திடீரென்று மூன்றே நாளில் செம்பட்டை பாய்ந்திருந்தது; எப்பொழுதும் சலவை மடிப்புக் கலையாமல் வெள்ளை வெளேரென்று இருக்கும் ஜிப்பாவும் வேஷ்டியும் காவி நிறம் ஏறியிருந்தன!

"ஸிவோ ஹாம்! ஸ்வாமிஜி! குப்பண்ணாஜி! ஆப் கப் கிருஹஸ்தாச்ரமம் சோட் தியா ஔர் காஷாயாச்ரம் லேலியா!" என்று எனக்கு "மாலும் ஹாயீ" ஹிந்தியில் கொஞ்சம் பிளந்தேன். (ஆவடி காங்கிரஸ் பிரசங்கங்களைக் கேட்ட பிறகு இந்த ஹிந்தியை ஒரு கை பார்த்து விட வேண்டும் என்று தோன்றியது சகஜந்தானே!)

குப்பண்ணா ஆவடி காங்கிரஸுக்கு விஜயம் செய்து விட்டு, மூன்று நாட்கள் அங்கேயே முகாம் போட்டிருந்ததின் பயன்தான் அவனுடைய விசித்திரத் தோற்றத்துக்குக் காரணம் என்று அறிந்தேன். ஆவடி செம்மண் புழுதியை நம்மிடம் வந்து உதிர்த்துத் தள்ளிவிட வேண்டும் என்ற பரந்த நோக்கத்துடன்தான் குப்பண்ணா வந்திருப்பதால், அவன் ஆவடி விஜய விமரிசனத்தைச் சற்றுக் கண்ணை மூடிக் கொண்டு (புழுதி கண்ணில் படாமல்) காதைக் கொடுத்துக் கேட்போம்:—

"அட! அட! அடா! அது என்ன காட்சி! என்ன காட்சி! இந்த மாதிரி காங்கிரஸ் அனுபவம் இந்த அறுபது வருஷங்களில் நடந்ததே இல்லை என்று ஒருமிக்கச் சொல்லுகிறார்கள். ஏதேது! இது போல் பிரம்மாண்டமாக, பிரமாதமாக, காங்கிரஸ் வேறு எங்கேயும் நடத்த முடியாது என்கிறார்கள்!

"தஞ்சாவூர் பெரிய கோயில் கோபுரத்தையும், மதுரை மீனாட்சியம்மன் கோயிலையும் கொண்ட தமிழ் நாட்டில் ஒரு சத்தியமூர்த்தி நகரம் நிர்மாணம் செய்தது பிரமாதமில்லை. தமிழன் செய்யக் கூடிய சாதனைகள் அன்றும் மகத்தானவைதான், இன்றும் மகத்தானவைதான்..."

("சரி, உன்னுடைய பிரசார பிரசங்கத்தை நிறுத்திக் கொண்டு விஷயத்துக்கு வா, குப்பண்ணாஜி!")

"...விஷயத்துக்குத்தான் வருகிறேன். அப்படிப் பிரமாதமாக நிர்மாணித்திருந்தார்கள், சத்தியமூர்த்தி நகரை. அங்குள்ள சில கட்டட வசதிகளைப் பயன்படுத்தினது மட்டுமில்லை; ஒரு சிறு தேவேந்திர பட்டணமே ஆவடியில் அவதரித்திருந்தது. ஆகா! அந்த காங்கிரஸ் மகாசபை மண்டபத்து வாசல் கோபுரத்தைச் சொல்லவா! அந்தப் பிரம்மாண்ட துவார பாலகர்களைச் சொல்லவா! இரு பக்கங்களிலும் காங்கிரஸ் சரித்திரத்தில் அந்த ஸ்தாபனத்தை உருவாக்கிய மகான்களைச் சித்திரித்திருந்த ஓவியங்களைச் சொல்லவா! 'எம்மதமும் சம்மதம்' என்ற நமது மேலான சமதர்மச் சின்னங்களாகக் கிழக்கிலும் மேற்கிலும் அமைந்திருந்த மசூதி, மாதா கோவில்களைச் சொல்லவா! அல்லது நமது நாட்டின் விடுதலை வீரர்களும் தலைவர்களும் வீற்றிருக்க அலங்கரிக்கப்பட்டிருந்த அந்த அழகிய மண்டபத்தைச் சொல்லவா! புதிய காங்கிரஸ் அதிபர் தேபர், பேரறிஞர் ராஜாஜி, மாந்தருள் மாணிக்கமாக விளங்கும் ஜவாஹர்லால்ஜி முதலிய பல தலைவர்களும் காட்சியளித்த அந்த மேடையைச் சொல்லவா......!"

("அதுதான்... சொல்லிக் கேட்டாகி விட்டதே! இந்த விஷயங்கள் பத்திரிகைகளில் கடச்கட்டப் படித்து ஜீரணித்தாகி விட்டதே! மேலே உன் அனுபவத்தைச் சொல்லு, குப்பாஜி!")

"...அனுபவமா! ஒரு மனிதன் வாழ்க்கையில் பெறுவதற்கரிய அனுபவம் அப்பா! ஆவடி. ஆமாம்... முதல் நான் பார்க்க வேண்டுமே.

வங்காள விரிகுடாவே புழலேரியில் வந்து விழுகிறதோ என்றிருந்தது. அப்படி அலே அலேயாக ஜனத் திரள் — ரயில்களிலும் பஸ்களிலும் வந்து குவிந்தவாறு இருந்தார்கள்.

"மூன்று லக்ஷம் ஜனங்களுக்கு மேல் இருக்கும் முதல் நாள் (21-ந் தேதி) கூட்டமே! இருபதினுயிரம் கார்கள் இருக்கும்; எல்லாம் ஆவடியில் வந்து குவிந்தன. அகலமாக, மேடு பள்ளமில்லாமல் வெகு ஜோராகப் போடப்பட்டிருந்த ஆவடி ரஸ்தாவில் சூரிய கிரணங்கள் பட்டுப் பளபளவென்று மின்னும் கார்கள் சாரி சாரியாக இடைவெளி யில்லாமல் போய்க் கொண்டிருந்தன. இரும்புச் சுவர் ஊர்ந்து செல்வதுபோல் இருந்தது. 'மோட்டார் கார் காங்கிரஸ் ஒன்றுகூட இங்கு நடைபெறுகிறது போலிருக்கிறதே!' என்ருர் ஒரு நண்பர். சென்னையிலிருந்து பிற்பகல் இரண்டு மணிக்குக் காரில் புறப்பட்ட புண்ணியவான்கள் அன்று சத்தியமூர்த்தி நகரம் சேர்வதற்கு நாலு மணிக்கு மேல் ஆகிவிட்டது. அன்று தாமதித்துப் புறப்பட்டவர்கள் மகாசபை முடிந்த பிறகுதான் வந்து சேர்ந்தார்கள். கீழ்ப்பாக்கம் குழாய்த் தண்ணீர்த் தொட்டியிலிருந்து திருமுல்லைவாயில் வரையில் சற்று சுமாராகக் கார்கள் உருண்டு கொண்டிருந்தன. ஆனல் கடைசி இரண்டு மைல் அன்று ஊர்ந்து ஊர்ந்துதான் ஊர்வலமாகச் செல்ல வேண்டி யிருந்தது.

"இரவில் அந்தத் தீபாலங்காரத்தைப் பார்த்திருக்கவேண்டுமே! ஆகா! என்ன கண்கொள்ளாக் காட்சி தெரியுமா! சத்தியமூர்த்தி நகர கோபுரம் பக்கத்தில் இருந்த நிஜக்கோயில் கோபுரத்தைத் தூக்கியடித்து விட்டது!"

("அதென்ன 'நிஜ'க் கோவில் 'பொய்'க் கோவில் என்று இரண்டு!......")

"காங்கிரஸ் நகர கோபுரம் அப்படி நிஜக் கோவில் கோபுரத்தைவிட நன்ருக இருந்தது என்றேன். ஜெமினி சிற்பிகள் நிர்மாணித்தது...... எனக்கு ஒரே ஒரு வருத்தம்தான். இவ்வளவு அழகிய ஒரு கோபுரம் அந்த இடத்திலேயே எப்போதும் இருந்தால் எவ்வளவு நன்ருக இருக்கும்! காங்கிரஸ் அறுபதாம் ஆண்டு விழா நம் தமிழ் நாட்டில் நடந்ததற்கு ஓர் அழியாச் சின்னமாக இருந்திருக்குமே! ஆனல் அந்தக் கோபுரம் கல் கோபுரமில்லே; மழையில் கரைந்து போய் விடக் கூடியது.

"யார் என்ன சொல்லட்டும்! எந்த விதத்திலும் இந்த காங்கிரஸ் மகாசபைக் கூட்டம் அதி விசேஷம் பொருந்தியதுதான்! ஆமாம். தீர்மானங்களைப் பாரேன்! சோஷலிஸ இலட்சியத் தீர்மானத்தை எடுத்துக் கொள்! காங்கிரஸையே ஒரு படி முன்னேறச் செய்கிறதா இல்லையா! அதற்கென்ன! எல்லாவற்றிற்கும் ஏதாவது தப்பு கண்டு பிடிக்கும் குறை சாமிகள், 'கூ! கூ! எல்லாம் கெட்டுப் போச்சு! சோஷலிஸமாவது! டொமாட்டோ ரஸமாவது! அதெல்லாம் நம்ம ஊரில் நடக்குமா, ஸார்!' என்று ஈஸி சேரில் படுத்துக்கொண்டு, முணு முணுப்பார்கள்! சோஷலிஸம் வரத்தான் போகிறது; வந்துதான் ஆகவேண்டும். இல்லையா! இதுவரையில் காங்கிரஸ் அரசியல் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டு, சுதந்திரத்தை நாட்டுக்குச் சம்பாதித்துக் கொடுத்தது; ஒப்புக் கொள்கிருயா இல்லையா! சரி! அடுத்தது நமது பொருளாதார நிலை சீர்ப்பட வேண்டுமா, இல்லையா! அதற்கு வழி தேடவேண்டும்...நாட்டில் வேலையின்மை, ஏழைமை, வறுமை ஒழிய வேண்டுமா வேண்டாமா, சொல்! இதற்கு சோஷலிஸம்தானே சிறந்த வழி! அதைத்தான் அனுபவசாலியும் தீர்க்கதரிசியுமான நம் ஜவாஹர்ஜி கண்டு கொண்டார். உலகத்திலேயே சோஷலிஸம் ஒவ்வொரு உருவத்தில் பரவி வருகிறது என்பதை உணர்ந்தார். ஆனல் நம் நாட்டுக்கு உகந்த முறையில்தான் அந்த மருந்தை நாம் சாப்பிட வேண்டும் என்றும் அவருக்குத் தெரியும்.

"மேற்கத்தி முறையும் நமக்குச் சரியில்லே; கிழக்கத்தி முறையும் சரியில்லே. முக்கியமாக, காந்திஜியின் அஹிம்சா முறைதான் நம் நாட்டுக்கு ஏற்றது. அதை யொட்டியே பொருளாதார மாறுதல் இருக்க வேண்டும். அதனுல்தான் சோஷலிஸக் கொள்கையை நமக்குத் — தேவையான வடிவில்—ஜவாஹர்ஜி உருவாக்கிக் கொடுத்திருக்கிருர். "புரட்சி" "கிரட்சி" என்று வல்லினம் போட்டுப் பேசுவதெல்லாம் வறட்டுப் பேச்சு என்பதை ஜவாஹர்ஜி இந்த சோஷலிஸக் கொள்கை மூலம் எடுத்துக் காட்டி இருக்கிருர்.

"சரி; அடுத்தது கல்வியைப் பற்றிய தீர்மானத்தைப் பார்! காந்திஜியின் அடிப்படைக் கல்வித் திட்டத்தைத் தீவிரமாக எல்லா மாகாணங்களிலும் விரைவில் நிறைவேற்ற வேண்டுமென்பது இதன் நோக்கம். ஜவாஹர்ஜி என்ன சொன்னர் தெரியுமா!

"'நமது குழந்தைகளை இளமையிலிருந்தே உழைப்பிலும் வேலையிலும் ஊக்கப்படுத்த வேண்டும்; வெறும் ஏட்டுப் படிப்பில் பிரயோசனமில்லே. உழைப்பை யொட்டி அமைய வேண்டும்' என்று சொல்கிருர். ராஜாஜியும் அதைத்தான் முன்பு சொன்னர். ஆனல் சிலர் உழைத்து உற்பத்தி செய்து கொண்டிருக்க, வேறு சிலர் உழைப்பில்லாமலே உண்டு களிப்பதே மேல் என்று இருக்கும் நிலை ஒழியவேண்டும் என்ருர் நேருஜி. 'சோம்பலை வெறுக்கிறேன்; நோயைக் கண்டால் எனக்குப் பிடிக்காது. நான் நோயாளி, பலஹீனன் என்று சொல்லிக் கொள்வது பெருமை என்று சிலர் நினைக்கிருர்கள்; நான் அதை வெறுக்கிறேன். நமது மாணவர்கள் நிமிர்ந்து நடக்க வேண்டும்; கூன் போட்டு நடந்தால் அதைவிட வெறுக்கத் தக்கது வேறில்லை. சுறு சுறுப்பாக இருக்க வேண்டும்' என்றெல்லாம் விளாசினர். ஏன், அவரே ஒரு சவால் விட்டாரே! 'ஓட்டப் பந்தயம், குதிரை சவாரி, நீச்சல் எதற்கு வேண்டுமானலும் நான் இதோ தயார். யார் வருகிறீர்கள் போட்டிக்கு!' என்ருர் அந்த அறுபத்தைந்து வயது வாலிபர்! அந்த இரண்டு லட்சம் ஜனங்களில் அவர் சவாலே ஏற்க ஒருவரும் முன் வரவில்லே.

"பொருளாதாரத் தீர்மானத்தைத்தான் எடுத்துக் கொள்ளேன். இது சோஷலிஸ இலட்சியத் தீர்மானம் போல் ஒரு படி காங்கிரஸை முன்னேற்றிச் செல்கிறது இல்லையா!

"இன்னொரு முக்கிய தீர்மானத்தைக் கவனித்தாயா! அதுதான் ஜவாஹர்லால்ஜி பெருமையையும் காங்கிரஸ் பெருமையையும் காட்டுகிறது. காங்கிரஸைப் பரிசுத்தப்படுத்த வேண்டுமென்பது உனக்குத்தான் தெரியுமே! இப்போதெல்லாம் 'கதர் குல்லாய்' என்ருல் ஏளனத்துக்கு இலக்கு; ஊழலுக்கும் இருப்பிடம் என்ருகி விட்டதே!"

["அதற்குத்தான் உன் குல்லாய் தலைமேல் இல்லாமல் பைக்குள் கிடக்கிறதோ!"]

"இந்த நிலைமையை மாற்றக் காங்கிரஸ்காரர்களிடையே தூய்மையை நிலைநாட்ட வேண்டுமென்பது ஜவாஹர்லால்ஜியின் தீவிர நோக்கம். இப்போது காங்கிரஸ் தலைவராக வந்திருக்கும் தேபர்ஜி ஒரு சிறந்த காங்கிரஸ் தொண்டர்;

லக்ஷியத்தில் ஊறியிருப்பவர் என்று சொல்கிறார்கள். அவருடைய தலைமையில் ஜவாஹர்ஜியின் நோக்கம் நிறைவேறிக் காங்கிரஸில் சென்ற சில வருஷங்களில் வந்து அடைந்திருக்கும் மாசுகள் நீங்கி, மீண்டும் அந்த ஸ்தாபனம் காந்திஜி காட்டிய நெறி முறை நழுவாமல் நடக்கும் என்று எதிர்பார்க்கலாம். அன்று காந்திஜி காங்கிரஸுக்கு ஆத்ம பலம் கொடுத்தது போல் இன்று ஜவாஹர்ஜி இருக்கிறார். அதனால் நிச்சயமாக இந்தத் தீர்மானத்தின் நோக்கம் நிறைவேறும் என்பதில் சந்தேகமில்லை."

("அது சரி! ஆவடியில் உன் வரையில் எவ்வளவு இட்லி துவம்சம்! எவ்வளவு காலன் காப்பி காலியாயிற்று...!")

"அதை ஏன் கேட்கிறாய்...முதல் நாள் எல்லாம் ஒரு க்ஷணப்பொழுதில் 'ஸ்டாக் எல்லாம் அவுட்!' குடிக்கத் தண்ணீர் அகப்பட்டால் போதுமென்று ஆகிவிட்டது. அதிகாலையிலிருந்து டிபன் பாக்ஸும் கூஜாவுமாக வந்தவர்கள் கொஞ்சம் தீர்க்கதரிசிகள். கடைசி இரண்டு நாட்கள் பரவாயில்லை... கடைசிநாள் மேடையில் உட்கார்ந்திருந்தேனா!..."

("ஓகோ! ஒரு படி உன் விஷயத்திலும் முன்னேற்றம்!")

"ஒரு தொண்டர் எனக்கும் ஒரு கப் காப்பி கொடுத்தார்; நானும் ஒரு தலைவர் என்ற எண்ணத்திலோ என்னமோ!...மூவாயிரம் பேர் உட்காரக் கூடிய மேடையில் முதல் இரண்டு நாள் எள்ளைப் போட்டால் எள்ளு விழாது. அநேகமாக ஊரில் எனக்குத் தெரிந்தவர்கள் எல்லாம் ஒரு அடையாளச் சீட்டை மாட்டிக்கொண்டு மேடையில் காட்சியளித்தார்கள். பலர் 'நன்கொடையாளர்'களாகக் காட்சியளித்தார்கள். அவர்களில் சிலரை எனக்குத் தெரியும். ஒருவேளை அந்தச்சீட்டு அவர்களுக்கு நன்கொடையாகக் கிடைத்திருக்கலாம்!..."

("உனக்கு மேடைச் சீட்டு எப்படிக் கிடைத்தது! இல்லை தப்பு! நான் கேட்கவில்லை...!")

"இன்னும் இதேபோல் ரக ரகமான 'சீட்டாளி'கள் மேடைக்காட்சியளித்தார்கள். வைரத்தோடுகளுக்கும், பட்டு ஜரிகைப் புடவைகளுக்கும் கேட்க வேண்டுமா! மேடைக்கு அவை வர்ணம் தீட்டி மினுமினுத்தன. ஆண்களில் பலர் விசித்திர ஆபரணங்களைக் கழுத்தில் மாட்டிக் கொண்டு இங்கு மங்கும் ஓடிக் கொண்டிருந்தார்கள். இவர்கள் 'காமிரா'ண்டிகள் என்று தெரிய வந்தது. இவ்வளவு பேர் புகைப்படம் பிடிக்கப் புறப்பட்டால் படத்தில் விழுவதற்கு ஆள் இல்லாமல் போய் விடுமே என்று எனக்கு ஏக்கமாகத்தானிருந்தது."

["கூடிய வரையில் நீ எல்லா காமிரா கண்களிலும் படும்படியாகத்தான் இருந்திருப்பாய்!"]

"ஆனால் பல சமயங்களில் படங்களில் தொண்டர்களைத் தவிர வேறு யாரும் விழுந்திருக்க முடியாது. எங்கு பார்த்தாலும் நீல நிஜார், வெள்ளை சொக்காய்! ஒன்று சொல்ல வேண்டும். காங்கிரஸ் தொண்டர்கள் அரும்பாடு பட்டார்கள். ஓரிரண்டு மாதத்துக்குள் பயிற்சி பெற்று இவ்வளவு திறமையாக ஏராளமான கூட்டத்தைக் கட்டுப்பாடாக இருந்து சமாளித்து அவ்வப்போது ஏற்படும் நெருக்கடிகளையும் தள்ளல்களையும் சமாளித்து மிகவும் பொறுமையாக நடந்து கொண்டார்கள்.

"ஆனால் பாதையில்தான் போலீஸ் பாடு பெரும்பாடாகி விட்டது. முதல் நாள் அந்த கார் நெருக்கடியை எப்படித்தான் சமாளித்தார்களோ பாவம்......முதல் நாள் கார் நெருக்கடியில் நமது ஜவாஹர்ஜி காரே மாட்டிக்கொண்டு தாமதமாகி விட்டது. இருபத்தையாயிரம் கார்களின் போக்குவரத்தைச் சமாளிப்பதென்றால் இலேசான காரியமா! இவ்வளவு தூரம் ஒருவித விபத்து ஒன்றுமில்லாமல் அவர்கள் சமாளித்ததே பெருங் காரியம் இல்லையா! மோட்டார், பஸ், போக்குவரத்து கண்காணிப்போடு மட்டுமில்லையே! ஜேப்படிக்காரர்களையும் முடிச்சவிழ்க்கிகளையும் ஒரு கண் பார்க்க வேண்டியிருந்தது. கூட்டத்தில் பிரிந்த குடும்பங்களைச் சேர்த்து வைக்க வேண்டியிருந்தது. வழி தவறிக் காணமற்போன குழந்தைகளையும் பெண்களையும் கண்டு பிடித்து மீண்டும் அவரவர்களிடம் சேர்க்க வேண்டியிருந்தது......"

("சே! சே! அரேஞ்ச்மெண்ட் எல்லாம் ஹோப்லஸ். இதெல்லாம் இப்படிச் செய்திருக்க வேண்டும், அப்படிச் செய்திருக்கக் கூடாது என்று வழக்கமாகச் சிலர் சொல்லிக் கொண்டுதான் இருப்பார்கள். நீ என்னடாவென்றால் ஒரே புகழ்மாலையாகச் சூட்டுகிறாயே, எல்லோருக்கும்!")

"சூட்ட வேண்டிய புகழ் மாலையைத்தான் சூட்டுகிறேன். அதற்கென்ன! இப்பொழுதும் குறை சொல்லாதவர்கள் இல்லை யென்று நினைக்கிறாய்! அந்தக் கும்பல் எப்போதும் இருக்கும். 'இவ்வளவு வாலண்டியர்கள் இருந்து என்ன! அவர்கள் ஒன்றும் சரியாகவே எங்களைக் கவனிக்கவில்லை!' 'அன்றைக்கு ஒரு வாலண்டியரை வெற்றிலைபாக்கு வாங்கி வா என்றேன். பாருங்களேன், முடியாது என்று விட்டான்!' 'சே! சே! சுத்த மோசம். ஒருமேடை பாஸ் வைத்திருந்தேன் என் 'பேமிலியை' உள்ளே விடமாட்டேன் என்று கைகோத்துத் தடுத்து விட்டார்கள், இந்தப் பொல்லாத பெண் தொண்டர்கள்! ஹூம்! அதற்காக நம் குடும்பத்தைத் தெருவில் விட்டுவிட முடியுமா!' 'அந்த கோபுரம் பார்த்தீர்களா! தெற்குப் பக்கம் வைத்திருந்தது. இது கூடவே கூடாது! அதைக் கிழக்கே பார்த்து வைத்திருக்க வேண்டும்! அதற்கென்ன அப்படி பச்சை கலரா அடிக்கிறது...!' 'ஸீமே செம்மண்ணிலே உட்கார்ந்து ஜரிகை வேஷ்டியெல்லாம் அழுக்கா போச்சே! லாண்டர் சார்ஜ் இவா தருவாளா! ஸீமே நல்ல பத்தமடை பாய் விரிக்கக் கூடாது!'—இப்படி எல்லாம் குறை குற்றம் சொல்கிறவர்கள் இருக்கத்தான் செய்வார்கள். ஆனால் ஒன்று சொல்கிறேன் கேள். வெளியூரிலிருந்து வந்த அத்தனை பேரும் இவ்வளவு நல்ல ஏற்பாடுகளை பிரம்மாண்டமான அளவில் செய்ததைக் கண்டு மூக்கில் விரல் வைத்து ஆச்சரியப்பட்டார்கள். நமது தமிழ் நாட்டையும் காங்கிரஸ் ஏற்பாடுகளைச் செய்த தலைவர்களையும் தொண்டர்களையும் போற்றாதவர்கள் இல்லை. நேருஜி, தேபர்ஜி முதல் எல்லோரும் ஒருவாய்ப்படத் தமிழ் நாட்டுத் திறமையைக் கண்டு வியந்து மெச்சிப் போனார்கள். நேருஜியே சொன்னாரே! 'சென்னைதான் தென்னிந்தியத் தலைநகரம்! இங்கு எல்லாம் திறமையாக நடத்தி விட்டீர்கள்' என்று ஸ்ரீ காமராஜ் முதலிய எல்லோரையும் புகழ்ந்து விட்டுப் போனார். தேபர்ஜி அப்படியே அதிசயத்திலும் ஆனந்தத்திலும் மூழ்கி 'சென்னைக் காட்சிகள் என் மனத்தை விட்டு என்றும் அகலாது' என்று போற்றினார். இவர்கள் வெறும் உபசாரமாகச் சொல்பவர்களா!

("அதிருக்கட்டும் குப்புஜி! இதில் எல்லாம் நீயும் நானும் அடைந்த பயன் என்ன!")

"நீகூட இப்படிக் கேட்கிறாயே! எனக்கு வெட்கமாக இருக்கிறது. நீயும் நானும் அடைந்த பயன் சரித்திரப் பிரசித்தமான ஒரு மாபெரும் நிகழ்ச்சி நம் ஊரில் வெற்றிகரமாக நடந்ததே

அந்தப் பெருமையில் ஸ்ரீ காமராஜருக்கும் மற்றவர்களும் ஒரு பக்கம் பெருமை இருக்க, உனக்கும் எனக்கும் அதில் கட்டாயம் பங்கு, உரிமை உண்டப்பேன்! இல்லையா! நினைத்துப் பார்! உனக்கே இதெல்லாம் ஒரு பெருமையாக இல்லையா! எங்கும், என்றும் நடந்தேறாத வகையில் இவ்வளவு பெரிய காரியத்தை நம் ஊரில் செய்து ஒருவிதமான விக்னமும் இல்லாமல் மங்களமாக முடித்திருக்கிறோம்! இதில் பெருமையடையாத தமிழன்,—'மதராஸி'—யார் இருக்க முடியும்!

"பத்து லக்ஷம் ஜனங்கள் வந்து குவிந்தார்கள். சும்மா வேடிக்கை பார்க்கவா வந்தார்கள்!"

("நேருஜியையும் தலைவர்களையும் பார்க்க வந்தார்கள்!")

"நேருஜியைப் பார்க்க வந்தார்கள்! உண்மை; அதில் தப்பில்லையே. நேருஜியிடமும் காங்கிரஸிடமும் அவர்களுக்குள் அபார பிரேமையைத் தானே அது காட்டுகிறது. காங்கிரஸ் பக்தியும் தேசிய உணர்ச்சியும் இன்னும் குன்றவில்லை என்பதற்கு வேறு என்ன அத்தாட்சி வேண்டும் மிஸ்டர்!"

("இவ்வளவு விமரிசனம் செய்தாய்! பிரமாதமாக எல்லாவற்றையும் வர்ணித்தாயே. கலை நிகழ்ச்சிகள் வேறு ஆவடியில் நடந்தனவாமே! அதை ஏன் விட்டு விட்டாய்!")

"ஓ! அதுவா! கலை நிகழ்ச்சிகளை நான் அதிகமாகக் கவனிக்க முடியவில்லை. ஆனால் தினசரி இரவு அதுவும் பிரமாதமாக நடந்தது. ஒரே நாடக, நாட்டிய, இசைக் கதம்ப விருந்துதான்! வந்தவர்கள் திண்டு முண்டாடி விட்டார்கள். பதினாயிரக் கணக்கான ஜனங்கள் நெருக்கி யடித்துக் கொண்டு பாதிராத்திரி வரையில் நம் ஊர் நட்சத்திர நாட்டியங்களையும், . நாடகங்களையும் கண்டு களித்தார்கள். அன்று நம் முதல் மந்திரியும், காங்கிரஸ் தலைவருமே இடமில்லாமல் திண்டாடிப் போய் விட்டார்களாம். நானே அதிகமாக அங்கே போய்ச் சரிவர அனுபவிக்க முடியவில்லை. அப்படிக் கூட்டம்...

"இருந்தாலும் நம் ஊர் கலைக் கதம்பத்தையும் வந்தவர்கள் ருசி பார்த்துப் போயிருக்கிறார்கள்..."

("அதெல்லாம் சரி! இவ்வளவு ஏற்பாடுகளும் இவ்வளவு சிறப்பாக நன்றாக நடத்தி வைத்ததற்கு நீ யாருக்கு முதல் மார்க் கொடுக்கப் போகிறாய்!")

"ஏன்! எல்லோரும் தான் இதில் உழைத்தார்கள். பிருத்வி இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியார் என்ன, டி. வி. எஸ். கம்பெனியார் என்ன, இந்தியன் எக்ஸ்பிரஸ் குழுவினர் என்ன எல்லோரும் இராப் பகலாக உழைத்தார்கள். இதில் முதல் மார்க் யாருக்காவது கொடுக்க வேண்டும் என்றால் ஒரு ஆசாமிக்குத்தான் அதைக் கொடுக்க வேண்டும். அவர் தான் எல்லா பொறுப்பையும் எடுத்துத் தலைமேல் போட்டுக் கொண்டு இவ்வளவு திறமையான ஏற்பாடுகளுக்கெல்லாம் காரணம்..."

"ஜனநாயக சமுதாயத்தில், சோஷலிஸ இலட்சிய சூரியன் உதயமாகி இருக்கும்போது ஒரு தனிப்பட்ட நபருக்குக் கொண்டு போய் மகுடம் சூட்டுகிறாயே! அந்தப் பெரியவர் யாரப்பா......!" என்று பெயரைக் கேட்பதற்குள் "அர்ஜெண்டா போக வேண்டும்! சுதந்திர தினக் கொண்டாட்டக் காட்சிகளைப் பார்த்து விட்டு, எக்ஸிபிஷனில் வேலை யிருக்கிறது" என்று குப்பண்ணா குல்லாயை உதறிப் போட்டுக் கொண்டு கிளம்பி விட்டான்.

குப்பண்ணாவின் ஆவடி விஜயம் இத்துடன் இப்படி வெற்றிகரமாக முடிந்தது.

# சரித்திரப் புகழ் பெற்ற சத்தியமூர்த்திநகர்

சென்னைக்கு அருகில், சத்தியமூர்த்தி நகரிலே கூடிய காங்கிரஸ் மகாசபை பலவிதத்திலும் சரித்திரப் புகழ் வாய்ந்தது. அங்கு நிறைவேறிய தீர்மானங்கள் பாரத நாட்டின் எதிர்கால சுபிட்சத்தையே உருவாக்கும் உன்னதத் தீர்மானங்கள். மகாநாட்டின் முதல் தீர்மானம், மறைந்த பெரியார்களுக்கு மரியாதை தெரிவிக்கும் வகையில் அமைந்திருந்தது. தேசத்தின் பல பகுதிகளிலே காங்கிரஸ் கட்சியில் நின்று அரும்பணி புரிந்த தியாகசீலர் ரபி அஹமத் கித்வாய் உள்பட 35 பேர் மறைந்தமைக்கு அநுதாபம் தெரிவித்தது. இந்தத் தியாகசீலர்களில் அமரர் கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் மறைவுக்கும் அகில இந்திய காங்கிரஸ் ஸ்தாபனம் அனுதாபம் தெரிவித்துக் கொண்டது.

ஆவடி தீர்மானங்களில் தேசத்தின் எதிர்காலத்தை நிர்ணயிக்கும் வகையில் அமைந்த முக்கியமான தீர்மானம் சோஷலிஸப் பாணியில் எதிர் காலம் அமையவேண்டும் என்பதேயாகும்.

நம் நாட்டில் போர்ச்சுகல் ஆட்சியின் கீழுள்ள திட்டுகள் விரைவில் பாரதத்துடன் சேரும் என்று நம்பிக்கை தெரிவிக்கும் தீர்மானம் நிறைவேறியது. பிரஞ்சு சர்க்கார் தங்கள் உடைமைகளை விட்டுச் சென்றதற்கு நன்றியும் தெரிவித்தது.

நமது சர்க்காரின் வெளிநாட்டுக் கொள்கையை மற்றோர் தீர்மானம் ஆதரித்தது. இதை ஆமோதித்த ராஜாஜி, அணுகுண்டு ஜலவாயு குண்டுகளை வைத்திருக்கும் நாட்டினரினால் உலக அமைதிக்கு ஏற்படும் பங்கத்தைப் பற்றிப் பின்வரும் உதாரணம் மூலம் விளக்கினார். "விஷப் பாம்பைப் பெட்டியில் போட்டுக் கயிற்றினால் கட்டி வைக்கப் பட்டிருக்கிறது. அந்தப் பெட்டியைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு நிம்மதியாகத் தூங்க முடியுமா! ஒரு எலி வந்து கயிற்றைக் கடித்து விட்டால்விஷப்பாம்பு வெளிப் பட்டு விடாதா!" என்றார்.

இந்தப் பிரச்னை சம்பந்தமாகக் காங்கிரஸ் சர்க்கார் கடைப் பிடித்து வந்துள்ள கொள்கையே கொள்கை என்று ஆமோதித்துத் தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் பயனாக பல அரிய சாதனைகள் சாதித்தமைக்குச் சர்க்காருக்குக் காங்கிரஸ் நன்றி தெரிவித்தது. அது மட்டுமன்றி சோஷலிஸ அடிப்படையில் எதிர்கால திட்டத்தை வகுத்தாலும், தனி நபர் முயற்சிகளுக்கும் முக்கியத்துவம்அளிக்கப்படும் என்று உறுதி கூறும் வகையில் ஓர் தீர்மானம் அமைந்திருந்தது.

காங்கிரஸ் ஸ்தாபனம் தியாகத்தில் வளர்ந்ததாகும். சுதந்திர லட்சியத்தைக் கொண்டு காங்கிரஸில் சேர்ந்து மாபெரும் தியாகம் புரிந்தவர்களின் தொகை எண்ணி முடியாது. சுதந்திரம் பெற்ற பின் தியாகம் புரிந்த காங்கிரஸ்காரர்களிடையே பதவி ஆசையும் மோகமும் ஏற்படலாயின. அதனால் காங்கிரஸின் செல்வாக்குக் குறைய ஆரம்பித்திருக்கிறது. இதை அகற்றித் தூய்மைப் படுத்தும் தீர்மானம் ஒன்றும் நிறைவேறியிருக்கிறது. இது உண்மையான காங்கிரஸ் பக்தர்களுக்கு மிக்க உவகை யளிக்கும்.

காங்கிரஸ்காரர்கள் நிர்மாண வேலைகளில் ஈடுபட வேண்டும் என்று மகாத்மா காந்தி கூறி வந்தார். அதை மீண்டும் வற்புறுத்தித் தீர்மானம் நிறைவேற்றப் பட்டிருக்கிறது. அதில் வினோபாஜியின் பூதான இயக்கத்துக்கும் ஆதரவு அளித்து வேலை செய்ய வேண்டும் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

மாதர்களுக்கும் குழந்தைகளுக்கும், க்ஷேமாபிவிருத்தியை முன்னிட்டு சர்க்கார் இயற்றிவரும் சட்டங்களுக்கு ஆதரவு அளிப்பதோடு, பெண்களுக்குச் சொத்துரிமை வழங்க வேண்டும் என்று மற்றோர் தீர்மானம் கூறுகிறது.

ஆதாரக் கல்வி சம்பந்தமான தீர்மானம் ஒன்று நிறைவேற்றப் பட்டது. அதைப் பிரேரேபித்த ஜவாஹர் பின்வருமாறு கூறினார்:

"சரீர உழைப்பு என்பது மட்டமானதென்றும், தாழ்ந்த வகுப்பினருக்குத்தான் ஏற்றதென்றும் இந்த நாட்டில் வெகு நாட்களாக ஒரு எண்ணம் இருந்து வருகிறது. இந்த மனப்பான்மையை விட அதிக தீங்கு விளைவித்திருக்கக் கூடியது வேறு ஏதாவது இருக்குமா என்பது எனக்குச் சந்தேகமே."

—இப்படி வலிமையும் சக்தியும் மிக்க மொழிகளில் பண்டித நேரு கூறியிருப்பதை நம் எதிர்கால பாரதத்தை உருவாக்கும் பொறுப்பிலுள்ள ஒவ்வொருவரும், முக்கியமாகக் கல்வித் துறையில் ஈடுபட்டுள்ளவர்களும் திட்டம் வகுப்பவர்களும் உய்த்துணர வேண்டும்.

மிகவும் கோலாகலமாக நடந்த இந்த காங்கிரஸ் மகாசபையின் வெற்றிக்கு முக்கிய காரணஸ்தர் நமது சென்னை முதன் மந்திரி ஸ்ரீ காமராஜ் அவர்களே. அவர் புரிந்த அரும் பணியைப் பற்றி "ஒரே சமயத்தில் பல இடங்களில் காட்சி அளிப்பவராகத் திகழ்ந்தார். சென்னை முதன் மந்திரி ஸ்ரீ காமராஜ் எல்லா இடங்களையும் சுற்றி யலைந்து எல்லாக் காரியங்களையும் முன்னின்று கவனித்து ஏற்பாடு செய்து உதவி புரிந்தார்......" என்று நேருஜியே பாராட்டியிருக்கிறார். இதை விட உயர்வாக என்னதான் சொல்ல முடியும்!



முதன் மந்திரி ஸ்ரீ காமராஜ்

# லண்டனுக்கு

## போகவர உள்ள டூரிஸ்ட் வகுப்பு கட்டணம்






# இதுவே தருணம், டூரிஸ்ட் வகுப்பில் பிரயாணம் செய்து ரூ. 599 மிச்சமாக்குங்கள்

## ரோம் . . . ஜெனிவா . . . பாரிஸ் . . . டஸல்டார்ப் . . . மற்றும் இதர ஐரோப்பிய நகரங்களுக்கு வாராந்தர கான்ஸ்டலேஷன் ஸெர்விஸ்

குறைக்கப்பட்டுள்ள டூரிஸ்ட் வகுப்பு கட்டணம் இப்பொழுது உங்கள் ஐரோப்பா விஜயத்தை எவ்வளவோ சுலபமாக்குகிறது. ஐரோப்பாவில் புதிய வியாபாரத் தொடர்புகள் ஏற்படுத்திக் கொள்வது, பழைய தொடர்புகளை வலுப்படுத்துவது, சௌமியமான ரிவீரா வெய்யிலின் சுகம் அனுபவிப்பது, இங்லேண்டில் சம்பிரதாயமான கிறிஸ்துமஸ் பண்டிகை கொண்டாடுவது . . . எல்லாம் உங்களது குறுகிய விடுமுறை காலத்திற்குள்ளேயே சாத்தியந்தான்!

ஏ. ஐ. ஐ. கான்ஸ்டலேஷன்களும் சூப்பர் கான்ஸ்டலேஷன்களும் லண்டனுக்கு மிக துரிதமாயும் மிகச் சௌகரியமாயும் பிரயாணம் செய்ய வசதியளிக்கின்றன. இதற்குள்ளாகவா வந்து விட்டோம் என்று தோன்றும்படி, அவ்வளவு சீக்கிரம் சென்னையிலிருந்து புறப்பட்ட புதுமையுணர்ச்சி குறையுமுன் போய்ச் சேர்ந்து விடுவீர்கள். இவ்விசேஷ சலுகையை பயன் படுத்திக் கொள்ளத் தவறாதீர்கள் — இன்றே உங்கள் பிரயாண ஏஜண்டை கண்டு ஆலோசியுங்கள்!

குறிப்பு: குறைக்கப்பட்ட கட்டணம் பிப்ரவரி 28வ. வரை அமுலிலிருக்கும்.

# ஏயர்-இந்தியா இன்டர்நேஷனல்

கலீலி மான்ஷன்ஸ், 35 மவுண்டு ரோடு, மதராஸ் 2. டெலிபோன்: 86194




## 3. குரங்காடுதுறை

கன்னலும் கனிகளும் கணக்கின்றித் தரும் காவிரி நாட்டிலே கவலையின்றிக் குரங்குகள் குதி போடும்; கொஞ்சி விளையாடும். இக் காட்சியைக் கண்டு இன்புற்ற தமிழ் மக்கள் காவிரியாற்றின் இரு துறைகளைக் குரங்கினத்துக்கே உரிமையாக்கி, 'குரங்காடுதுறை' என்று பெயரிட்டனர். பக்தியோடு மாந்தரும் செழிப்புற்று வாழும் அத் துறைகள் தேவாரப் பாமாலை பெற்ற பழம் பதிகளாகும்.

முன்னொரு காலத்தில் வானர நாட்டின் தலைவனாக விளங்கினான் வாலி. அவன் சிறந்த வீரன்; சிவ பக்தன். காவிரிக் கரையில் உள்ள திருவையாற்றிலும், குரங்காடு துறையிலும் அவன் ஈசனை வணங்கினான் என்று தேவாரம் பாடுகின்றது.

"வாலியார் வணங்கி ஏத்தும்
திருவை யாறமர்ந்த தேனே!"

என்று சிறப்பித்தார் திருநாவுக்கரசர். 'காவிரிக் கோட்டம்' என்று பாராட்டப் பெற்றுள்ள திருவையாற்றுக் கோவிலில் ஈசனை வழிபடும் பேறு பெற்ற வானரத் தலைவனை 'வாலியார்' என்று போற்றினார் திருநெறித் தலைவராகிய திருநாவுக்கரசர்.

காவிரியாற்றின் வடகரையில் உள்ள 'குரங்காடுதுறை'யிலும் வாலி ஈசனை வணங்கித் தொழுதான் என்பது திருஞான சம்பந்தர் தேவாரத்தால் தெரிகின்றது.

"கோலமா மலரொடு தூபமும்
சாந்தமும் கொண்டு போற்றி
வாலியார் வழிபடப் பொருந்தினார்"

குரங்காடுதுறை ஈசன் என்பது அவர் திருவாக்கு.

இலங்கையில் அரசு புரிந்த இராவணனை வென்று ஒடுக்கிய வாலிதான் காவிரித் துறை

யில் ஈசனை வழிபட்டான் என்பதும் இனிது விளங்குகின்றது.

"நீலமா மணிநிறத்து அரக்கனை
இருபது கரத்தோடு ஒல்க
வாலினால் கட்டிய வாலியார்
வழிபட மன்னு கோயில்"

என்பது திருஞான சம்பந்தர் வாய் மொழி. தேவாரத்திலே குறிக்கப்பட்ட இவ்வரலாறு இராமாயணத்தில் விரித்துரைக்கப் படுகிறது.

வலிமை சான்ற வாலியை வஞ்சனையால் வெல்லக் கருதினான் இராவணன்; சிவபூசை செய்யும் வேளையில் அவ்வீரனைப் பற்றிச் சிறை செய்தல் எளிது என்று எண்ணினான்; தென் கடற்கரையில் வழிபாடு செய்து கொண்டிருந்த வாலியின் பின்புறமாகச் சென்று இருபது கைகளாலும் அவனைப் பற்றினான். அப்போது வாலியின் சிந்தனை சிறிது கலைந்தது; வீரம் செறிந்த வால் எழுந்தது. பற்றிய பகைவனைச் சுற்றி இழுத்து இறுக்கி முடிந்தது. வலியச் சென்று வாலிலே சிக்கிக் கொண்ட மதியீனத்தை நினைந்து மறுக்கமுற்றான், இராவணன்.

முறையாகப் பூசையை முடித்த பின்னர் இலங்கை வேந்தனைக் கண்ணுற்றான் வாலி. "நிருதர் தலைவனே! நீ என்பால் வந்த காரணம் என்ன?" என்று வினவினான். "வீரனே! உன்னோடு போர் செய்யக் கருதி வந்தேன்; வாலில் அகப்பட்டேன்; வாடி வருந்தினேன்" என்றான் இராவணன். 'போர்' என்ற சொல்லைக் கேட்ட போது பொங்கி நிமிர்ந்தன வாலியின் தோள்கள். உவகைக் கிளர்ச்சியோடு நேர்மையாகப் பேசலுற்றான்.

"மின்ஒளிர் முடியாய்! வென்றவர் தோற்பர்
தோற்றவர் வெல்வர், வெஞ்செருவில்
என்னொடும் பொருவான் இச்சை உண்டாயின்
இராவணா! பொருதி, சண்டு என்ன,
கல்நெடும் தோளாய்! கலங்கினேன் வாலால்
கட்டுண்டு பட்டது கிடக்க
இன்னமும் பொரவோ? இனிச் செரு அமையும்
இன்றுநின் தோழன்நான் என்றான்.

"அரக்கர் தலைவனே! உன் விருப்பத்தின் படியே போர் செய்வோம். வெற்றியும் தோல்வியும் ஒரு வழி நில்லா. வென்றவர் தோற்பதும் தோற்றவர் வெல்வதும் வையத்து இயற்கை. இப்பொழுதே போர் புரிவோம் வருக!" என்று அழைத்தான் வாலி. பேராற்றல் உடைய வாலியை ஒரு காலும் வெல்ல முடியாது என்பதை நன்கறிந்த இராவணன் "ஐயனே! நின் வாலால் கட்டுண்டு நான் பட்டது போதும். இனி எந்நாளும் உன்னோடு போர் புரிவது இல்லை. இன்று முதல் நான் உன் தோழன்" என்றான். அன்று தொட்டு வானர மன்னனும் இலங்கை வேந்தனும் மனமொத்த நண்பராயினர்.

ஆயினும் வாயினாற் சுட்ட வடுப்போல வாலினாற் கட்டுண்ட வசை இலங்கை வேந்தன்பால் நீங்காது நிலைபெற்றது. செருக்குற்ற அம் மன்னனை ஏளனம் செய்யக் கருதிய பகைவர்கள் அந் நிகழ்ச்சியைப் பயன்படுத்துவராயினர். அன்னவருள் ஒருவன் அனுமன்.

இலங்கைக்குத் தூது சென்று, அசோக வனத்தை அழித்து, அரக்கர் சேனையைச் சிதைத்து, அழிம்பு செய்த அனுமனைப் பிடித்து இராவணன் முன்னே நிறுத்தினான் அவன் மைந்தனான மேகநாதன். தருக்கும் செருக்கும் தலைக்கொண்ட அரக்கர் கோமான் அனுமனை இகழ்ந்து நோக்கி "அடே! நீ யாவன்? வாசவனோ? கேசவனோ? வேலனோ? காலனோ? அயனோ? அரியோ? பூமிதாங்கும் நாகமோ? பூசுரர் விடுத்த பூதமோ!" என்று வெடித்த குரலில் வினவினான். இராவணன் வீசிய அடுக்கு மொழிகளை அமைதியாகக் கேட்ட அனுமன் "அரசே! நீ சொல்லிய அனைவரும் அல்லேன். அயோத்தி மன்னனாகிய இராமனுக்கு அடிமை செய்வேன். அனுமன் என்னும் பெயருடையேன். வாலியின் மைந்தனது தூதனாய் இங்கு வந்தேன்" என்று மாற்றம் உரைத்தான். வாலியின் பெயரைக் கேட்டபோது அரக்கனது அசையாத சென்னி அசைந்தது; குழையாத மனம் குழைந்தது. வன்சொல் வழங்கிய

வாய் வணங்கிய வாயாயிற்று. எதிரே நின்ற தூதனை இனிது நோக்கி "வாலியின் மகன் விடுத்த தூதனோ நீ? வலிமை சான்ற வாலி செம்மையாக வாழ்கின்றானா? அவன் அரசாட்சி நன்றாக நடைபெறுகின்றதா?" என்று வினவினான். அவன் அகத்தில் எழுந்த அச்சத்தை முகத்திற் கண்ட அனுமன் "அரக்கனே! அஞ்சாதே! வாலி மண்ணுலகை விட்டு விண்ணுலகம் சென்றான்; இனி வர மாட்டான். அவன் வாலும் அவனோடு போய் விட்டது."

"அஞ்சலை! அரக்க! பார்விட்டு
அந்தரம் அடைந்தான் அன்றே
வெஞ்சின வாலி, மீளான்:
வாலும் போய் விளிந்ததன்றே"

என்று ஏளனம் செய்தான்.

இவ்வாறு அசதியாடிய அனுமன் மீது அருஞ் சீற்றம் கொண்டான் அரக்கர் கோமான். குறும்பு செய்த குரங்கின் வாலைச் சுட்டெரிக்குமாறு பணித்தான். அப் பணி தலைமேற் கொண்ட அரக்கர் அனுமன் வாலில் தீக் கொளுவினர். தீயோர் இட்ட தீயை இலங்கையிலே வைத்து விட்டு இராமனிடம் திரும்பிச் சென்றான் அவ்வீரன்.

அனுமன் வைத்த தியால் இலங்கை மா நகரம் எரிந்து அழிந்தது. இராவணன் மானத்தால் மனம் கொதித்தான். இலங்கை அமைச்சரும் படைத் தலைவரும் வீரம் பேசி மன்னன் மனத்தில் எழுந்த சீற்றத்தை வளர்த்தார்கள். அப்போது அறிஞனாகிய விபீஷணன் பணிவுடன் எழுந்து அறிவுரை பகரலுற்றான்:

"ஐயனே! கட்டும் காவலும் உடைய இலங்கை மா நகரை ஒரு குரங்கு சுட்டெரித்தது என்று சொல்லுதல் சரியோ? அசோக வனத்தில் மனங் கலங்கிக் கண்ணீர் வடிக்கும் மங்கையாகிய சீதையின் கற்புக் கனலன்றோ இந் நகரத்தைச் சுட்டெரித்தது? அன்றியும் உனக்குக் குரங்கினால் கேடு வரும் என்று முன்னமே ஒரு சாபம் உண்டு. வாலியின் வாலால் கட்டுண்டு நீ கலங்கியது அச் சாபத்தை மெய்ப்பித்தது அன்றோ?" என்று வினயமாகப் பேசினான்.

இவ்வாறு பேசிய விபீஷணனை நோக்கி "தம்பி! நீ அறியாது பேசினாய்! வானர வீரனாகிய வாலியிடம் நான் தோற்றேன் என்பது உண்மைதான். ஆனால் எப்படித் தோற்றேன் என்பதை நீ அறியாய். அம்பலத்தில் ஆடுகின்ற ஈசனை வழிபட்டு அரியதோர் வரம் பெற்றிருந்தான் வாலி. அதனை அறியாது அவனோடு போர் புரியச் சென்றேன். இறைவன் அருளிய வரத்தின்படி என் வலிமையின் பாதி அவன்பால் சென்றது. என் வலியும் தன் வலியும் கொண்டு என்னை வென்றான் வாலி.

"எனவே, வரங்கொண்ட வாலிக்குத் தோற்றேனே யன்றி வால் கொண்ட வாலிக்குத் தோற்றேனல்லேன்" என்று மழுப்பினான் இலங்கை மன்னன்.

வாலியின் மைந்தனாகிய அங்கதனும் இராவணனிடம் ஒரு முறை தூது செல்ல நேர்ந்தது. இலங்கையைப் போர்க்களமாக்கி, எண்ணிறந்த உயிர்களை மாய்ப்பதற்கு மனமிசையாத இராமன், அங்கதனை அழைத்து "தம்பி! இராவணனிடம் நீ தூது சென்று 'சிறையில் வாடும் சீதையை விடுகின்றாயா? அல்லது செருக்களத்தில் ஆவியை விடுகின்றாயா?' என்று கேட்டு இரண்டில் ஒன்றை அறிந்து வா" என்று அனுப்பினான். அவ்வாணையைத் தலைமேற் கொண்டு சென்றான் அங்கதன். படை திரட்டிக் கொண்டிருந்த இராவணன் அவனைக் கண்டு பரபரப்புற்றான். அரக்கன் சீற்றத்தை அறிந்தும் சிறிதும் அச்சமுறாத அங்கதன் பேசலுற்றான்: "அரசே! என்னை ஆளுடைய தலைவன் பூத நாயகன்; புவிக்கு நாயகன்; வேத நாயகன்; விதிக்கு நாயகன்; சீதை நாயகன்; அவன் விடுத்த தூதன் யான்" என்று தன்னை அறிவித்தான்.

அப்போது இராவணன் இகழ்ச்சி தோன்றச் சிரித்து "அரன் இருக்க, அரி யிருக்க, அயன் இருக்க, மரத்திலே திரியும் மந்தியையெல்லாம் மறித்துத் திரட்டி இங்கு வந்து உன்னைத் தூதனுப்பிய மனிதனோ உலக நாதன்? தேவரிற் சிறந்த மூவரும் இங்கு வருவதற்கு அஞ்சுவர். என் முன் அஞ்சாது வந்த நீ யாவன்?" என்றான்.

அது கேட்ட அங்கதன் "ஐயனே! முன்னொரு நாள், இராவணன் என்பான் ஒருவனை வாலினால் இறுக்கி மலைதோறும் தாவிய வாலியின் மைந்தன் யான்" என்று மாற்றம் உரைத்தான்.

"இந்திரன் செம்மல், பண்டோர்
இராவணன் என்பான் தன்னைச்
சுந்தரத் தோள்களோடும் வாலிடைத்
தூங்கச் சுற்றி
சிந்துரக் கிரிகள்தாவித் திரிந்தவன்,
தேவர் உண்ண
மந்தரகிரியால் வேலை கலக்கினன்
மைந்தன் என்றான்.

தன் எதிரே நின்றவன் வாலியின் மைந்தன் என்று அறிந்தபோது அரக்கர் கோன் உள்ளத்தில் ஆர்வம் பெருகிற்று. அவனை வளைத்துத் தன்பால் இழுத்துக் கொள்ள முயன்றான். நய மொழி பேசினான். ஆயினும் அரக்கன் சூழ்ச்சியை அறிந்த அங்கதன் வெறுத்துப் பேசி வெளியேறினான்.

இவ்வாறு இராமாயணத்தில் விரித்துரைக்கப்படும் செய்திகள் தேவாரத்தில் குறிக்கப் பெற்றுள்ள வாலியின் வீரத்தையும் சீலத்தையும் நன்கு விளக்குவனவாகும்.




DIA-PEPSIN
















அத்தியாயம் 36

## தந்தப் பிள்ளையார்

மறு நாள் விடியும்போதே அழுது வடிந்தது. எனக்குப் படுக்கையை விட்டு எழுந்திருக்கவே முடியவில்லை. உடலிலுள்ள எலும்புகளெல்லாம் திடீரென்று இரும்பாகி விட்டனவோ என்று எண்ணும்படி வலித்தன.

சிறிது முயற்சித்து எழுந்திருந்து பார்த்தேன். ஆனால் கால்கள் தள்ளாடின. விழப் போனேன். அப்பா ஓடி வந்து என்னைப் பிடித்துக் கொண்டார். "ஐயோ! உடம்பு இப்படிக் கொதிக்கிறதே, இந்து. பேசாமல் படுத்துக் கொள்" என்று சொல்லி என்னைப் படுத்துக் கொள்ளச் செய்தார். பிறகு காப்பி போட்டுக் கொண்டு வந்து கொடுத்தார். அய்யாக் குட்டியைக் கூப்பிட்டு டாக்டரை அழைத்துக் கொண்டு வரும்படி சொன்னார்.

இதற்குள் ஊர் இரண்டு பட்டிருக்க வேண்டும். டாக்டரை அழைத்து வரச் சென்ற அய்யாக்குட்டி வெகு நேரமாகியும் வராமற் போகவே, அப்பா தாமே போய்ப் பார்த்து விட்டு வருவதாகக் கிளம்பினார். அதற்குள் அய்யாக் குட்டி வந்து சேர்ந்தார். டாக்டர் வரவில்லை.

அப்பா அவர் தலையைக் கண்டதுமே கோபமாக, "எங்கே போய்ச் சுற்றி விட்டு வருகிறாய்? குழந்தையைப் பார்க்க டாக்டரை அழைத்துக் கொண்டு வரவில்லையா?" என்றார்.

"காரணமில்லாமல் நாழிகையாகுமா? டாக்டர் வீட்டில் இல்லை!"

"இல்லையென்றால் உடனே வரக் கூடாதோ?" என்றார் என் தந்தை.

"விஷயத்தை முழுதும் கேளுங்கள், மாமா. நேற்றிரவு பாதிரித் தோட்டத்தில் சொக்கையாப் பாண்டியனை யாரோ கொலை செய்து விட்டார்களாம். ஊரே இரண்டு படுகிறது. டாக்டர் பரிசோதனைக்காகப் போயிருக்கிறாராம். அந்தப் பக்கம் போனேன். ஒரே கூட்டம்; போலீஸ் லாரி ஒன்று வந்து நிற்கிறது. என்ன விரட்டினாலும் ஜனங்கள் போக மாட்டேனென்கிறார்கள்..."

என் தந்தை திடீரென்று பேசும் சக்தியை இழந்து விட்டதாகத் தோன்றியது. எனக்கோ அய்யாக்குட்டி விஷயத்தைச் சொன்ன விதம் அதிசயமாக இருந்தது. என்ன நிதானமாகச் சொல்லுகிறார்? அதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? புதிதாகத் தெரிந்தால் அல்லவா படபடப்பிருக்கும்?

ஆனால் எனக்கு உடல் மறுபடியும் நடுங்கிற்று. நேற்று நடந்த சம்பவம் கண்முன்னால் நின்றது. அதைரியப் படக் கூடாது என்று மனத்தைத் தேற்றிக் கொண்டேன்.

அய்யாக்குட்டி தொடர்ந்து கூறினார். "மொத்தத்தில் ஜனங்களுக்குச் சொக்கையாப் பாண்டியன் தொலைந்து போனதில் சந்தோஷந்தான் என்று தெரிகிறது. ஆவலோடு விசாரிக்கிறார்களே தவிர, துக்கத்தோடு விசாரிப்பவர்கள் ஒரு

வருமே யில்லை. என் பிழைப்பில் தான் மண்ணைப் போட்டு விட்டான் பாவி. இவன் செத்துத் தொலைந்ததால் ஊரில் இனிமேல் கொஞ்ச நாள் சினிமாப் பார்க்க யாரும் வரமாட்டார்கள். இரவில் வரப் பயப்படுவார்கள். இருந்தும் கெடுத்தான்; செத்தும் கெடுத்தான் என்று சொல்வார்களே அந்தமாதிரி இருக்கிறது இவன் காரியம்."

அப்போதுதான் என் தந்தை வாயைத் திறந்தார். "சொக்கையாப்பாண்டியனைக் கொன்று விட்டார்கள் என்றால் நம்ப முடியவில்லையே? ஒருவேளை பாதிரித் தோட்டத்துக்கு வந்தபோது மாரடைப்பு வந்து இறந்து போயிருக்கலாம்" என்றார்.

"என்ன மாமா! சுத்தப் பத்தாம் பசலிப் பேர்வழியாக இருக்கிறீர்களே. அவ்வளவு தூரம் ஒன்றுந் தெரியாதவர்களா போலீஸ்காரர்கள்? கழுத்தில் கத்தியால் குத்தப் பட்டிருக்கிறார். இதை விட என்ன சான்று வேணும்?" என்றார் அய்யாக்குட்டி.

இதை யெல்லாம் கேட்கக் கேட்க எனக்கு ரொம்ப பயமாக இருந்தது. என்ன செய்வதென்றே தெரியவில்லை. என் தந்தையின் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டேன்.

உடனே அவர், "சரி, சரி. போதும் இந்தப் பேச்சு. இந்துவுக்குப் பயமாக இருக்கும். நீ போய் உன் காரியத்தைப் பார்" என்று அய்யாக்குட்டியை அனுப்பி விட்டு எனக்குக் கஞ்சி போடுவதற்கு உள்ளே சென்றார்.

எனக்கு ஜுரம் அதிகமாகிக் கொண்டே இருந்தது. தலைவலி தாங்க முடியவில்லை. முதல் நாள் இரவு முழுதும் அழுததால் முகம் வீங்கிப் போய் விட்டது. என் தந்தை ரொம்பக் கவலைப்பட்டார். மறுபடியும் அய்யாக் குட்டியைப் போய் டாக்டரை அழைத்து வரச் சொன்னார்.

"என்ன இந்து, இப்படி உடம்புக்கு வரவழைத்துக் கொண்டு விட்டாயே? எனக்கு என்ன போதாத வேளையோ தெரியவில்லை. மன நிம்மதியே இல்லாமல் போய் விட்டதே" என்றார்.

டாக்டர் ராவ் பகல் ஒரு மணிக்கு வந்தார். என்னைப் பரிசோதித்துப் பார்த்து விட்டு ஏதோ மருந்து எழுதிக் கொடுத்தார். ஜுரம் அதிகமாக இருப்பதாகவும் மாலை மறுபடியும் வந்து பார்ப்பதாகவும் கூறினார்.

என் தந்தை அவரிடம், "என்ன, டாக்டர்! சொக்கையாப்பாண்டியன் சமாசாரம் இப்படி ஆகி விட்டதே. நீங்கள் தான் போயிருந்தீர்களாமே!" என்றார்.

அதற்கு டாக்டர் ராவ், "ஆமாம்! ஆனால் அவன் போனதால் உலகத்துக்கு நன்மையே தவிர நஷ்டம் ஒன்றும் இல்லை" என்றார்.

"அதற்காகக் கொலை செய்வது சரியாகுமா, டாக்டர்? யார் செய்தது என்று ஏதாவது சந்தேகமாவது உண்டா? ஏகப்பட்ட போலீஸ் வந்திருக்கிறதாமே!"

"ஆமாம்! ஆனால் உடனே துப்புத் துலக்கத் தெரிந்து விடுகிறதாக்கும். இல்லா விட்டால் இத்தனை அக்கிரமங்களைச் செய்து கொண்டிருந்த சொக்கையா இத்தனை நாள் வெளியில் திரிந்து கொண்டிருந்திருக்க முடியுமா? போலீஸ் முன்னமேயே செய்திருக்க வேண்டிய காரியத்தை, யாரோ செய்து விட்டார்கள். அவ்வளவுதான்."

"அழகாக இருக்கிறது! அதற்காக ஒவ்வொருவரும் நீதியை நிலை நாட்ட ஆரம்பித்து விட்டால் எப்படி? அது சரி, எத்தனை மணிக்கு நடந்திருக்கும் இது?"

"சொக்கையாவை நேற்று மாலை ஐந்தரை மணியிலிருந்து வீட்டில் காணவில்லையாம். தங்க பாண்டியனும் அவன் சினேகிதன் ரங்கதுரையும் மூன்று மணிக்குத் திருநந்தி புரத்துக்குப் போனார்களாம். அங்கு வக்கீல் வீட்டில் ஏதோ காரிய மிருந்ததாம். தங்க பாண்டியன் தன் சிநேகிதனை ரயிலேற்றி விட்டு இரவுதான் திரும்பி வந்திருக்கிறான். சொக்கையா வந்தாரா இல்லையா என்று அவன் கவனிக்க வில்லையாம். காலையில் பாதிரித் தோட்டத்துக்கு வேலை செய்யச் சென்ற ஆட்கள் பார்த்து விட்டு வந்து சொல்லியிருக்கிறார்கள். நான் பரிசோதனை செய்து பார்த்ததில் நேற்றிரவு ஒன்பது மணிக்கு முன்பாகவே உயிர் போயிருக்க வேண்டும் என்று தெரிகிறது."




என் காதுகள் இந்த சம்பாஷணையைக் கவனித்தனவே தவிர மனம் 'ரங்கதுரை மூன்று மணிக்கே புறப்பட்டு விட்டார். பிறகு திரும்பி வரவில்லை' என்றதில்

தான் லயித்தது. என்ன அசட்டுத்தனம்? என்ன முட்டாள்தனம் செய்து விட்டேன்! அந்தப் பாவி எழுதிய கடிதத்தை நம்பி......

என் சிந்தனை தடைப்பட்டது.

"ஒரு வேடிக்கை. சொக்கையாவின் உடலுக்கு அருகில் ஒரு தந்தப் பிள்ளையார் விக்கிரஹம் கிடந்தது. அதுமாதிரி சொக்கையாவிடம் எந்த விக்கிரஹமும் இருந்ததில்லை என்று ஜமீனைச் சேர்ந்தவர்கள் அனைவரும் சொல்லுகிறார்கள். ஆகவே கொலை செய்ய வந்தவனிடம் அது இருந்திருக்க வேண்டும் என்று நினைக்கிறார்கள். நாளை முதல் நம் அருவிக்கரைப் பிள்ளையாரைக் கும்பிடுபவர்களை யெல்லாம் போலிஸார் சோதனை செய்ய ஆரம்பித்து விடுவார்கள்!"

இந்த ஹாஸ்யம் எனக்குத் துளிக்கூட ரஸிக்க வில்லை. வயிற்றில் சொரேலென்றது. அந்தப் பிள்ளையாரை அங்கே போட்டு விட்டு வந்து விட்டேன் என்பது அப்போது தான் நினைவுக்கு வந்தது. அது வரை அந்த ஞாபகமே இல்லை. பிள்ளையாரின் சொந்தக்காரர்






குற்றவாளி என்றால் நான்தானே குற்றவாளி? அப்போது நான் அடைந்த பீதி சொல்லத் தரமன்று.

**பி**றகு என்ன நடந்தது என்பதெல்லாம் எனக்குச் சரியாக நினைவில்லை. அன்று மாலை ஜுரம் ரொம்ப அதிகமாகி விட்டதாம். இரண்டு நாட்கள் நினைவில்லாமல் கிடந்தேனாம். டாக்டர் ஊசிக்கு மேல் ஊசி போட்டாராம். அப்படியும் ஜன்னி வந்து பிதற்றிக் கொண்டிருந்தேனாம்.

என் தந்தை மந்திரமூர்த்தி கலங்கிப் போய் விட்டாராம். என் அருகிலேயே இரண்டு நாளும் சாப்பிடாமல் உட்கார்ந் திருந்தாராம். "இந்து! நான் உனக்காகத்தான் உயிரை வைத்துக் கொண் டிருக்கிறேன். கடவுளே! என்னை ஏன் இப்படிச் சோதிக்கிறீர்கள்?" என்று சொல்லிச் சொல்லிப் புலம்பினாராம். இதெல்லாம் எனக்கு அய்யாக் குட்டி சொல்லித் தான் தெரியும்.

ஆனால் ஜன்னி பிறந்திருந்த போது ஏதேதோ பிதற்றி விட்டேன் போலிருக்கிறது. மூன்றாவது நாள் டாக்டர் ராவ் வந்து ஊசி போட்

டுக் கொண்டே, "என்னம்மா! உங்க அப்பாவை ரொம்ப பயமுறுத்தித் தடபுடல் செய்து விட்டாயே. அவருடைய முயற்சியால்தான் உனக்கு இவ்வளவு சீக்கிரம் உடம்பு குணமாயிற்று. மூன்றா நாள் இரவு பூராவும் துணியை நனைத்து நனைத்து உன் தலையில் போட்டுக் கொண்டிருந்தார்" என்று சொன்னார்.

பிறகு என் தந்தையிடம், "இனிமேல் கவலையில்லை. நீங்கள் ஆகாரம் ஏதேனும் சாப்பிடுங்கள். சீக்கிரம் இந்து நடமாட ஆரம்பித்து விடுவாள்" என்று கூறி விட்டுப் போனார்.

இன்னும் இரண்டு நாட்கள் சென்றன. நான் மெதுவாக நடமாட ஆரம்பித்தேன். ஆனால் உடலும் உள்ளமும் ரொம்ப மெலிந்து போயிருந்தன. உள்ளத்தில் உற்சாகமில்லை. உடலில் பலம் இல்லை. ரங்க துரைக்கு அன்று நடந்த விஷயங்கள் முழுவதையும் எழுதிவிட வேண்டுமென்று மாத்திரம் தீர்மானித்தேன்.

அன்று பிற்பகல் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டு, மனத்தை வேறு சிந்தனையில் ஈடுபடச் செய்வதற்காகப் புதிதாக வந்திருந்த ஹாஸ்யக் களஞ்சியத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது என் அருமைத் தந்தை ஒரு நாற்காலியைக் கொண்டு வந்து போட்டுக்கொண்டு என் அருகில் உட்கார்ந்தார்.

நான் புத்தகத்தை மூடி வைத்துவிட்டு அவரைப் பார்த்தேன். இந்த ஒரு வாரத்துக்குள் அவர் முகம் மிகவும் மாறியிருந்ததுபோல் தோன்றியது. உடல் இளைத்திருந்தது.

ஏதோ கேட்க வாயெடுத்தார். ஆனால் தயங்கினார். என் மனம் திக் திக்கென்று அடித்துக் கொண்டது.

"இந்து! நான் ஒரு விஷயம் உன்னைக் கேட்க வேண்டும். ஆனால் தயக்கமாக இருக்கிறது. இருந்தாலும் என்னிடமிருந்து எதையும் நீ மறைக்கக் கூடாது. என்னைவிட உனக்கு உதவி செய்ய யார் இருக்கிறார்கள்? எதுவாக இருந்தாலும் நீ என்னிடம் சொல்லி விடுவது நல்லதல்லவா?" என்றார்.

என் மனம் குமுறிற்று. விம்மி விம்மி அழுதுவிட்டேன். என் தந்தை, "இந்து, அழாதே, அம்மா! அன்று நடந்தது எல்லாவற்றையும் விவரமாக என்னிடம் சொல்லிவிடு, நான் பார்த்துக்கொள்கிறேன்" என்றார். அதன்பிறகும் எனக்குச் சொல்லத் தைரியம் வரவில்லை. என் தந்தை "இந்துமதி! நீ என்னிடம் மறைப்பதில் பயனில்லை. நீ ஜுரமாகப் படுத்துக்கொண்டிருந்தபொழுது ஏதேதோ பிதற்றினாய். விஷயம் எனக்குப் புரிந்துவிட்டது. விவரமாகச் சொல்லும்படிதான் கேட்கிறேன்" என்றார்.

பிறகு ஒருவாறு மனத்தைத் தேற்றிக்கொண்டு நடந்த விவரம் பூராவையும் சொல்லி முடித்தேன். என் தந்தை மௌனமாகக் கேட்டுக்கொண்டிருந்தார்.

"அப்பா! நான் அந்த தந்தப் பிள்ளையாரை ரங்கதுரைக்குக் கொடுப்பதற்காக எடுத்துக் கொண்டு போனேன். என்னுடைய பயத்தில் அங்கேயே போட்டு விட்டேன். டாக்டர் சொல்லும்வரை அதைப் பற்றியே எனக்கு ஞாபகம் வரவில்லை. அது என்னுடையது என்று தெரிந்து விட்டால் என் பேரில் பழி சுமத்தி விடுவார்களா, அப்பா? எனக்கு ரொம்ப பயமாக இருக்கிறதே!" என்றேன்.

"இந்துக் கண்ணு! நீ பயப்படாதே, அம்மா! உன்னை இந்த ஜுரத்திலிருந்து பிழைக்க வைக்க நான் எவ்வளவு பாடு பட்டேன்? உனக்குக் கெடுதல் வரும்படி நான் பார்த்துக் கொண்டிருப்பேனா, அம்மா? நீ கவலைப்படாதே! பிள்ளையார் விக்கிரஹம் உன்னுடையது என்று ஒருவரும் சந்தேகிக்கக் கூட இல்லை. அன்று வந்த கடிதத்தை என்ன செய்தாய்?"

"அது நல்ல வேளையாய் என் இடுப்பிலேயே இருந்தது. அதை என் பெட்டியில் அன்றிரவு வைத்தேன்" என்று சொல்லி விட்டுப் பெட்டியைத் திறந்து கடிதத்தை எடுத்துக் கொண்டு வந்து காண்பித்தேன். என் தந்தை அதை எடுத்துக் கொண்டு போய் அடுப்பில் போட்டார். அது முழுதும் எரிந்த பிறகுதான் அந்த இடத்தை விட்டு நகர்ந்தார்.

"நான் ரங்கதுரைக்கு இதைப் பற்றி எழுதட்டுமா?" என்றேன்.

"சேச்சே! அசடு! அந்தமாதிரி ஏதாவது செய்துவிடப் போகிறாயே என்றுதான் பயமாக இருந்தது. நல்ல வேளை, கேட்டாயே! இதைப் பற்றி ஒருவரிடமும் மூச்சுக்கூட விடாதே, ஜாக்கிரதை! அய்யாக்குட்டி இந்தக் காரியத்தைத் துணிந்து செய்திருக்கக் கூடும் என்று எனக்குத் தோன்றவில்லை. நீ எந்தக் காரணத்தை முன்னிட்டும், அவனிடம் இதைப் பற்றிப் பேசவே கூடாது. யாரிடமும் சொல்லக் கூடாது. அதை அடியோடு மறந்து விடு!"

இந்தச் சமயத்தில் "சார்! தபால்!" என்ற குரல் கேட்டது.

## அத்தியாயம் 37

# ரங்கதுரையின் கடிதம்

கடிதம் எனக்குத்தான் வந்திருந்தது. என் மனம் துள்ளிக் குதித்தது. கடிதத்தை வாங்குவதற்காக எழுந்தேன். என் தந்தை என்னை உட்கார வைத்து விட்டுத் தாம் போய்க் கடிதத்தை வாங்கிக் கொண்டு வந்து என்னிடம் கொடுத்தார். பிறகு அவர் வெளியில் போய் விட்டார்.

கடிதத்தைப் பிரித்துக் கூடப் பார்க்க முடியாத நிலையில் நான் இருந்தேன். அன்றைய தினம் ஏற்பட்ட ஏமாற்றமெல்லாம் திரண்டு என் முன்னால் வந்து நின்றது. அவரே மறுபடியும் இங்கு வந்து விட்டுப் போகக் கூடாதா என்று தோன்றியது. அது நடக்காத காரியம் என்று நினைத்துக் கொண்டே கடிதத்தைப் பிரித்தேன். அளவிலாத ஆர்வத்துடன் படிக்கத் தொடங்கினேன்.

என் அன்புக்குரிய இந்துமதிக்கு,

உன்னிடம் முதலில் நான் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன். உன்னை நான் புறப்படுவதற்கு முதல் நாள் பாதிரித் தோட்டத்துக்கு வரும்படி சொன்னேன். பாவம், நீயும் வந்து காத்திருந்திருப்பாய். தவிர்க்க முடியாத காரணங்களினால் நான் அன்று தங்க பாண்டியனுடன் இருக்க வேண்டி யிருந்தது. ஏற்கெனவேயே சொல்லியது போல் தங்க பாண்டியனுக்கு ஜமீன் அதிகாரங்கள் வருவதற்கு ஏற்பாடுகள் செய்யவேண்டி யிருந்தது. நான் அருகில் இருக்கும் போதே எல்லாவற்றையும் முடித்துவிட வேண்டும் என்று தங்க பாண்டியன் வற்புறுத்தினான். ஆகவேதான் உன்னை வந்து பார்க்க முடியாமல் போய் விட்டது.

மறு நாளும் சீக்கிரமாகவே வக்கீலைப் பார்ப்பதற்காகத் திருநந்திபுரம் சென்று விட்டோம். நான் திரும்பிவந்து உன்னைப் பார்த்து விட்டுப் போகலாம் என்றுகூட நினைத்திருந்தேன். ஆனால் அதுவும் முடியாமல் போய் விட்டது. நீ இதை யெல்லாம் பொருட்படுத்த மாட்டாய் என்று நம்புகிறேன்.

உனக்கு ரொம்ப உடல் நலம் சரியாக இல்லை என்று டாக்டர் ராவ் கூறியதாகத் தங்க பாண்டியன் எழுதி யிருக்கிறான். உடனே நீயாவது அப்பாவாவது கடிதம் எழுதவும். ரொம்பக் கவலையாக இருக்கிறது.

நான் நாளைக் கழித்த மறுநாள் பம்பாய் செல்லுகிறேன். பம்பாயிலிருந்து உனக்கு எழுதுகிறேன். சீமை சென்ற பிறகுதான் நான் தங்கும் இடத்தின் விலாசம் தெரிவிக்க இயலும்.

இந்து! இவ்வளவு குறுகிய காலம் என்னோடு பழகிய நீ, எப்படியோ என் மனத்தில் என்றும் அழியாத இடம் பெற்று விட்டாய். அதை நினைக்க நினைக்க எனக்கு வியப்பாக இருக்கிறது. நான் எத்தனையோ காரியங்களை இங்கு செய்து கொண்டிருக்கிறேன். எல்லாவற்றுக்கும் பின்னால் நீ இருந்து கொண்டே யிருக்கிறாய். எந்தக் காரியத்தைச் செய்தாலும் அதை இந்துவுக்காகச் செய்கிறோம் என்ற நினைப்பே உண்டாகிறது. இது வரை நான் எனக்காகப் படிப்பதாக நினைத்துக் கொண்டிருந்தேன். இப்போது என் படிப்பு, சீமைப் பிரயாணம் எல்லாமே உனக்காகத்தான் என்று தோன்றுகிறது.

இது வரை என் காரியங்களுக் கெல்லாம் ஒரு பொருளில்லாமல் இருந்தது. அந்தத் தேவையை நீ பூர்த்தி செய்து விட்டாய். நான் எங்கே இருந்தாலும் என்னுடன் நீ இருப்பதாகவே நினைத்துக் கொள்கிறேன்.

உன் அருமை அன்னை என்னிடம் வாக்குறுதி கேட்டதை எண்ணும்போதெல்லாம் என் மனம் கனிந்து போகிறது. அந்த மாதரசியின் ஆத்மா எனக்கு வாழ்வில் ஊக்க மளிக்கும் என்று நம்புகிறேன். ஆனால் அவர் என்னை அப்படி ஒரு வாக்குறுதி கேட்டிருக்க வேண்டிய அவசியமே இல்லை. நானே அந்தக் காரியத்தை ஆர்வத்துடன் ஏற்றுக் கொண்டிருப்பேன்.

இங்கு வந்த பிறகுதான் நீ எவ்வளவு தூரம் என் வாழ்வில் ஒன்றி விட்டாய் என்று தெரிகிறது. ஒரு கணம்கூட உன் ஞாபகம் இல்லாமல் இருக்க மாட்டேனென்கிறது. உன் அழகிய பொன் முகம் என் கண் முன்னால் தோன்றிக் கொண்டே இருக்கிறது.

அன்று உன்னைப் பார்க்காமல் புறப்பட்டு வந்தது மனத்துக்குச் சமாதானமாகவே இல்லை. ரயிலுக்காக ஸ்டேஷனில் காத்துக் கொண்டிருந்த போது உன்னைப் பற்றி நினைத்துக் கொண்டே இருந்தேன். சொல்லிக் கொள்ளாமல்

வந்தது தவறு என்று என் மனம் கூறியது. திரும்பிப் போய் விட்டால் என்ன? நாளைப் போவோமே என்றுகூட நினைத்தேன். உன்னைப் பார்த்து விட்டுத் தான் போக வேண்டுமென்று என் உள்ளம் துடித்தது. ஆனால் இங்கிலாந்து பிரயாணத்துக்காக மிக முக்கியமான ஏற்பாடுகள் செய்ய வேண்டுமே. ஒரு நாள் தாமதித்தால்கூட ரொம்பச் சிரமமாகப் போய் விடுமே என்று என் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டேன். இங்கு வந்ததும் இன்னும் சிக்கிரம் வந்திருக்க வேண்டும் என்று என் கல்லூரி பிரின்ஸிபல் குறை கூறினார்.

அன்று உன்னைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டே ஸ்டேஷனில் உட்கார்ந்திருந்தேன் அல்லவா? அப்போது எதைப் பார்த்தாலும் அதில் உன் முகம் தெரிவது போல் பிரமையாக இருந்தது. வானத்தைப் பார்த்தேன். ஆங்கங்கே பஞ்சுக் குவியலைக் கொட்டியிருப்பது போல மேகக் கூட்டம் குவிந்திருந்தது. அவைகளிலெல்லாம் உன் அழகிய முகம் தெரிந்தது. உடனே நாம் இருவரும் சேர்ந்து பாடிய பாரதியாரின் பாடல் நினைவுக்கு வந்தது.

"பிரித்துப் பிரித்து நிதமேக மளந்தே
பெற்ற துன் முகமன்றிப் பிறிதொன்றில்லை"

என்று மெதுவாகப் பாடிக் கொண்டே மேகக் கூட்டத்தில் தோன்றிய உன் புன்னகை மலர்ந்த முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். திடீரென்று அந்த முகத்தில் புன்னகை மறைந்தது. சொல்ல முடியாத பீதி அம்முகத்தில் படர்ந்தது. என் இதயமும் ஒரு கணம் ஸ்தம்பித்து விட்டது. அப்போது முதல் உன்னுடைய பீதி நிறைந்த முகம் தோன்றித் தோன்றி என்னை வாட்டுகிறது. நான் வீண் பிரமை என்று வேறு எதிலாவது மனத்தைச் செலுத்துகிறேன். ஆனால் மறுபடியும் அதே முகம் என் கண் முன்னால் வந்து நிற்கிறது.

இந்து! நீ எதற்கும் பயப்படவே வேண்டியதில்லை. பாதிரித் தோட்டத்திலும், மாட்டுக் கொட்டகையில் கடைசியாக நாம் சந்தித்த போதும் கூறியவற்றை ஒரு நாளும் என்னால் மறக்க முடியாது. உன் அருமை அன்னைக்கு அளித்த வாக்குறுதியையும் நான் என்றும் மறக்க மாட்டேன். நீ சிறிதும் கவலைப் படாதே.

உன்னிடமிருந்து கடிதம் வந்த பிறகு புறப்பட்டால்தான் என் மனம் நிம்மதியாக இருக்கும். இல்லா விட்டால் ரொம்ப மனச்சுமையுடன்தான் ரயிலேறுவேன். உடனே எழுது.

இங்கே ஒரே கோலாகலமாய் இருக்கிறது. என் பிரயாணத்துக்காக என் அருமை நண்பர்கள் பலரும் மாற்றி மாற்றி விருந்தளிக்கிறார்கள். பரிசுகளைக் கொண்டுவந்து குவித்து என்னையும் என்னுடைய இளைத்த பெட்டியையும் திணறச் செய்கிறார்கள்.

என் பிரயாணம் சுகமாக முடிய வேண்டுமென்பதற்காக எங்கள் கல்லூரியில் உள்ள ஆலயத்தில் நேற்று தனியாகப் பிரார்த்தனை நடந்தது. கல்லூரி ஆசிரியர்கள் அனைவரும் அன்புடன் என்னை ஆசிர்வதித்தார்கள். அதன் பிறகு என் நண்பர்கள் எல்லோரும் ஒரு தேனீர் விருந்து அளித்தார்கள். பிரிவுபசாரப் பேச்செல்லாம் நடந்தது.

பிறகு நண்பர்கள் ரோஜாப் பூமாலைகளைப் போட்டு என்னைப் பேசச் சொன்னார்கள். ரோஜா மலர் மாலையை என் நண்பன் என் கழுத்தில் போட்ட உடனே எனக்கு "இந்துமதி தன் கையினால் இந்த மாதிரி சிக்கிரத்தில் மாலை போடுவாள் அல்லவா?" என்று தோன்றி விட்டது. பிறகு நான் என்ன முயற்சித்தும் பேச முடியவில்லை. ஏதேதோ சொல்ல வேண்டுமென்றும், எனக்கு உதவி செய்தவர்களுக்கெல்லாம் தனித் தனியே வந்தனம் கூறவேண்டுமென்றும் எண்ணிக் கொண்டிருந்தேன். ஒன்றுமே நினைவுக்கு வரவில்லை. உன் நினைவு வந்ததும் மற்றதெல்லாம் மறந்து விட்டது. நண்பர்கள் எல்லாம் "வாயைத் திறந்தால் ஓய மாட்டானே. இவன் ஏன் இன்று சரியாகப் பேசவில்லை?" என்று வியந்தார்கள். என்னிடமும் "உனக்கு இன்று என்ன ஆகி விட்டது?" என்று கேட்டார்கள். "உங்களைப் போன்ற அருமை நண்பர்களைப் பிரிய வேண்டியிருக்கிறதே என்று வருத்தமாக இருந்ததால்தான் என்னால் சரியாகப் பேச முடியவில்லை" என்று சொல்லி வைத்தேன். அதையும் உன்னை நினைத்துக் கொண்டுதான் சொன்னேன்.

இன்னொரு துரதிர்ஷ்டமான சம்பவம் கேள்விப்பட்டேன். அப்படி நடந்திருக்க வேண்டாம். இருந்தாலும் உலகத்துக்கு ஒரு நஷ்டமும் இல்லை என்று சமாதானம் அடையலாம்.

அப்பா அவர்களுக்கு என் அன்பு நிறைந்த நமஸ்காரங்களைச் சொல்லு. அய்யாக்குட்டி கூறியபடி நான் ஸ்காண்டி



## தரத்தில் வேற்றுமையை உணருங்கள்
## செலவை மிச்சப்படுத்துங்கள்

உங்கள் மோட்டார் விஷயத்தில் அதற்குரிய கவனத்தைச் செலுத்தி அதை உயர்ந்த நிலையில் வைத்துக் கொள்ள வேண்டுமாயின், காஸ்ட்ரால் மோட்டார் எண்ணெய்தான் வேண்டுமென்று வற்புறுத்துங்கள். காஸ்ட்ரால் இஞ்ஜினுக்கு அதிக சக்தியைக் கொடுக்கிறது. மோட்டாரை நளினமாக ஓடச் செய்கிறது. இஞ்ஜின் தேய்ந்துவிடாமலும் பழுதாகி விடாமலும் பாதுகாக்கிறது. அதனால்தான் எங்கு பார்த்தாலும் மோட்டார் சொந்தக்காரர்கள் காஸ்ட்ராலேயே விரும்புகிறார்கள்.




**ஸி. ஸி. வேக்பீல்ட் & கம்பெனி லிமிடெட்**

Z-27

# சென்னை நகர் கண்டிராத தேசீய திருவிழா

முன்னைவிட மும்மடங்கு பெரிய

# காங்கிரஸ் பொருட்காட்சி

## காங்கிரஸ் மைதானம் : தேனாம்பேட்டை

★

முப்பது ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்திருக்கும் இக்காட்சிக்கு

**பிரவேசக் கட்டணம் நாலணாதான்**

★

★ **பழைய மைதானத்தில்**

மத்ய சர்க்கார் பகுதி
சென்னை சர்க்கார் பகுதி
தொழில், வர்த்தக ஸ்தாபன ஸ்டால்கள்
கலைக் கண்காட்சி
சினிமா பகுதி

★ **புதிய மைதானத்தில்**

கதர், கிராமத் தொழில் கண்காட்சி
15 ராஜ்ய சர்க்கார்கள் பகுதி
டாடா, டி. ஐ. சைகிள்கள் போன்ற தொழில் ஸ்தாபன ஸ்டால்கள்
மகாத்மா காந்தி எக்ஸிபிஷன்
பாரதி எக்ஸிபிஷன்
கலாசாரப் பகுதியும், புராதனப் பொருள்களைக் கொண்டு பழங்கால நாகரீகத்தை விளக்கும் பகுதியும்
நாடக மேடை — கேளிக்கைகள்

*மவுண்ட் ரோடு, விஜயராகவாச்சாரி ரோடு, சுந்தரராவ் நாயுடு ரோடு, கோபதி நாராயணசாமி ரோடு — ஆகிய நான்கு ரோடுகளிலும் உள்ள வாசல்கள் வழியாகப் பொருட்காட்சிக்கு வரலாம்.*

னேவியா போவதற்கும் முயற்சிக்கிறேன் என்று அவரிடம் சொல்லு.

கடைசியாக ஒரு வார்த்தை! நான் எங்கே இருந்தாலும் என் உள்ளம் உன்னுடனேயே இருக்கும். அதை நினைவில் வைத்துக் கொள்.

இப்படிக்கு
**உன் ரங்கதுரை**

படித்துக் கொண்டிருக்கும் போதே கண்களில் கண்ணீர் நிறைந்து படிக்கச் சிரமமாக இருந்தது. மெதுவாகப் படித்து முடித்ததும் என்னால் தாங்கவே முடியவில்லை. "என்னுடைய பீதி நிறைந்த முகம் அவர் முன் தோன்றிக் கொண்டிருக்கிறதாமே. எவ்வளவு ஆத்மாவின் பிணைப்பு ஏற்பட்டிருந்தால் அப்படித் தோன்றும்? அவருடைய அன்புதான் எவ்வளவு பரிசுத்தமானது? என்ன அன்பு! என்ன அன்பு! ஈசுவரா! இது என்றென்றும் நிலைத்து நிற்க அருள் புரிவாய். என் அருமை அன்னையே இது மேன்மேலும் வளர, அன்புக் கடலாகிய நீ அமரருலகிலிருந்து ஆசிர்வதிப்பாய்."

இப்படியெல்லாம் என் எண்ணங்கள் ஓடிக் கொண்டிருந்த போது அய்யாக் குட்டி உள்ளே வந்தார். என் கையிலிருந்த கடிதத்தைப் பார்த்து விட்டு, "யாரிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது?" என்று கேட்டார்.

எனக்கு உடனே பதில் சொல்ல முடியவில்லை. மௌனமாக இருந்தேன்.

அய்யாக்குட்டி, "உன் கண் சிவந்து, முகம் வீங்கியிருப்பதைப் பார்த்தால் நீ ரொம்ப அழுதிருக்கிறாய் என்று தெரிகிறது. அழுவதற்குக் காரணம் காதலன் நினைவு வந்ததுதான் என்று ஊகிக்கலாம். காதலன் நினைவு வருவதற்கு உன் கையிலிருக்கும் கடிதம்தான் காரணமாக இருக்க வேண்டும். ஆகவே அந்தக் கடிதம் ரங்கதுரையிடமிருந்து வந்திருக்கிறது. என்ன நான் துப்புத் துலக்கியது சரிதானே?" என்றார்.

எனக்கு அந்தப் பேச்சு வேம்பாகக் கசந்தது. அய்யாக் குட்டியின் ஹாஸ்யத்தை அனுபவிக்கும் மன நிலையில் நான் அப்போது இருக்கவில்லை.

"கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டு பிடித்ததைவிட மிகக் கஷ்டமான விஷயத்தைக் கண்டு பிடித்து விட்டீர்கள்" என்று ஏளனமாகக் கூறினேன்.

"இந்துமதி! நீ என்னமோ என்னைக் கிள்ளுக்கீரை யென்று நினைக்கிறாய். ஆனால் நான் உனக்காக எதை வேண்டுமானாலும் செய்வேன்."

எனக்கு மறுபடியும் அந்த இருளில் கண்ட உருவத்தின் நினைவுதான் வந்தது. 'எனக்காக அதைச் செய்து விட்டவரிடம் நான் ரொம்பக் கடுமையாக நடந்து கொள்ளக் கூடாது' என்று எண்ணினேன்.

"இல்லை, இல்லை. நான் அப்படியெல்லாம் ஒன்றும் நினைக்கவில்லை. சும்மா விளையாட்டுக்காகத்தான் சொன்னேன்" என்றேன்.

"நீ இன்னும் என்னை அந்நியனாகவே நினைக்கிறாய். உனக்கு என்ன வேண்டுமானாலும் என்னிடம் தாராளமாய்க் கூறலாம். சினிமாக் கொட்டகையை இந்த ஊரில் நடத்துவதில் ஒன்றும் லாபமே இல்லை. ஆனால் உனக்காகத் தான் இன்னும் நான் இங்கே இருந்து கொண்டிருக்கிறேன். கொஞ்ச நாட்கள் இங்கே இருந்து உன்னையும் மந்திரமூர்த்தியையும் கவனித்துக் கொள்ளப் போகிறேன்."

எனக்கு உண்மையிலேயே பாவமாக இருந்தது. "நான் அப்படி நினைக்கவில்லை. உங்களுடைய உதவி வேண்டும். நிச்சயமாய்க் கேட்பேன். எனக்கும் அப்பாவுக்கும் வேறு யார் இருக்கிறார்கள்?" என்று கூறினேன்.

அப்பா ஒரு காய்கறிக் கூடையைத் தூக்கிக் கொண்டு வந்தார். அய்யாக் குட்டி ஓடிப் போய் அதை வாங்கிக் கொண்டார். வயதான காலத்தில் என் அருமைத் தந்தை எவ்வளவு சிரமப்பட்டிருக்கிறார்! என்னை என்ன அன்புடன் கவனித்தார்! பாவம், நல்ல செல்வந்தராக இருந்த அவருடைய வாழ்க்கையில் துரதிர்ஷ்டத்திலேயே பிறந்து வளர்ந்த என் பெற்றோர்கள் குறுக்கிட்டதிலிருந்து அவரையும் அது பிடித்தது. எல்லாவற்றுக்கும் மேலாக என் அன்னையின் மரணத்துக்குப் பின் அவருக்கு ரொம்ப சிரமமான நிலை ஏற்பட்டிருந்தது. அத்தனை கஷ்டங்களுக்கும் மத்தியில் என்னிடம் அவர் காட்டிய அன்புக்கும் பரிவுக்கும் நான் எத்தனை ஜன்மங்கள் எடுத்து அவருக்குத் தொண்டு செய்தாலும் போதாது.

ரங்கதுரையின் கடிதத்தைப் பற்றி அப்பாவிடம் கூறினேன். அவர் உடனே என்னைப் பதில் எழுதிப் போடச் சொன்னார். "என் அன்பையும் ஆசிர்வாதங்களையும் நான் தெரிவித்ததாக எழுது" என்று சொன்னார்.

நான் என் இதயத்தைப் பிழிந்தெடுத்து அதை அந்தக் கடிதத்தில் வடித்தேன். அவரைச் சந்திக்க முடியாமல் போனதில் எனக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தை விவரித்தேன். அவருக்காக நான் ஒவ்வொரு கணமும் இறைவனைப் பிரார்த்தித்துக் கொண்டிருப்பதாக எழுதினேன். எல்லாவற்றையும் எழுதி விட்டுக் கடிதத்தை உறையில் போட்டு ஒட்டினேன்.

முதலில் அதைத் தபாலில் சேர்க்க அப்பாவிடம் கொடுக்கலாமென்று நினைத்தேன். பிறகு அவருக்குச் சிரமம் கொடுக்க வேண்டாமென்று தோன்றியது. அய்யாக்குட்டியின் உதவியை நாட ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது என்று அவரைக் கூப்பிட்டேன்.

“இதைத் தயவு செய்து தபால் தலை வாங்கி ஒட்டி, இன்றையத் தபாலில் சேர்த்து விடுகிறீர்களா?” என்று அவரைக் கேட்டேன்.

அய்யாக்குட்டி மிகவும் மகிழ்ச்சியோடு, “பேஷாகச் சேர்த்து விடுகிறேன். இது என்ன பிரமாதம்? உடனே போகிறேன்” என்று அதை வாங்கிக் கொண்டு விரைந்து சென்றார். (தொடரும்)




## 37. புலிக்குப் பிறந்தது...

அந்தக் காலத்தில் கிரிதர ஸேட்டின் மூளை அசாத்தியமாக வேலை செய்து கொண்டிருந்தது. அவர் தொட்ட தொழில் எல்லாம் பொன்னாகிக் கொண்டிருந்தன. மறு மணம் செய்து கொண்டு வாழ்க்கை நடத்த அவர் திட்டமிட்டார். லால்ஜி ஸேட் அதைப் பலமாக எதிர்த்தார். கல்யாணத்தை நடக்கவொட்டாமல் நிறுத்தி விட்டார். கிரிதர ஸேட்டுக்கு அவருடைய அந்தக் குறுக்கீடு கொஞ்சமும் பிடிக்கவில்லை. அநாவசியமாக அவர் தம் காரியங்களில் இறங்கி எதிர்த்துத் தமக்கு ஏதாவது இடையூறு செய்ய முற்பட்டால் அவருடன் ஆயுள் முழுவதும் பேச்சு வார்த்தையையே நிறுத்தி விடுவதாக எச்சரித்தார். அதுமட்டும் அல்ல; அவரோடு தமக்குள்ள குடும்ப பந்தங்களைக்கூட அறுத்துக் கொண்டு விடுவதாகப் பயமுறுத்தினார்.

தமையனின் தொடர்பை வேண்டாம் என்று உதறித் தள்ளும் எண்ணமே லால்ஜி ஸேட்டுக்கு எழவில்லை. அவர் கிரிதர ஸேட் மறுமணம் செய்து கொள்வது ஒன்றையே எதிர்த்தார். தம் நிலையைத் தெளிவுபடுத்துவதற்காக அவர் தம் தமையனை நேரில் சந்தித்துப் பேசச் சென்றார். கல்யாணம் நின்ற விஷயத்தில் தமக்குப் பங்கு கிடையாது என்றும், தாம் இந்த வயதில் மறு மணம் செய்து கொள்ள வேண்டாம் என்று மட்டுமே சொன்னதாகவும் சொல்லி, அவருக்கு நம்பிக்கை யூட்டி விட்டு வரவேண்டுமென்ற குறிக்கோள்தான் அவரை நகரத்திலிருந்து கிராமத்துக்கு இழுத்துச் சென்றது.

கிரிதர ஸேட் அவர் கிராமத்துக்கு வந்த சமயத்தில் வசூலுக்காகத் தமது கிராமங்களுக்குச் சென்றிருந்தார். லால்ஜி ஸேட் தம்மைப் பார்க்க வருகிறார் என்ற செய்தி கிடைத்ததும் அவர் தம் குடியானவர்களில் ஒருவனான வத்ஸராஜை வண்டியுடன் அனுப்பி லால்ஜி ஸேட்டை அந்தக் கிராமத்துக்கே அழைத்து வரச் செய்தார்.

லால்ஜி ஸேட்டை வண்டியில் அழைத்து வரும்பொழுது கிரிதர ஸேட்டின் கெடுபிடிகளைப் பற்றி வத்ஸராஜ் குறை கூறினான். "பெரிய ஐயா ஆளைக் கொன்றே போட்டு விடுவார்கள் போலிருக்கிறது. வீட்டில் ஒரு மணி என்றால் ஒரு மணிகூடத் தானியம் இருக்க விடுவதில்லை. கல்யாணம் செய்து கொண்டபின் சாகுபடியில் ஈடுபட்டு ஒழுங்கு முறையோடு வாழ்க்கை நடத்தலாம் என்று எண்ணமிட்டேன். அதன்படியே பயிர்த் தொழிலும் செய்யலானேன். ஆனால் ஐயா எங்கிருந்துதான் எங்கள் தலையில் 'கடன், கடன்' என்று கடனைக் கொண்டு வந்து சுமத்துகிறார்களோ, தெரியவில்லை. நாங்கள் நிலத்திலே படுகிறபாடு அத்தனையும் வீணாகி விடுகிறதுங்க. அப்பன்—பாட்டன் காலத்திலிருந்து என்ன என்னவெல்லாமோ காகிதத்தைக் கிளறி எடுக்கிறார். அவர் பை நிரம்பிக் கொண்டே இருக்கிறது. நாங்கள் காலியாகிக் கொண்டேயிருக்கிறோம்!" என்று தன் உள்ளத்தில் உள்ளதை ஒளிக்காமல் சொன்னான்.

"அண்ணா வேலையே அப்படித்தான். இந்த வயதில் அவருக்குக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமாம். அதற்காகப் பணத்தைத் தண்ணீராக......" என்று லால்ஜி ஸேட் தமையனைப் பற்றிக் குறை கூறினார்.

"எசமான்! உங்களுக்கு ஆண்டவன் வேண்டிய மட்டும் கொடுத்திருக்கிறார். அதனால் பணத்தைத் தண்ணீராகச் செலவழிக்கிறீர்கள். அல்லது கரியாக அடிக்கிறீர்கள். ஆனால் ஏழைகளாகிய நாங்கள் என்ன செய்வோம்? பணத்துக்கு எங்கே போவோம்? எங்களை இப்படிச் சுரண்டினால் எங்கள் நிலை என்ன ஆகும்? சட்டியில் இருந்தால்தானே அகப்பையில் வரும்? உங்களைப் போன்ற பணக்காரர்களின் அட்டூழியத்தினால்தான் என்னைப் போன்றவர்கள் கொள்ளையடிக்கிறார்கள். எங்களைப் போன்றவர்களைக் கொள்ளைக்காரர்களாக ஆக்கும் கைங்கரியம் உங்களைச் சேர்ந்தது. என்னுடையதென்று ஒரே ஒரு வீடுதான் மீதியிருக்கிறது. அதையும் எழுதி வாங்கிக் கொண்டு விட்டால் அப்புறம் நாங்கள் எங்கே போவோம்? நீங்களே சொல்லுங்கள்!" என்றான் வத்ஸராஜ்.

வத்ஸராஜின் வீடு வழியில் இருந்தது. அதை லால்ஜி ஸேட்டுக்குச் சுட்டிக் காட்டி, துயரம் தோய்ந்த குரலில் தன் ஏழைமை நிலையைத் தெளிவாக வெளியிட்டான்.

நான்கைந்து தலைமுறைகளுக்கு முன் அந்தக் கிராமத்துக்கே சொந்தக்காரர்கள் என்று கருதப்பட்டு வந்தனர், வத்ஸராஜின் முன்னோர்கள். கொள்ளை – களவு புரிவதிலும் கிராமங்களைச் சூறையாடுவதிலும் அவர்கள் பிரமாதமான புகழ் பெற்றிருந்தார்கள். புகழ் எந்த விதத்தில் பெற்றால் என்ன? புகழ் புகழ்தானே? அந்தக் காலத்தில் அவர்கள் பெயரைச் சொன்னால் அழுத பிள்ளை வாய் மூடும். வத்ஸராஜின் பாட்டன் பிண்டாரிகள் கூட்டத்துக்குத் தலைவனாக இருந்தான். நம் நாட்டில் ஆங்கில அரசாங்கம் ஏற்பட்ட பின் தான் பிண்டாரிகள் பூண்டற்றுப் போயினர்.

வத்ஸராஜின் பாட்டன் வைத்திருந்த நிலபுலன்களனைத்தையும் சர்க்கார் தன் சுவாதீனப் படுத்திக் கொண்டு விட்டது. அந்தக் காலத்தில் இந்தக் கூட்டத்தினர் கொள்ளைத் தொழிலை மேற்கொண்டிருந்தனர் என்பது உண்மைதான். சரித்திர நோக்குடன் பார்க்கும்போது, 'இந்தத் தொழில் எத்தகையது? நல்லதா, கெடுதலா?' என்பது போன்ற பல பிரச்னைகள் எழக்கூடும். அது வேறு விஷயம்; இங்கு தேவையில்லாத விஷயம். போர்க்குணம் மிகுந்திருந்த இந்த இனத்தாரிடம் ஆள்பவர்களுக்கு வேண்டிய பல அரும்பெரும் குணங்கள் இயல்பாகவே அமைந்திருந்தன என்பது தெளிவான விஷயம்; கவனத்தில் இருத்திக் கொள்ளப்பட வேண்டிய விஷயம்.

பதினைந்து இருபது நபர்களைக் கொண்ட ஒரு கோஷ்டியைக் கட்டி மேய்த்து அதற்கு உண்ண உணவு, உடுத்த உடை முதலியவை அளித்துக் காப்பாற்றும் கொள்ளைக்காரர் தலைவன் தன்னை ஒரு சிறு சமஸ்தானாதிபதியாகவே கருதி வந்தான். துதி பாடகர்கள், சாரணர்கள் போன்ற எத்தனையோ பேர் அத்தகைய தலைவர்களை அண்டிப் பிழைத்தனர். அவர்களைச் சதா சர்வகாலமும் அண்டிப் பிழைப்பவர்களின் கும்பல் சுற்றிக் குழுமி யிருப்பது வழக்கம். அது சகஜந்தானே?

விருந்து உபசாரத்தில் தலைவர்கள் தாம் சேர்த்த பொருள் முழுவதையும் வாரி வழங்கிவிடுவார்கள். பச்சினம் பாலகர்கள், பெண்டுகள், ஆடு மாடுகள் ஆகியவற்றைப் போற்றிப் பாதுகாப்பதில் அத்தகைய தலைவர்கள் சிறந்து விளங்கினார்கள். அபயம் என்று வந்து விட்டவர்களைத் தங்கள் உயிரைக் கொடுத்தாகிலும் ரக்ஷித்து வந்தார்கள். நாளடைவில் அவர்கள் வாழ்க்கையில் ஆடம்பரங்கள் பல்கிப் பெருகி வளர்ந்தன. அதன் பயனாகப் பற்பல ஆசைக் கோட்டைகள் அவர்கள் மனத்தில் எழுந்தன. அவ்வாசைகள் அவர்களை அநேகவிதமான தீய பழக்கங்களுக்கு இலக்காக்கின. பெருமையோடு வாழ வேண்டும் என்ற எண்ணம் செருக்காக வளர்ந்து இல்லாத சோதனைகளுக்கெல்லாம் இலக்காகி வந்தது. இவ்வளவு இருந்த பொழுதிலும் அவர்கள் நீதி, அநீதி விஷயத்தில் தெளிவும் நேர்மையும் நிறைந்த அபிப்பிராயம் கொண்டிருந்தனர். அவர்களுடைய சட்ட திட்டங்களை யாருமே மீற முடியாது. அப்படி யாராவது மீற முற்பட்டால் உயிரையே பணயம் வைத்து அவற்றைக் காத்து வந்தனர். அவர்கள் காத்தல் அழித்தல் தொழிலுக்குப் பூகோள ரீதியாக ஒரு எல்லையை வரையறுத்துக் கொண்டிருந்தார்கள். கொள்ளைக் கூட்டத்தினர் அவரவர்கள் எல்லைக்குள்ளிருந்து தங்கள் இச்சைப்படி ஆட்டையோ மாட்டையோ ஓட்டிக் கொண்டு வந்து விடுவார்கள். யாரும் ஏனென்று கேட்க முடியாது. ஆனால் தங்கள் எல்லைக்கு உட்பட்ட ஒரு சிறு தூசியைக்கூட வெளியார் எடுத்துச் செல்ல அனுமதிக்க மாட்டார்கள். பாதுகாப்பு விஷயத்தில் அவர்கள் கையாண்ட நீதி அது; ஏற்படுத்திக் கொண்டிருந்த வரன் முறை அது.

இன்னொரு கூட்டத்தினருக்குச்



சொந்தமான குடியானவர்களின் வயலைச் குறையாடித் தீ வைத்துப் போகக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டால், நெஞ்சில் சிறிதும் ஈவு இரக்கத்துக்கு இடம் அளிக்க மாட்டார்கள். ஆனால் தங்களை அண்டிப் பிழைக்கும் குடியானவர்களுக்கு அயலார்கள் தீங்கு இழைக்க முற்பட்டால் இலேசில் விடமாட்டார்கள். எதிரியை வெட்டு ஒன்று, துண்டு இரண்டாக் வெட்டிப் போடும் வரையில் அவர்களுடைய கத்தி பிடிக்கும் கைக்கு நிம்மதி ஏற்படாது. குழந்தைகளையோ, கிழவர்களையோ, பெண்களையோ கண்டு விட்டால், கொள்ளைக்கும் கொலைக்கும் துறுதுறுவென்று அலையும் கை தானாகவே ஓய்ந்து சாய்ந்து விடும். இப்படியாக ஒவ்வொரு கோஷ்டியும் தங்கள் நலன்களைப் பேணிப் பாதுகாத்து வந்தது.

**வ**த்ஸராஜின் பாட்டன் காலத்தில் அரசாங்கம் அவர்களுடைய உடைமைகளையும் உரிமைகளையும் தன் சுவாதீனப் படுத்திக் கொண்டது. சுயேச்சையாக வாழ்ந்தவர்களுக்கு அது சரியான அடிதானே? அந்த அநீதி காரணமாக உள்ளம் உடைந்து படுக்கையில் படுத்த வத்ஸராஜின் பாட்டன் அப்புறம் எழுந்திருக்கவில்லை. அவன் மகனின் உள்ளத்திலும் அந்த அநீதி அதிருப்தியாக நிலவி எஞ்சி நின்றது. எனவே, பெருங் காயம்வைத்த பாண்டமாகத் தந்தையின் பெருமதிப்புக்குப் பங்கம் வராமல் பாதிக் கொள்ளைக்காரனாகவும் பாதிக் குடியானவனாகவும் வாழ முயன்றான்; வாழவும் வாழ்ந்தான்.

இருந்தாலும் பாட்டன் காலத்தில் சொந்தமாயிருந்த கிராமம் தகப்பன் காலத்தில் சொந்தமென்று சொல்லிக் கொள்ளக் கூடிய நிலைமையில் இல்லை. அதனால் தன்னை அண்டிப் பிழைப்பவர்கள் என்று இல்லாமற் போய் விட்டதனால், பாதுகாக்கும் பொறுப்போ கடமையோ அவனுக்கு இல்லாமற் போய் விட்டது. எனவே, அவன் கொள்ளையையும் களவையும் அறவே விட்டு விட்டான். கல்வியறிவு பெற்று விடாமல் இருக்க வேண்டுமே என்பதற்காகவும் தகப்பன் காலத்துப் பெருமைக்குக் குந்தகம் விளைவிக்காமல் இருப்பதாகக் கண் துடைக்க வேண்டும் என்பதற்காகவும் அவனுக்கு அரசாங்கம் சிறிது நிலபுலன்களை வழங்கிற்று.



அதோடு பாதிக் கொள்ளைக்காரனாக இருந்த காலத்தில் அவன் கிராமத்து வியாபாரிகளையும் குடியானவர்களையும் அதட்டி உருட்டித் தன் தந்தையினுடையது என்று கருதப்படும் சில நிலப் பகுதிகளைப் பிடுங்கித் தன் வசப் படுத்திக் கொண்டிருந்தான்.

தொன்று தொட்ட காலமாக வந்த பழக்கம் சட்டென்று போய் விடுமா? வத்ஸராஜின் தந்தையையும் முகஸ்துதி செய்பவர்கள், அபயம் வேண்டி அண்டிப் பிழைக்க வருகிறவர்கள், வீடு தேடி வரும் விருந்தாளிகள் என்று பலர் சூழ்ந்திருந்தனர். அவர்களை அன்புடன் வரவேற்று உபசரிக்கும் பண்பு அவனிடம் கொஞ்சமும் குன்றாமல் இருந்து வந்தது. கொள்ளை – களவிலிருந்து வரும்படி கிடையாது. ஆனால் செலவுமட்டும் பழையபடியே இருந்தது. அதனால் நாளுக்கு நாள் கடன் அதிகரித்துக் கொண்டே போயிற்று. வாழையடி வாழையாக வந்த வெறியில் சில சமயம் அவன் மற்றவர்களுடைய நிலபுலன்களைத் தன்னுடையவையாகப் பாவிக்கத் தொடங்கி விடுவான். அந்த நிலபுலன்களை லேவாதேவிக்காரர்களிடம் அடமானமாக வைத்து விடுவான். சிற்சில சமயம் தன் தேவையை அநுசரித்து அதிகமான நிலத்தைக் குறைவான ரூபாய்க்குப் பந்தகமும் வைத்து விடுவான். நிலத்துக்குரியவர்களுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வரும். அவனிடம் உள்ள பயத்தினால் லேவாதேவிக்காரர்களிடம் பேசவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் விழிப்பார்கள்.

கிரிதர லேட் வத்ஸராஜுவுடைய தந்தையின் சொத்தை அவருக்கு வயதான காலத்தில் இப்படித்தான் கடன் கொடுத்துக் கடன் கொடுத்துத் தம் உடைமையாக்கிக் கொண்டிருந்தார்.

**வ**த்ஸராஜ் குழந்தைப் பருவத்தில் தலைவரின் மகனாகத்தான் வளர்ந்தான். போட்டி போட்டுக் கொண்டு குதிரை யோட்டுவது, வில் வித்தை, வாள் வித்தை, சிலம்பம், குஸ்தி முதலிய விளையாட்டுக்களைப் பழகுவது போன்ற காரியங்களில் ஈடுபட்டிருந்தான். தந்தையின் தொழிலுக்குத் தானும் உதவியாக இருந்தான். அதோடு காலத்துக்கேற்ற பல பழக்க வழக்கங்களும் அவனிடம் படிந்து விட்டன. அவன் கொஞ்சம் எழுதப் படிக்கக் கற்றிருந்தான். துதி பாடகர்களின் பக்கத்தில் உட்கார்ந்து தன் மூதாதையர்களின் அதிசயம் நிறைந்த கதைகளைக் கேட்டு மகிழ்ந்தான். புல்லாங்குழலும் வாயுமாகக் காடுகளில் சுற்றித் திரிந்தான். வயல் வேலைகளில் அதிக ஈடுபாடு கொள்ளா விட்டாலும் பெயரளவுக்கு அதில் அதிக ஆர்வம் காட்டுபவனைப் போல் நடந்து கொண்டான். அவன் இனத்தவர்களே அவனது பகட்டான வாழ்க்கையையும் வீர தீரப் பிரதாபத்தையும் அவன் எதிரிலேயே பிரமாதமாகப் புகழ்ந்தார்கள். அதைக் கேட்டு அவன் மெய்ம்மறந்து போனான். ஒரு தடவை அவன் தன்னந் தனியனாக ஒரே அடியில் சிறுத்தை யொன்றைத் தடிகொண்டு கொன்று போட்டிருந்தான்.

ஒரு தடவை அவன் தந்தையின் பழைய நண்பனான பூபதாஜி, அவன் தந்தையைப் பார்த்துப் போவதற்காக அவன் வீடு தேடி வந்திருந்தான். அந்தக் காலத்தில் பூபதாஜி பெருங் கொள்ளைக்காரன் என்று பெயர் பெற்றிருந்தான். இருவருமே தங்கள் தொழிலில் திறமைசாலிகள். அதனால் அவர்கள் நட்பு எவ்வித பங்கமும் ஏற்படாமல் நிலைபெற்றிருந்தது. பூபதாஜி நாளடைவில் விவசாயத்தில் இறங்கி விட்டான். உழைப்பில் நல்ல உற்சாகம் காட்டியதனால் அவனுக்கு விவசாயத்தில் நல்ல லாபமும் ஏற்படத் தொடங்கி யிருந்தது. வத்ஸராஜின் தந்தைக்கு விவசாயத்தில் அதிகமான ஈடுபாடு உண்டாகவில்லை. அதனால் அவனது பொருளாதார நிலை நன்கு அமையவில்லை. அவன் மிகுந்த கஷ்ட ஜீவனம் நடத்தி வந்தான். பூபதாஜி தன் நண்பனுக்கு விவசாயத்தில் ஈடுபடுமாறு படித்துப் படித்துச் சொல்வான். ஆனால் வத்ஸராஜின் தந்தைக்குச் சாகுபடியில் அக்கறையே ஏற்படவில்லை. 'ஆகட்டும்' என்று தலையாட்டுவானே தவிர ஆர்வத்துடன் செயலில் இறங்க மாட்டான்.

தன்னைப் பார்த்துப்போகவந்த பூபதாஜிக்கு வத்ஸராஜின் தந்தை ஆசார-உபசாரங்கள் செய்தான். நல்ல விருந்து வைத்தான். இருவரும் மகிழ்ச்சி வெறியில் ஆழ்ந்தனர். இருவருக்கும் எதைப் பேசுவது, எதைப் பேசக் கூடாது என்ற நினைவே ஒழிந்து விட்டது. மனம் போன போக்குப்படி பேசினர்; மூளைக்கும் நாக்குக்கும் கட்டுப்பாடு விதிக்க மறந்து பேசினர். அவர்கள் அப்படிப் பேசிக் கொண்டிருக்கும்பொழுது வத்ஸராஜ் ஏதோ வேலையாக அங்கே வந்தான். அவனைப் பார்த்த பூபதாஜி, "அண்ணே! பையன் தான் ஆளாகி விட்டான் போலிருக்கிறதே! காலத்தில் கல்யாணம் செய்து வைத்து விடக் கூடாதா?" என்று கேட்டான்.

"ஆமாம், ஆமாம். செய்துவிட வேண்டியது தான். பெண்கூடப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். இருந்தாலும் தகுந்த பெண்ணாகக் கிடைக்க வேண்டாமா?" என்றான் வத்ஸராஜின் தகப்பன்.

"தகுந்தது என்ன? தகாதது என்ன? கிடைக்கும் பெண்ணைப் பார்த்துக் கட்டிப் போடுவாயா? என்னமோ பேசுகிறாயே?" என்றான் பூபதாஜி.

என்னதான் கஷ்ட ஜீவனம் நடத்திய பொழுதிலும் வத்ஸராஜின் தந்தைக்குத் தன் பழம் பெருமையின் நினைவு மறக்கவில்லை. அதனால் பூபதாஜியின் அந்தப் பேச்சு அவனுக்குப் பிடிக்கவில்லை. பூபதாஜி ஏதோ குத்தலாகப் பேசுவதாகப் பட்டது. "ஏன், பூபதாஜி! உன் மகளும் பெரியவளாகி இருப்பாளே! அவளை நம் வத்ஸராஜுவுக்குக் கட்டிக் கொடுத்து விடேன். நீ பெண் தருவதா யிருந்தால், வெளியில் போய்ப் பெண் தேவலையா, இடம் தேவலையா என்றெல்லாம் பார்க்கவேண்டிய சிரமம் எனக்கு ஏற்படாது. பார்!" என்றான் வத்ஸராஜின் தகப்பன்.

"என்ன அண்ணே சொல்கிறாய்? என் பெண்ணை நான் கொடுப்பதா யிருந்தால்

பனிமூடி இருக்கும் இமயமலையிலிருந்து

# Parry's SWEETS

# பாரீஸ் மிட்டாய்கள்

கன்னியா குமரி வரை




## இந்தியா முழுவதும் புத்தம் புதியனவாக கிடைக்கின்றன

இந்தியாவில் எந்த இடத்திலிருந்தாலும் உங்களுக்கு பாரீஸ் மிட்டாய்கள் புத்தம் புதியனவாக நீங்கள் வாங்கும் பொழுது உங்களுக்குக் கிடைக்குமென நிச்சயமாய் நம்பலாம். பாரீஸ் மிட்டாய்கள் காற்றுப்புக முடியாத விசேஷ டப்பாக்களில் அடைக்கப்படுகின்றன. இதனால் புதியனவையும் சுத்தமானதாயும், நறுமணத்துடனும் இருக்கின்றன.

விசேஷமான 8 வித மிட்டாய்கள் கிடைக்கின்றன.

தயாரிப்பவர்கள் :
**பாரீஸ் கன்பெக்ஷனரி லிமிடெட்**
நெல்லிக்குப்பம்

மானேஜிங் ஏஜண்டுகள்
**பாரி & கம்பெனி லிமிடெட், மதராஸ்**

அவனை வைத்துப் போஷிக்க வேண்டிய பணம்-பவிஷு, சோறு-சொத்து முதலியவை வேண்டாமா? அதை முதலில் சம்பாதித்துக் கொள். அப்புறம் என் பெண்ணைச் சம்பந்தம் செய்து கொள்வதைப் பற்றி யோசித்துக் கொள்ளலாம்!'' என்றான் பூபதாஜி.

இதைக் கேட்டதும் வத்ஸராஜின் தந்தை தன் நிலைக்கு வந்தான். மகிழ்ச்சி வெறியெல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது. உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால் வரை அக்கினித் திராவகம் ஓடியது போலிருந்தது. பக்கத்தில் ஏதாவது ஆயுதம் இருந்தால் அவன் பூபதாஜியை அந்த இடத்திலேயே கொன்று போட்டிருப்பான். அதோடு பூபதாஜி விருந்தாளியாக வந்திருந்தான். வந்த விருந்தாளியை வதைக்கலாமா? அதை எண்ணிப் பார்த்தவன் தன் மனத்தை மிகவும் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டான். இருந்தாலும் அவன் முகம் கோவைப் பழமாகச் சிவந்து விட்டது. அதைக் கண்ணுற்ற பூபதாஜிக்கு முன்பின் யோசனையின்றித் தான் பேசியது பெருந்தவறு என்று பட்டது. என்ன இருந்தாலும் அவன் பெண்ணைப் பெற்றவன் அல்லவா? அதிகமாக மண்டைக் கர்வத்தைக் காட்டினால் அது பின்னால் விபரீதமாக முடியக் கூடுமே! அதைப் பற்றி இனி அவன் சிந்தித்து என்ன பயன்? இந்த உலகத்தில்தான் வாயிலிருந்து வெளியேறிய சொற்களும் வில்லிலிருந்து விடுபட்ட அம்பும் திரும்பி வருவதில்லையே!

மனிதன் ஏழ்மையைப் பொறுத்துக் கொள்வான். அதனால் ஏற்படும் கஷ்ட நஷ்டங்களையும் இன்ப துன்பங்களையும் பொறுத்துக் கொள்வான். ஆனால் அதைக் குறிப்பிட்டுக் குத்திக் காட்டி அவன் திறமையை யாராவது சுட்டிக் காட்டி மட்டம் தட்டினால் அதை அவனால் பொறுக்க முடியாது. உனக்கு ஒருவரை வைத்துப் போஷிக்கும் திராணி கிடையாது என்று ஒருவன் வெளிப்படையாகச் சொன்னால், தன்மானம் படைத்த எந்த ஆண் மகன் தான் சகிப்பான்?

வத்ஸராஜுக்குத் தன் மகளை மணம் செய்து கொடுக்கும் விஷயத்தில் பூபதாஜிக்குச் சம்மதம் இல்லை என்று சொல்லி விடுவதற்கில்லை. ஏதோ ஒரு வேகத்தில் அப்படி அவன் வத்ஸராஜின் ஏழ்மையை எள்ளி நகையாடி விட்டானே யொழியப் பின்னால் பச்சாத்தாபம்தான் பட்டான். ஆயினும் நல்ல ருசிகரமான பொங்கலில் நடுவிலே கல் அகப்பட்டு விட்டால் எப்படியிருக்குமோ, அப்படியாகி விட்டது. அதன் பயனாக அவர்கள் பேச்சு தானாகவே அத்துடன் முற்றுப்புள்ளி வைத்துக்கொண்டு விட்டது. எப்பொழுது மாலை வரப் போகிறது என்று எதிர்பார்த்துப் பூபதாஜியும் விடைபெற்றுக் கொண்டு விடு சென்றான்.

பூபதாஜி விடைபெற்றுக் கொண்டு சென்ற பின், வத்ஸராஜ் தன் தந்தையிடம் சென்று, "அப்பா! நீங்கள் சொன்னால் இவர் பெண்ணைத் தூக்கி வந்து திருமணம் செய்து கொண்டு விடுகிறேன்!" என்றான்.

"இதற்கு என்னிடம் என்னடா கேள்வி? உனக்குத் தோன்றியதைச் செய்வதுதானே?" என்று எரிந்து விழுந்தான் தந்தை.

அதற்குப்பின் நடந்த கதை வெகு சுருக்கமானதுதான். ஒரு நாள் இரவோடு இரவாகவே குதிரை மீது சென்று பூபதாஜியின் மகள் ராதாவை வத்ஸராஜ் தூக்கிக்கொண்டு வந்து விட்டான். பூபதாஜியின் மகன் வத்ஸராஜுக்கு மிகவும் வேண்டியவன். இக் காரியத்தில் வத்ஸராஜுக்கு அவனுடைய அநுதாபமும் ஒத்துழைப்பும் கிடைத்தன. ஏற்கெனவே வத்ஸராஜுக்கு ராதாவினிடம் அளவற்ற அன்பு. ராதாவே வத்ஸராஜை எத்தனையோ தடவை பார்த்திருந்தாள். அவனுடைய உடல் வலிமை பற்றிய பல புகழுரைகளையும் கேள்விப் பட்டிருந்தாள். காணாமலே காதல் என்பார்களே, அது போல் அவள் வத்ஸராஜின் பெருமையைக் கேட்டதிலிருந்தே அவனிடம் மனத்தைப் பறி கொடுத்திருந்தாள். அவனைப் பார்க்கும்

## கதை கட்டுரை அனுப்புவோருக்கு

நல்ல காகிதத்தில் இடையீடுகள் விட்டு ஒரே பக்கத்தில் எழுதி அனுப்பினால் நலம். பிரசுரமாகாத எழுத்துக்களைத் திரும்பப் பெற்றுக் கொள்ள விரும்புவோர், போதிய தபால் - தலைகள் உடன் அனுப்ப வேண்டும்.

தாங்கள் அனுப்பும் எழுத்தோடு, அல்லது தனியான கார்டில், குறிப்பிட்ட எழுத்து தமது சொந்தக் கற்பனைதான் என்றும், இது அல்லது இதைத் தழுவியது தமிழில் அல்லது வேறு மொழியில் வெளியாகவில்லை என்றும் ஒரு உறுதிமொழி அனுப்ப வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறோம்.

ஆசிரியர்

வாய்ப்புக் கிடைத்த பிறகு அவளுடைய காதல் மேலும் வலுப்பெற்று விட்டது. எனவே, வத்ஸராஜுக்குத் தான் எடுத்துக் கொண்ட வேலையைச் செய்து முடிப்பதில் அதிகமான சிரமம் எதுவும் ஏற்படவில்லை.

ஆனால் அது பூபதாஜிக்கு அவமானம் தானே? அதன் காரணமாக ஏற்பட்ட ஆத்திரம் அவனுக்குச் சிறிதும் தணியவில்லை. அவனை அவமானப் படுத்த வேண்டும் என்பதற்காகத்தானே வத்ஸராஜ் அவன் மகளைக் கடத்திக் கொண்டு போய்க் கல்யாணம் செய்து கொண்டான்! பூபதாஜியின் அவமானத்தை இன்னும் பன்மடங்காக அதிகப் படுத்தவேதானோ என்னவோ, ராதாவும் எந்த விதமான எதிர்ப்பும் இன்றி அவனை மகிழ்ச்சியுடன் மணந்து கொண்டு விட்டாள்! அவமான உணர்ச்சி தாளாமல் போகவே, அவன் வெறியனாகி, "இன்று முதல் ராதா என் பெண் இல்லை. என் உயிர் போவதாயிருந்தாலும் நான் அவள் முகத்தைப் பார்க்கப் போவதில்லை. வந்தது வரட்டும்!" என்று கத்தினான். மனத்தில் பற்பல முடிவுகள் கட்டி அழித்தான். அதற்காக அஞ்சி அவன் சொல்லைக் கேட்க யாராவது முன் வந்தால்தானே?

வத்ஸராஜின் தந்தை கொஞ்ச காலம் உயிர் வாழ்ந்து, பின்னர் மண்ணுலகை விட்டு மறைந்தான். பெண்ணுடனும் மருமகனுடனும் பூபதாஜிக்கு ஒற்றுமை உண்டு பண்ண வேண்டும் என்பதற்காக ராதாவின் தாயும் தமையனும் எத்தனையோ முயன்றார்கள். ஆரம்பத்தில் ஆஹூம், ஊஹூம் என்று மறுத்த பூபதாஜியின் மனம் மெதுவாகக் கரைந்தது. 'என்ன இருந்தாலும் நம் மகள் நல்ல வீரனைத்தானே மணந்து கொண்டாள்!' என்று தன் மனத்தைச் சமாதானப் படுத்திக் கொண்டான். மனம் மென்மையுற்ற போதிலும் அவமான உணர்ச்சி அடங்க மறுத்தது. அது இலேசில் அடங்கி விடவில்லை. அதனால் "என் பெண் பிச்சை எடுத்தாலும் நான் அவள் முகத்தைப் பார்க்க மாட்டேன்!" என்றே வீறாப்புப் பேசிக் கொண்டிருந்தான்.

ராதாவும் பூபதாஜியின் பெண்தானே? அவள் தாயும் அவளைப் போலவே பூபதாஜியினால் கடத்தி வந்து கல்யாணம் செய்து கொள்ளப்பட்டவள்தானே? புலிக்குப் பிறந்தது பூனையாகுமா என்பது போல் அவளும் வெகு அசட்டையாக இருந்தாள். 'எத்தனை தான் கஷ்டம் ஏற்பட்டாலும் என் தந்தையின் வீட்டுக்கு என் நிழலைக்கூடப் போக விட மாட்டேன்!' என்ற பிடிவாதத்தைக் கடைசி வரை கடைப்பிடிக்க முயன்றாள்.

இதுதான் வத்ஸராஜுக்கும் ராதாவுக்கும் திருமணம் நடந்த கதை. பழைய காலத்துப் பழக்க வழக்கப்படி வத்ஸராஜும் ராதாவும் காதல் கடிமணம் புரிந்து கொண்டார்கள். அவர்களது காதல் கடிமணம், கதை கவிதைகளில் வரும் இந்தக் காலத்துக் காதலர்களின் காதலைப்போல் கறிகாய்த் தோட்டத்திலோ கடற்கரையிலோ விளைந்ததல்ல. அவர்களது அந்தக் காதல் கூட்டுறவிலே கூரிய கத்திகள் பளபளத்தன; திமிர் கொண்ட குதிரைகளின் கனைப்புக் குரல்கள் காதைத் துளைத்தன.

அந்தக் காலத்தில் பழம் பெரும் பாரத நாட்டிலே இத்தகைய திருமணங்கள் எத்தனை நடந்ததில்லை? பிருத்வி ராஜுக்குச் சம்யுக்தையைத் திருமணம் செய்து தர முடியாது என்று ஜயசந்திரன் வீறாப்புப் பேசிய பொழுது பிருத்விராஜ் அவன் கண்களில் மண்ணைத் தூவித் தன் குதிரையின் மேல் சம்யுக்தையைத் தூக்கிச் சென்றான் அல்லவா?

வாலிப முறுக்கேறிய வத்ஸராஜ் இத்தகைய வீரக் காதல்களைப் பற்றி எத்தனையெத்தனையோ கதைகள் கேட்டிருந்தான். தான் ராதாவை அந்த முறையில் மணக்க வேண்டிவரும் என்று அவன் கனவிலும் கருதவில்லை. அதே சம்பவம் அவன் வாழ்க்கையில் நடந்தபொழுது அவனுக்கு ஏற்பட்ட பெருமையைச் சொல்லி முடியாது. தன்னையும் ராதாவையும் அதே பிருத்விராஜ்–சம்யுக்தையாக எண்ணி மனம் மகிழ்ந்தான். இப்படி வீரத்திலே பிறந்த அவர்களது காதல் வாழ்க்கை இன்பமாக ஓடியது. (தொடரும்)



போட்டோக் கலையிலும், சினிமா படப் பிடிப்புக் கலையிலும் நாம் வெகுவாக முன்னேறி வருகிறோம். வர்ணப் படங்கள் எடுக்கலாமா என்று யோசித்து வருகிறோம். ஏற்கெனவே நமது பட உலகில் கேவா கலர் படங்கள் எடுக்க ஆரம்பமாகி விட்டது. இத்தகைய சூழ்நிலையில் கேவார்ட் கம்பெனியின் டைரக்டரும் ஜெனரல் கமர்ஷியல் மானேஜருமான டாக்டர் ஏ. பீகன் அவர்கள், நமது நாட்டில் போட்டோக் கலையும், சினிமா படப் பிடிப்புக் கலையும் அடைந்துள்ள அபிவிருத்திகளை நேரில் அறிந்து கொள்ள நம் நாட்டுக்கு விஜயம் செய்திருக்கிறார். டாக்டர் பீகன் 1946-ம் ஆண்டில் கேவார்ட் கம்பெனியில் சேர்ந்து இன்று உயரிய பதவியை அடைந்திருக்கிறார். சினிமா, போட்டோத் துறைகளில் மிக்க அனுபவம் வாய்ந்தவர். அவருக்கு நல்வரவு கூறி வரவேற்கிறோம்.

# இந்த பிரசித்திபெற்ற க்ரீம்கள் உங்கள் சருமத்திற்கு மிகப் பொருத்தமானவை!

**உங்களைச் சுற்றிலுமுள்ள சீதோஷ்ண நிலைக்கும் உகந்தவை**

இவ்விரண்டு அற்புதமான பாண்ட்ஸ் அழகு சாதனங்களை உபயோகியுங்கள்! அவை உங்கள் சருமத்திற்கு ஏற்றவை; இரண்டும் உங்கள் வதனத்தை சீதோஷ்ண நிலையின் கொடுமையினின்று பாதுகாத்து, சருமத்தை நிர்மலமாக, மென்மையாக வைத்திருக்கும்.




வரண்ட சீதோஷ்ண நிலை உங்கள் முகப்பொலிவைப் பாழ்படுத்தினால் — பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம் உங்களுக்குத் தேவை.. அதிலுள்ள செழிப்பான எண்ணெய்கள் சருமத்திற்கு சமனமூட்டி, கடுமையான வெயில் மற்றும் வரண்ட காற்றினால் அது வாடி வதங்காமல் காப்பாற்றுகின்றன.




உங்கள் சருமம் இயற்கையாகவே எண்ணெய் பசையுடையதானால், அல்லது உஷ்ணமும் ஈரக்கசப்பும் மிகுந்த சூழ்நிலையின் பிசுக்கடையும் பட்சத்தில்—பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகிக்கவும். இக்குளுமையான மெல்லிய க்ரீம் சருமத் துவாரங்களில் படியும் பிசுக்கையும் அழிந்த ஜீவாணுக்களையும் அகற்றி, உங்கள் முகத்திற்கு சௌமிய பாதுகாப்பளிக்கிறது.

பாண்ட்ஸ் க்ரீம்களை தவறாமல் உபயோகியுங்கள். சொற்ப நாட்களில் உங்கள் சருமம் புதுமையும் அழகும் செறிந்து விளங்குவதைக் காண்பீர்கள்— உணரவும் செய்வீர்கள்!



## உலகில் எழிலரசிகள் உபயோகிக்கும் க்ரீம்கள்

# பாண்ட்ஸ்

கோல்ட் க்ரீம்
வானிஷிங் க்ரீம்




P. 9947

நீங்கள் இதுவரை அருந்தாத

# மிகச்சிறந்த காப்பி...

...ஆயினும் மிகவும் நயமான விலையில்!









சுத்தமான காப்பி வாங்குவது அனுகூலமானது. அது உங்களுக்கு வேண்டிய நறுமணத்தையும், தரத்தையும், அதிக அளவுகாப்பியையும் கொடுக்கிறது. ஆதலால்தான் ஆயிரக்கணக்கான ஜனங்கள் ஸ்டேன்ஸ் சிகப்பு லேபிள் சுத்தமான காப்பியையே வாங்குகிறார்கள். அது காற்றுப்புகாமல் பாக் செய்யப்பட்டு புத்தம்புதியதாக ½ பவுண்ட், 1 பவுண்ட், 3 பவுண்ட் 7 பவுண்ட் டின்களில் கிடைக்கிறது. இன்றே ஒரு டின் வாங்குங்கள்.

தி யுனைடெட் காப்பி சப்ளை
கம்பெனி லிட்.
கோயம்புத்தூர், தென் இந்தியா




**Stanes**

**ஸ்டேன்ஸ் சிகப்பு லேபிள்**
**சுத்தமான காப்பி**
**எல்லோரும் வாங்கக்கூடிய**
**நல்ல காப்பி**

STC

சென்னை பிரதிநிதி: மிஸ்டர் எல். ஆர். மிட்ச்சல் 2, அட்கின்ஸன் ரோடு, வேப்பேரி, சென்னை
சென்னை ஸ்டாக்கிஸ்ட்: மெஸர்ஸ் ஸேவாய், புரசவாக்கம் ஹைரோடு, வேப்பேரி, சென்னை




இரவின் நிசப்தத்தைப் பிளந்து கொண்டு ஒரீச்சிட்ட ஆந்தையின் ஒற்றைக் குரல் இருளப்பனின் உடம்பை ஒரு உலுப்பு உலுப்பியது. கும்மிருட்டுக்கு மத்தியில் காஜாமலைப் பங்களாவின் தாழ்வாரத்தில் கண்களைப் பொத்திய வண்ணம் குழம்பிக் கொண்டிருந்த இருளப்பன் சட்டென்று விழித்துப் பார்த்தான். கொஞ்ச நேரத்துக்கு முன்னால் படபடவென்று துடித்துக் கொண்டிருந்த ஹரிகேன் விளக்கு அணைந்து போய் இருள் இன்னும் கலங்கி மண்டியாக இருந்தது. கண்ணைச் செருகிக் கொண்டு வந்த தூக்கம் எங்கோ பறந்து போயிற்று. ஆனால்...! இதுவரையும் அவன் நிம்மதியைக் குலைத்துக் கொண்டிருந்த கேள்வி இன்னும் பூதாகாரமாக விரிந்து இருளுக்கு மத்தியில் அவன் மனக்கண் முன் பூச்சாண்டி காட்டியது. இருளப்பன் மனம் மீண்டும் குழம்பியது.

காற்றோடு கலந்து மறைந்து போன எஜமான் மதுரநாயகத்தின் கடுமையான குரல், எங்கெங்கெல்லாமோ சுற்றி விட்டு மீண்டும் இப்போது அவன் காதில் மெதுவாக ஒலிப்பதுபோல் ஒரு பிரமை ஏற்பட்டது அவனுக்கு.

"இந்தா பாரு, இருளா! இன்னும் ரெண்டு வருஷத்துக்கு இந்தக் கல்யாணப் பேச்சையே எடுத்திடாதே. உன்னை ராக்காவலுக்குப் போட்டு இன்னும் ஒரு மாசம்கூட சரியாக ஆகலை, அதற்குள்ளே உனக்கு ஒரு கால்கட்டைப் போடச் சொல்றயா! அப்புறம் 'அவளுக்கு'க் காவல் இருப்பயா, இல்லை என் பங்களாவைக் கவனிச்சுக்கிட்டு இருப்பயா!"

ஆமாம்! அநாதையான தன்னைச் சிறு வயதிலிருந்து ஆதரித்து ஆளாக்கி விட்ட எஜமானரின் பேச்சில் உண்மையும் உரிமையும் தொனிப்பதை இருளப்பன் ஒரு கணம் உணர்ந்தான். சிற்சில சமயங்களில் என்னதான் கொடுமையாக நடந்து கொண்டாலும்—ஏன், ஒரு வேளை இரு வேளைகளில் பட்டினி கூடப் போட்டு விட்டாலும் ஒரு முறையாவது "வெளியே போடா, நாயே!" என்று கூறியது கிடையாதல்லவா!

மறு கணம்......

"சே...! என்ன மனிதன்! அல்லும் பகலும் மாடாக உழைக்கிறேன். நாயாக நன்றி செலுத்துகிறேன். இதெல்லாம் கேவலம் இந்த ஒரு சாண் வயிற்றைக் கழுவுகிறதற்குத்தானா! 'மனசு' என்று ஒன்று இருக்கிறதே, அதை ஏன் மதுரநாயகம் மறந்து போய் விட்டார்! இந்தப் பதினைந்து வருஷம் ஓடாகத் தேய்ந்த பிறகு அவரிடம் கேட்ட முதல் வேண்டுகோள் இது! இதற்கே முட்டுக் கட்டையா! அப்படியானால் இதுவரையிலும் 'மதுரநாயகம்' என்ற கட்டாந் தரையிலா நம்முடைய உழைப்பையும் விசுவாசத்தையும் சிந்தி வந்திருக்கிறோம்! இல்லையில்லை. கட்டாந்தரை இல்லை! இதோ இந்தக் காஜாமலைப் பங்களாவைச் சுற்றிலும் வெறும் சரம்பு வெளியும் கட்டாந் தரையுமாகத் தான் இருக்கிறது. அதில் கூட ஒன்றிரண்டு கருவேல மரங்கள் தலை தூக்கி நிற்கின்றனவே!

அப்படியானால்!

"இந்தக் காவல்காரப் பிழைப்பைத் தலை முழுகி விட்டுத் தங்கம்மாளைக் கைப்பிடிக்க வேண்டியதுதான்!"

இருளப்பன் மனக் குறளி மீண்டும் பம்பியது. தூரத்தில் அவன் கறுப்பு நாயின் குரைப்பொலி கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தான். கன்னங்கரேலென்று இருளைக் கிழித்துக் கொண்டு ஓடி வந்த அவன் நாய் காலடியில் வாலைக் குழைத்து நின்றது!

"சே! எஜமானுக்குத் துரோகம் நினைப்பதா! இந்த உடம்பு பூராவும் அவர் போட்ட உப்பில் அல்லவா வளர்ந்தது!" அந்த 'உப்பு' அவன் மனத்தில் இப்போது நன்றாக உறைப்பது போல் இருந்தது!

இரவு பூராவும் நிம்மதியின்றிக் குழம்பியதால் உடம்பில் தெம்பில்லாமல், விடியற்காலையில் சோர்வுடன் வைக்கோல் போருக்குப் பின்னால் புரி

போட்டுக்கொண்டிருந்த இருளப்பனின் கண்களைப் பின்னலிருந்து யாரோ பொத்தினர்கள். கையை விடுவித்துக் கொண்டு பார்த்தான். தங்கம்மா தான் நின்று கொண்டிருந்தாள்.

"அடப் பாவமே! இதுக்கா கவலைப்பட்டுக் கிட்டிருந்திங்க! எல்லாம் நானே முடிச்சிட்டேன். நேற்றே எஜமான் காலிலே விழுந்து உத்தரவு வாங்கியாகி விட்டது!" என்று பெருமிதத்துடன் கூறியவள், "நீங்க சொன்னப்பலே எசமான் எங்கிட்ட ஒண்ணும் எரிஞ்சு விழலே; எவ்வளவு அன்பாகப் பேசினர், தெரியுமா! எதற்கும் முக ராசி வேண்டாமா!" என்று தன் அற்புத சாதனையை வார்த்தைகளிலே கொட்டினள்.

இருளப்பன் தன்னையே மறந்து போய் நின்று கொண்டிருந்தான்!

★

மதுர நாயகம் திருச்சியிலே பெரிய இரும்புக் கடை முதலாளி. பெரிய லட்சாதிபதி. கடை வைத்த புதிதில் தேனிரும்பாக இருந்த அவருடைய மனம் வரவர உருக்காகிக் கொண்டே வந்தது.

இளமையிலேயே பெற்றோர்களை இழந்து விட்டபடியால் மாதா-பிதாக்களின் அன்பு அரவணைப்பில் திளைக்காத உடல்; மணந்து கொண்ட மறு வருஷமே மனைவியைப் பறிகொடுத்து விட்டுக் காதல் கருகிக் காளுய்ப் பறந்து உலர்ந்து விட்ட நெஞ்சம்; உறவினரை ஆதரித்து அணைக்காத கரங்கள்—இவைகள்தான் மதுரநாயகம் என்ற உருவாக அவதரித்துள்ளது என்று அவருடைய நெருங்கிய நண்பர்கள் கூறுவார்கள். அவர்கள் சொல்வது கூட முற்றிலும் உண்மைதான் என்பதற்கு அத்தாட்சியாக ஊருக்கு வெளியே இரண்டு மைல் தூரத்திலுள்ள காஜாமலையில் தன்னந்தனியே ஒற்றைக் காட்டு ஓரியைப்போல் நின்று கொண்டிருந்தது அவருடைய பங்களா!



இப்பேர்ப்பட்ட எஜமானரிடம் வேலை செய்வதற்காகவே பிறவி யெடுத்தவன் இருளப்பன். இல்லாவிட்டால் பத்து வயதிலேயே அவனை அவன் தாயார் அநாதையாக விட்டு விட்டுக் கண்களை மூடுவாளா! அன்றையிலிருந்து இருளப்பன் மதுரநாயகத்திடம்தான் வேலை பார்த்து வருகிறான். அவனிடமிருந்து அவர் எதிர்பார்ப்பதெல்லாம் ஒன்றே ஒன்றுதான் — உழைப்பு! ஆனல் அன்போ! — அது அவருக்கு அநாவசியமான சரக்கு! அவரிடம் இல்லாததும் கூட. பெரியவனை பின்பும் இருளப்பனைப் பங்களாவுக்கு இரவு 'வாட்ச்மன்' ஆகப் போட்டதற்கு அது தான் காரணம். ராஜபாளையம் வேட்டை நாய் ஒன்றை வளர்த்தால் காவலுக்கு எவ்வளவோ கெட்டிதான். இரண்டாழந் சோற்றைக்கூடப் போட்டு விடலாம். ஆனல் ஆளைக் கண்டதும் அதன் வால் ஆடுவதற்கு ஒரு துளி அன்பாவது வேண்டுமே, அதற்குப் பாவம் மதுரநாயகம் எங்கே போவார்!

இளம் வயதிலிருந்தே பழக்கப்பட்ட இருளப்பனுக்கு மதுரநாயகத்தின் கண்டிப்பும், அடிமை போல் ஏற்படும் அவமான உணர்ச்சியும் அவ்வளவாகத் தோற்ற வில்லை. தானுண்டு தன் வேலையுண்டு என்று அந்தப் பங்களாவுக்குள்ளேயே வளைய வளைய வந்தான் அவன். வெளியுலகம் அவனைப் பொறுத்த வரையில் இருட்டாகவே இருந்தது. இத்தனை தனிமைக்கு மத்தியிலும் அவன் மேல் அன்பு செலுத்த—அவனால் அன்பு செலுத்தப்பட யாருமே இல்லையா என்றால் அதற்காக இரண்டு ஜீவன்கள் உண்டு. ஒன்று அவன் அன்போடு வளர்க்கும் கறுப்பு நாய்க் குட்டியிலிருந்தே அவனோடு ஒன்றி விட்ட உயிர்த்துணை அது! இன்னொன்று தங்கம்மா. பெற்றோர்களை இழந்த பின்பு பாட்டியால் பராமரிக்கப்படும் பைங்கொடி அவள்!

இருளப்பன் அவளைச் சந்தித்ததே ஒரு ரஸமான சம்பவம். ஒரு நாள் தங்கம்மா தெரியாத்தனமாகக் கையில் ஒரு கொட்டாங்கச்சியுடன் வேப்பமுத்துப் பொறுக்குவதற்குக் காம்பவுண்டுக்குள் நுழைந்து விட்டாள். இருளப்பன் அவளை விரட்டியடித்ததுமல்லாமல் ஏற்கெனவே அவள் சேகரித்து வைத்திருந்த முத்துக்களையும் தட்டிப் பறித்துக் கொண்டான். ஆனல் அவள் போய் வெகு நேரத்துக்குப் பிறகுதான் அவள் தன் மனத்தையே பறித்துக்கொண்டு போய் விட்டாள் என்ற விஷயம் அவனுக்குத் தெரிய வந்தது.

"தங்கம்மா பொல்லாத கள்ளிதான். எசமானிடமே தன் கருத்தை வெளியிட்டுக் காரியத்தை முடித்துக் கொண்டாளே!" என்று இப்போது வைக்கோல்புரியுடன் தன் நினைவையும் சேர்த்துத் திரித்தான் இருளப்பன்!

★

அலையற்றுப் பரந்து பாசிபடலம் படர்ந்த தடாகத்திலே தாமரை மொட்டொன்று தலை தூக்கியதைப் போல காஜாமலைப் பங்களாவின் எல்லைக்குள்ளே காலெடுத்து வைத்தாள் தங்கம்மா!

வானத்தை நோக்கி நிமிர்ந்து நின்ற அந்த பங்களாவின் தென் பக்கத்தில் நாற்புறமும் குழை மண் சுவர் எழுப்பி மேலே கூரை வேய்ந்த குடிசை ஒன்றை அமைத்தான் இருளப்பன். இருளப்பன் வாழ்வு ஒளிப் பிழம்பாகித் தங்கம்மாவின் அன்பு வெள்ளத்திலே மிதந்தது. புது மனிதனாக மூன்றிலும் பன் மடங்கு ஊக்கத்துடன் தன் கடமைகளை விசுவாசத்துடன் செய்து வந்தான். இத்தகைய இன்ப வாழ்வுக்கு இடமளித்த எதுமானை எண்ணியதும் அவன் உள்ளம் நன்றிப்பெருக்கால் விம்மியது! அவன் வளர்த்து வந்த கறுப்பு நாய்கூட எஜமானின் புதுவாழ்வைக் கண்டு பூரித்துப் போனதோ என்னவோ, சரியாகச் சாப்பிடாமல் கூடக் கொழு கொழுவென்றிருந்தது. பாவம், நன்றியுள்ள பிராணி!

ஆனல் மதுரநாயகமோ!

வியாபாரம் செழித்து ஓங்கியது. செல்வமோ விண்ணுக்கு ஏறியது! ஆனல் அவர் போக்கில்

ரு திடீர் மாற்றம்! எதை நிறைவு நிறைவு ன்று இதுகாறும் எண்ணி வந்தாரோ அந்த ணம் இப்போது காலியாக, சூன்யமாக இருப்ப ாக உணர்ந்தார். இப்பொழுதெல்லாம் பளபளக் கும் பவுனைக் கொட்டி எண்ணும் பொழுது பணம்' என்ற ஞாபகமே வருவதில்லை; பால் லவின் மோன வாகினிதான் அவரைக் கிறு றுக்கச் செய்யும்! தூக்கம் அவர் கண்களைத் தொட மறுத்தது. இரவெல்லாம் ஒரே சிந்தனை சிந்தனை, சிந்தனை!

ஏன் இந்த மாறுதல்!

எப்படி அவ்வளவு சுலபமாகப் பதில் சொல்லி விட முடியும்! மண் குடிசைக்குள் மந்தமாருதமாகப் புகுந்த மெல்லிய காற்று மாடியறைகளில் அனல் காற்றாக வீசினால்...! பூரண சந்திரிகையின் பொன் கதிர்கள் ஒரே காம்பவுண்டுக்குள் ஓரவஞ்சகமாக ஓரிடத்தில் குளுமையான சந்தனத்தையும் மற்றோரிடத்தில் அக்னி திராவகத்தையும் கொண்டு வந்து பெய்வது என்றால்! இத்தகைய எண்ணங்களின் குமைப்பிலே ஒவ்வொரு நாளும் நீறிக் கொண்டிருந்தார் மதுரநாயகம். பலவீனம் அவரை ஓட ஓட விரட்டியது. படுத்தாலோ! பஞ்சு மெத்தைக்கு எப்படிக் கருவேல முட்கள் முளைக்க முடியும் என்று பெருமூச்செறிந்தார்.

அன்று மதுரநாயகம் வியாபார விஷயமாக வெளியூருக்குப் போக வேண்டி வந்தது. காரியஸ்தரை அனுப்புபவர் தாமே புறப்பட்டார். தங்கம்மாவும் இருளப்பனும் வாசல் வரை வந்து அவரை வழியனுப்பினர்.

போகும் பொழுது மதுரநாயகம் முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு, "இருளா, பங்களாவை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். நான் வருகிற வரைக்கும் கண்களைப் பொத்தக் கூடாது!" என்று கூறி விட்டுப் போய் விட்டார். எஜமானின் இளைத்த உடம்பைப் பார்த்த பொழுது இருளப்பனுக்கு என்னவோ செய்வது போல் இருந்தது.

நாட்கள் ஓடி மறைந்தன.

மூன்றாம் நாள் இரவு. நடுச்சாமம் இருக்கும். முதல் நாள் விடிய விடியக் கண்ணுறக்கமில்லாமல் காவல் காத்தபடியால் இருளப்பனுக்கு இப்போது கண்ணைச் சுற்றிக் கொண்டு வந்தது.

தன்னையும் மீறிய அசதியால் சற்று கண்ணயர்ந்தான். அப்போது ஒரு கனவு கண்டான் இருளப்பன். யாரோ ஒருவன் தன் மண் குடிசைச் சுவரில் கன்னம் வைத்துக் கொண்டிருந்தான். உடனே "ஐயோ திருடன்!" என்று கூவிக்கொண்டு ஒரே பாய்ச்சலில் அவன் மேல் பாய்ந்து அப்படியே ஆவிச் சேர்த்துக் கட்டிக் கொள்கிறான். மறு கணம் அவன் முகத்தைப் பார்த்த இருளப்பன் அப்படியே தீயை மிதித்தவன் போல் நின்று விடுகிறான். "யார் எசமானு!" என்ற வார்த்தைகள் அவன் வாயிலிருந்து வெடிக்கின்றன.

சட்டென்று கனவு கலைகிறது. மின் அதிர்ச்சி தாக்கப் பெற்றவனைப் போலப் பதறி எழுந்தான் இருளப்பன். எதிரே ஒரே இருள்.

"எல்லாம் மனப்பிராந்தி" என்று முனகிக் கொண்டு மீண்டும் தலையைச் சாய்க்கப் போனவன், பங்களாவின் கொல்லைப் பக்கத்துச் சுவரில் பெருச்சாளி பிறாண்டுவதைப் போல சப்தம் கேட்பதைத் தொடர்ந்து நாய் உறுமும் குரலும் கேட்கவே விழுந்தடித்துத் தடியை எடுத்துக் கொண்டு ஓடினான்.

நடப்பதெல்லாம் மகேந்திர ஜாலம் போல் இருந்தது. சடசடவென்று கழிகள் ஒன்றோடொன்று மோதிச் சிதறும் ஒலியும், நாயின் "ளொள்...ளொள்" என்ற உக்கிரமான குரைப் பொலியும் அந்தப் பிராந்தியத்தின் அமைதியைக் குலைத்தன. தங்கம்மா அபயக் கூச்சலிட்டாள்.

மன்னார்புரத்திலிருந்து அந்நேரத்தில் காஜா மலைக்குப் பால் கொண்டு வரும் ஆயர்கள் சிலர் இந்தக் கூக்குரலைக் கேட்டுப் பங்களாவுக்குள் ஓடி வந்தனர். ஆள் அரவம் கேட்டதும் திருடர்கள் தப்பித்துக் கொண்டு ஓடிவிட்டார்கள்.

இருளப்பன் பிரக்ஞையற்றுத் தரையில் விழுந்து கிடந்தான். தங்கம்மாவின் பிரலாபம் நெஞ்சை உருக்கியது.

வந்தவர்கள் இருவர் இருளப்பனை வண்டியில் போட்டு ஆஸ்பத்திரிக்குக் கொண்டு சென்றனர். தங்கம்மா கண்ணீரும் கம்பலையுமாக நின்றாள். அவனுடைய கறுப்பு நாய்கூட நெடுங்குரலெடுத்து ஊளையிட்டது!

வண்டியின் சக்கர ஒலி மறைந்து வெகுநேரம் ஆயிற்று. வராந்தாவில் சோகமே உருவாகக் கையில் தடிக்கம்புடன் குறைப் பொழுதுக்கும் காவல் இருந்தாள் தங்கம்மா. அவள் மனம் பலவாறாகக் குழம்பிக் கொண்டிருந்தது. கொஞ்ச நாளாகவே ஏதோ ஒரு அருவசக்தி அவனை அணு அணுவாக நெருங்கி வருவதைப் போன்ற ஒரு பிரமை சதா அவள் உள்ளத்தை அச்சுறுத்திக் கொண்டே இருந்தது. அந்தப் பயப்பிராந்திக் கேற்ப இப்பொழுது நடந்து வரும் ஒவ்வொரு



சம்பவங்களையும் பார்க்கும்பொழுது அவளுக்குப் பைத்தியம் பிடித்து விடும் போலிருந்தது.

இருள் கரைந்து இப்போது பனி மிகுதியாகக் கொட்டிக் கொண்டிருந்தது. தூரத்தில் சரளைக் கல் ரஸ்தாவில் வண்டி வரும் சப்தம் கேட்டது. தங்கம்மா ஆவலுடன் வாசல் பக்கத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். கணக்காக வண்டி வந்து வாசலில் நின்றது.

மதுரநாயகம் வண்டியிலிருந்து இறங்கினார். எஜமானைக் கண்டதும் வெப்பத்தை அடக்க

முடியாமல் சேலைத்தலைப்பை வாயில் வைத்துக் கொண்டு பேச நா எழாமற் போகவே, விக்கி விக்கி அழ ஆரம்பித்தாள் தங்கம்மா.

மதுரநாயகமோ சிறிதும் பதற்றமில்லாத குரலில் சொன்னார் :

"எல்லாம் எனக்குத் தெரியும், தங்கம்மா. ஸ்டேஷனிலே இருந்து வருகிற வழியில் செய்தி தெரிஞ்சு, நானும் கூடப்போய் அவனை ஆஸ்பத்திரியிலே சேர்த்து விட்டுத்தான் வருகிறேன். டாக்டர் அபாயம் ஒன்றுமில்லேன்னு சொல்லிட்டார். ஊமையடியா விழுந்திருக்கு. நாலைந்து நாளிலே குணமாகி வந்திடுவான். நீ யொன்றும் கவலைப் படாதே !"

தங்கம்மா வேதனையோடு அன்றைய இரவைக் கழித்தாள். பொழுது விடிந்ததும் ஆஸ்பத்திரிக்குச் சென்று புருஷனைப் பார்த்தாள். படுக்கப் பஞ்சு மெத்தை; பக்கத்திலே பாலும் பழங்களும் ! எல்லாம் மதுரநாயகத்தின் ஏற்பாடு. அது மட்டுமா ! அவர் ஊரிலிருந்து வரும்பொழுது தங்கம்மாவுக்காக வாங்கி வந்த தங்கச் சங்கிலி கணவன் கையில் மின்னியது. "எசமான் கொடுத்த கல்யாணப் பரிசு !" என்று சொல்லி அதை அவள் கழுத்தில் போட்டான் இருளப்பன். தங்கம்மாவுக்கு ஒரே வியப்பு ! ஆனால் விடைபெற்றுக் கொண்டு வீட்டுக்குத் திரும்பும் பொழுது அந்த ஆச்சரியம் அதிர்ச்சியாக மாறி முடிவில் வேதனையாக அவளை வாட்ட ஆரம்பித்தது. எப்படியோ வீடு வந்து சேர்ந்தாள். பொழுது கழியக் கழிய அத்தனை குழப்பமும் ஒன்றாகப் பிணைந்து பயங்கரமானதொரு வினவாக அவள் மனக் கண்முன் எழுந்து நின்றது :

கற்பக விருக்ஷமா ! கருவேல மரமா !

★

இரவின் அந்தகாரத்தில் காஜாமலைப் பிராந்தியமே அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தது.

பங்களாவில் தாழ்ப்பாள் நீக்கப்படும் 'டொக்' என்ற ஓலம். கதவு மதுரநாயகத்துக்கு வழி விட்டது. வெளியே வந்த மதுரநாயகம் கொட்டும் பனியில் மெதுவாக முற்றத்தில் இறங்கி நடந்தார். எங்கும் ஒரே மரண அமைதி. வேப்ப மரத்தின் இலைக் கூட்டங் கூடச் சற்றுக் கண்ணயர்ந்த மாதிரி தோன்றியது. வானத்தில் வழிதப்பிய தாரகைகள் இரண்டு பேந்தப் பேந்த விழித்துக் கொண்டிருந்தன.

அந்த ஒளியில் இருளப்பனின் மண் குடிசையை வெறித்து நோக்கினார் மதுரநாயகம். இப்பொழுது அவர் முகத்தில் எந்தவிதச் சலனமோ கலக்கமோ தென்படவில்லை. தீர்க்கமானதொரு முடிவின் வெறி நிழலாடியது. இரண்டு எட்டு நடந்து குடிசையின் வாசலுக்கு எதிரே வந்தார். கதவுக்குப் பதிலாக மூங்கில் தட்டியொன்று சாத்தப்பட்டிருந்தது. நெஞ்சு துடிதுடிக்க ஒருமுறை சுற்றும் முற்றும் கண்ணோட்டத்தைச் சுழற்றினார். அந்தப் பிரதேசத்தை அணைத்தபடியே படுத்துக் கிடந்த காம்பவுண்டுச் சுவர் அதன் எல்லைக்குட்பட்ட பொருள் அனைத்தும் அவர் உடைமை என்பதைச் சொல்லாமல் சுட்டிக் காட்டுவதுபோல் இருந்தது.

"தங்கம்மா ! தங்கம்மா !"

கூப்பிட்டு விட்டோமென்று எண்ணினார் அவர். ஆனால் குரல் வெளிவரவில்லை. நாக்கு சருகாக உலர்ந்து போய் இருந்தது. எங்கோ ஒரு ஆந்தைக் குஞ்சு "கிற்றீ......கிற்றீ......" என்று அலறியது. அந்த ஒலி மதுரநாயகத்தின் எலும்புக் குருத்தினுள் பாய்ந்து உச்சியிலிருந்து உள்ளங்கால்வரை ஒரு உணர்ச்சியை உண்டு பண்ணியது. சட்டென்று

ஏதோ வெறியில் மூங்கில் தட்டியில் கையை வைத்தார். அவ்வளவுதான்!

ஒரே பிரளயம்!

மண்பானைகள் உருண்டு விழுந்து நொறுங்கும் ஒலியுடன் நாலைந்து வெறி நாய்கள் மூர்க்கமாகக் குரைத்துக்கொண்டு ஒன்றின்மேல் ஒன்று பாய்ந்து கடித்துக் குதறும்பொழுது எழும் பிலாக்கணமும் கிணற்றுக்குள்ளிருந்து கேட்பதைப்போல தங்கம் மாவுக்குக் கேட்டது! ஏதோ பயங்கரமான சொப்பனம் கண்டு கொண்டிருந்தவள் திடீரென்று திடுக்கிட்டு எழுந்தாள். வாசல் தொண்டு வழியே 'குபுகுபு'வென்று பாய்ந்து கொண்டிருந்த பனிக்காற்று தூக்கக் கலக்கத்தை அடித்து விரட்டியது. வாசலில் இன்னும் கறுப்பு நாய் குரைத்துக் கொண்டுதான் இருந்தது. பீதியுடன் எழுந்து வாசலுக்கு வந்தாள். தட்டி கீழே சாய்ந்து கிடந்தது. காலிலே நொறுங்கிய ஓட்டுத் துண்டுகள் நெறுநெறு வென்று குதித்தன. ஒன்றும் புரியாமல் பிருந்த கலவரத்துடன் தட்டியைத் தூக்கி வாய் பிளந்து நின்ற வாசலை அடைத்தாள். ஆள் அரவம் கேட்டதும் ஏதோ ஒருவிதமாக முனகிக் கொண்டு ஓடி வந்து பாய்ந்தது கறுப்பு நாய்.

"சீ மூதேவி! பானையெல்லாம் தள்ளி உடைச்சுட்டயே!" என்று நாயை அதட்டிவிட்டு உள்ளே போய்ப் படுத்துக் கொண்டாள். மனம் பலவித எண்ணங்களால் கொந்தளித்தது. தூக்கம் தொடர மறுத்தது. கழுத்திலே விரியன்பாம்பு நெளிவதைப் போன்ற ஒரு உணர்ச்சி. கையால் மெதுவாகத் தடவிப் பார்த்தாள். தங்கச் சங்கிலி!

அவள் எண்ணப் புயல் வெகு வேகமாகத் திசை மாறிச் சுழன்றது.

★

**கா**லை விடிந்தது.

கோரைப் பாயில் சுருண்டு போய் முடங்கிக் கிடந்த தங்கம்மா பத்து மணி வரைக்கும் எழுந்திருக்க முடியாமல் கண்களை மூடிய வண்ணம் புரண்டு கொண்டிருந்தாள். கூரையிலிருந்து அவள்மேல் விழுந்த ஒளிக்கிரணம் சுள்ளென்று உடம்பில் உறைத்தது. இலேசாக உணர்வு தட்டியதும் வெளியே புருஷன் குரல்போல் கேட்டது; அப்படியே அசதியை எல்லாம் உதறிவிட்டு ஆவலோடு வெளியே ஓடி வந்தாள். அப்போது அவள் கண்ட காட்சி......!

கையில் குண்டாந்தடி யொன்றை ஓங்கியவாறு தொட்டியில் கஞ்சியை நக்கிக் கொண்டிருந்த கறுப்பு நாயின் மீது பாய்ந்து கொண்டிருந்தான் இருளப்பன். நாயோ, வெருவி ஓடாமல் வாலை வேகமாக ஆட்டிக் கொண்டே எஜமானை ஏறிட்டுப் பார்த்தது.

"பய நாயே! எசமான் கஞ்சியையே குடிச்சுக்கிட்டு அவங்களையே கடிக்கப் போட்டயே! உன் மண்டையைக் குழைக்கிறேன் பாரு!" என்று கண்களில் கனல் தெறிக்கக் கூறிக் கொண்டே பலமெல்லாம் திரட்டிக் கையிலிருந்த தடியால் அதன் தலையிலே ஒரு போடு போட்டான்.

கணப்பொழுதுக்குள் நிகழ்ந்து விட்ட இந்தக் கோரக் காட்சியைக் கண்டு பொறுக்காமல் "அடபாவி!" என்று தன்னையுமறியாமல் பலமாகக் கத்தினள் தங்கம்மா.

சிரசில் அடியுண்ட அந்த வாயில்லாப் பிராணி, கிர்ரென்று சுற்றிச் சுழன்று துடித்து முடிவில் இறங்கித் தரையில் சாய்ந்தது.

வெறியோடிருந்த இருளப்பன் தங்கம்மாவைப் பார்த்து, 'பின்னே என்ன தங்கம், நேத்து இரவு கண்ணு தெரியாமல் எசமானைத் திருடனுன்னு



சென்னை, மாம்பலத்தில் உற்சாகமுள்ள பல இளைஞர்கள் ஒன்று சேர்ந்து "தமிழ் மன்றம்" என்ற பெயரில் கழகம் ஒன்றை நிறுவித் தமிழுக்கும், தமிழ்க் கலைக்கும் தொண்டாற்றி வருகிறார்கள். ஜனவரி ஒன்பதாம் தேதி மேற்படி மன்றத்தின் ஆதரவில் திருப்பாவை - திருவெம்பாவைத் திருவிழா வெகு சிறப்பாக நடைபெற்றது. இந்த விழாவுக்குத் தருமபுரம் ஆதீனம் சென்னைக் கிளைக் கழகத்தின் அதிபர் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் அவர்கள் தலைமை வகித்தார்கள். வித்வான்கள் ஸ்ரீ ஏ. நாராயணசாமி ஐயர், ஸ்ரீ வி. எம். சுப்பிரமணிய ஐயர் ஆகியோரும் ஸ்ரீ தேவன், ஸ்ரீ பரதன் முதலியோரும் திருப்பாவை - திருவெம்பாவை பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள். மன்றத்தின் சார்பாக ஸ்ரீ விழிநாதன் எல்லோரையும் வரவேற்றார். ஸ்ரீ அ. ரா. ஸ்ரீனிவாஸன் வந்தனோபசாரம் கூறினார். தமிழ்மன்றத்து அங்கத்தினர்களையும், விழாவில் கலந்து சொற்பொழிவாற்றியவர்களையும் படத்தில் காணலாம்.

---

உடம்பெல்லாம் கடிக்க ரெத்தக் களரியாக்கி விட்டது" என்று மேல் மூச்சு வாங்கக் கூறினான்.

தங்கம்மா அப்படியே கல்லாக நின்றாள். அவள் மனத்தில் புயல் வீசியது. பாதத்தில் ஒட்டுத் துண்டுகள் உறுத்துவதாக ஒரு நினைவு! "என்ன நேற்று இரவு எஜமானா கதவைத் தள்ளியது! பின்னே நாயில்லையா!" என்ற எண்ணங்கள் புரையோடின அவள் உள்ளத்தில். கண்களிலே உதித்த கோபக் கனல், தூரத்தில் குருதிப் பெருக்குக்கு மத்தியில் கால்களைப் பரப்பில் போட்டபடியே துடித்துக் கொண்டிருந்த, அவள் மானத்தைக் காவல் புரிந்த ஜீவனைப் பார்த்ததும் தாங்கவொண்ணாத சோகமாக மாறியது. வாய்விட்டு 'கோ' என்று கதற ஆரம்பித்தாள்.

இருளப்பன் நெடுமரம்போல் ஸ்தம்பித்து நின்று கொண்டிருந்தான். தங்கம்மாவின் ஆத்திரம் அவன் பக்கம் திரும்பியது. கோபாவேசத்துடன் மாலை மாலையாகக் கண்ணீரைப் பெருக்கிய வண்ணம் கழுத்தில் கிடந்த சங்கிலியைக் கழற்றி, "அந்தப் பாவியின் மூஞ்சியிலே இந்தப் பாவச் சங்கிலியை எறிந்து விட்டு, நான் வேண்டுமென்றால் எங்க பாட்டியின் குடிசைக்கு வாங்க. எனக்கு இந்தப் பங்களாவுக்குள்ளே ஒரு நிமிஷம் கூட இருக்க முடியாது" என்று கூறிப் பேய் கொண்டவளைப் போல சங்கிலியை வீசி எறிந்து விட்டு அவ்விடத்தை விட்டு வெளியேறினாள்.

எறிந்த சங்கிலி நாயின் பக்கம் போய் விழுந்தது.

இருளப்பன் கண்களில் கண்ணீர் தாரை தாரையாகக் கொட்டியது. கண்ணுக்கு முன்னால் கொடிய நினைவுகள் வட்டமிட்டன. பழைய கனவு முன்னால் அவன் ஞாபகத்துக்கு வந்ததும் யாரோ உருக்கிய தாரைத் தலையில் கொட்டுவதைப்போல் இருந்தது.

ஒரு பணப் பேயின் புதையலை இத்தனை நாளும் காவல் காத்ததற்குக் கிடைத்த பரிசிலான தங்கச் சங்கிலி தரையில் கிடந்தது. ஆனால் அதை நனைத் திருக்கிறதே குருதி வெள்ளம், அதுவோ!.........

"என் மானத்தைக் காத்ததற்குப் பரிசு" என்று ஓயாமல் தங்கம்மா புலம்புவதைப் போலக் கேட்டது.

இருளப்பன் வாய்திறந்து கதறவில்லை. நெஞ்சே உருகிக் கண்களின் வழியே பாய்ந்து பீறிட்டது போல் கண்ணீர் சிந்திய வண்ணம் கைகள் இரண்டையும் தலைமேல் வைத்துக் கொண்டு தன்னுடைய அருமை நாயின் அருகிலே உட்கார்ந்து உள்ளுக்குள் விம்மி வெடித்தான்.

தன்னை இதுகாறும் அன்போடு வளர்த்த எஜமான் அருகில் அமர்ந்து அழுது அழுது உருகுவது அதன் மனத்தை இளக்கியதோ என்னவோ, குற்றுயிரும் குலையுயிருமாகக் கிடந்த அந்த ஜீவன், சாகும் தருணத்திலும் தன் இறுதி நன்றியைத் தெரிவிப்பது போல் ஈனஸ்வரத்தில் ஏதோ முனகிய வண்ணம் தன்னுடைய வாலை மெதுவாக அசைத்தது!




வேப்பனூர் கிராமத்திலிருந்து காத்தான்பூதூருக்குச் செல்லும் சாலையில் ஜன நடமாட்டமே இல்லை. அஸ்தமன வேளையின் மங்கலான வெளிச்சத்தையும் உள்ளே நுழைய விடாமல் பாதையின் இரு ஓரங்களில் உள்ள மரங்கள் காவல்காரர்களைப் போல் நின்றுகொண்டிருந்தன. அந்த அமைதியான பாதையில், ஒரே ஒரு ஆத்மா மட்டும் தோளில் ஒரு பையுடன் சென்றுகொண்டிருந்தது. அது வேப்பனூரைச் சேர்ந்த செருப்புத் தைக்கும் தொழிலாளி ரங்கன்தான் என்பது யாவருக்கும் தெரியும்.

ரங்கன் ஏதோ ஆழ்ந்த யோசனையில் மூழ்கியவனைப்போல் காணப்பட்டான். அவனுக்குப் பின்னால் கொஞ்ச தூரத்தில் வரும் மாட்டு வண்டியின் 'ஜல் ஜல்' என்ற சத்தத்தைத் தவிர வேறு எந்த விதமான சந்தடியும் கிடையாது. இந்த அமைதியான சூழ்நிலை, அவன் மனத்துக்கு எத்தனையோ ஆறுதலாக இருந்தது. தனக்கு முன்னால் முடிவின்றிச் செல்லும் சாலையை ஒரு முறை ஏறிட்டுப் பார்த்தான். மறு விநாடி அவன் மனத்திலிருந்து ஆழ்ந்த பெருமூச்சு ஒன்று கிளம்பியது.

இந்தப் பாதையைப் போலவே, அவன் வாழ்க்கைப் பாதையிலும் கஷ்டங்கள் முடிவின்றிச் சென்றுகொண்டிருந்தன. இந்தப் பாதையாவது கடைசியில் ஒரு இடத்தில் முடியலாம். ஆனால் அவன் துன்பம் நிறைந்த வாழ்க்கைக்கு......! இவ்வாறு எண்ணமிட்டுக் கொண்டிருந்தது அவன் மனம். அதற்குச் சலிப்பே கிடையாதோ, என்னவோ! மறுபடியும் சிந்திக்க ஆரம்பித்தது. ஆம்! பழைய கால நினைவுகள், அவனைச் சுற்றி வளைந்து வட்டமிட ஆரம்பித்தன.

***

ரங்கன் வேப்பனூரின் பிரதான செருப்புத் தைக்கும் தொழிலாளியான மாணிக்கத்தின் மகன். வேப்பனூரில் அச்சமயம் செருப்புக் கடை இல்லை. எனவே, அந்தத் தொழிலில் ஊரிலேயே சிறந்தவனை மாணிக்கத்தினிடம்தான் போலீஸ் இன்ஸ்பெக்டர் முதல் சாதாரணக் கூலியாட்கள் வரை, எல்லோரும் தங்கள் ஜோடுகளைப் பழுது பார்த்துக் கொள்வார்கள். இந்தப் பழுது பார்க்கும் வேலைதான் மாணிக்கத்தின் வாழ்நாளைச் சுமாராகக் கடத்திக்கொண்டு வந்தது.

மாணிக்கம் தொழில் நுட்பம் தெரிந்தவன்; சிறந்த அறிவாளியும் கூட. பள்ளிக்கூடத்தில் படிக்கா விட்டாலும், அனுபவத்தில் பல விஷயங்களை அறிந்தவன். தான் படிக்காத குறையைத் தன் ஒரே மகன் ரங்கனைப் படிக்க வைப்பதன் மூலம் நிவர்த்தி செய்து கொண்டிருந்தான். ரங்கனும் தன் குணங்களில் தகப்பனையே ஒத்திருந்தான். அப்பொழுது அவன் ஆறாம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தான். படிப்பிலும் ரங்கன் வெகு கெட்டிக்காரன். அத்துடன், தன் தந்தையார் செய்து வந்த தொழிலிலும் சிறு வயதிலிருந்தே சிறந்து விளங்கினான். பொதுவாகப் பள்ளிக்கூட ஆசிரியர்களுக்கும், சக மாணவர்களுக்கும் தேவையாகும்போது சிறந்த முறையில், அவர்களது ஜோடுகளைப் பழுது பார்த்துக் கொடுப்பான்.

மொத்தத்தில் கபடு, சூது, அறியாத அந்தச் சிறுவன், வெள்ளை உள்ளத்துடன் எல்லோரிடமும் அன்புடனும், மரியாதையுடனும் பழகினான். தன் குணத்தினால், எல்லோரையும் வசீகரிக்கும் அற்புதத் திறமையும் வாய்ந்தவன்.

திடீரென்று ஊரில் பரவிய காலராவின் காரணமாகச் சிதறுண்ட குடும்பங்களில், ரங்கனின் குடும்பமும் ஒன்று. குடும்பத் தலைவன் மாணிக்கம் அதற்குப் பலியானான். சீரான குடும்பம் சிதைவுண்டது. தன் தகப்பனின் அகால மரணத்தினால் ரங்கனது படிப்புக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. தாயைச் சமாதானப் படுத்தி, தன் தகப்பனின் செருப்புத் தைக்கும் தொழிலைத் தானே ஏற்றுக் கொண்டு விட்டான்.

ரங்கன் அந்தத் தொழிலை ஊக்கமாகச் செய்ய ஆரம்பித்தான். சிறு பையனுதலாலும், தன் தொழில் வல்லமையாலும், தகப்பனைவிடக் கெட்டிக்காரன் என்ற பெயரைப் பெற்றுவிட்டான். வீட்டில் அவனும், அவனது தாயுமாக இரண்டே பேர்கள்தான் இருந்தார்கள். ஆகவே, ரங்கனுக்குக் கிடைக்கும் சொற்ப வருமானமே அவர்கள் இருவருக்கும் போதுமானதாக இருந்தது.

காலப்போக்கில் ரங்கன் வாலிபனானான். 'அந்தந்தக் காலத்தில் கலியாணமாக வேண்டும்' என்ற தன் தாயின் ஆவலைப் பூர்த்தி செய்வதற்காகத் தன் உறவுக்காரர் ஒருவரின் பெண்ணையே மணந்து கொண்டான் ரங்கன்.

***

இதெல்லாம் பழைய கதை. இப்போது ரங்கனின் குடும்பத்தில் இரண்டு அங்கத்தினர்கள் அதிகரித்திருக்கிறார்கள். ஒன்று அவனது ஐந்து வயதுப் பையன் மாணிக்கம்; இன்னொன்று, இரண்டு வயதுக் கைக் குழந்தை கண்ணம்மா. அங்கத்தினர்கள் அதிகரிக்க அதிகரிக்க, வருமானமும் அதிகரிக்க வேண்டுமல்லவா! அதுதான் இல்லை. சாதாரணமாகக் கிடைக்கும் வருமானங் கூடக் குறைந்து கொண்டே வந்தது.

நாள் முழுவதும் பட்டினியாகவே இருக்க வேண்டிய சமயங்களும் அடிக்கடி வர ஆரம்பித்தன. ரங்கனுக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை. இந்த அழகில், அந்த ஊரில் எந்தப் புண்ணியவானோ பக்கத்து நகரத்தின் பிரபலமான செருப்புக் கடையின் கிளை ஸ்தாபனம் ஒன்றை வேப்பனூரில் ஆரம்பித்து விட்டான்! ரங்கனைப் பிடித்து ஆட்டத் தொடங்கியது பொல்லாத விதி!

அன்று முதல் அவனுக்குச் சுமாராக வந்து கொண்டிருந்த வருமானமும் திடீரென்று படுத்து விட்டது. செருப்புத் தைக்கும் ஒரு ஏழைத் தொழிலாளி தன் நான்கைந்து பேர் அடங்கிய குடும்பத்தை எப்படிக் காப்பாற்றுவான்! ஆனாலும் ரங்கன் ஏதேதோ வேலைகளுக்கு முயன்று பார்த்தான். எங்கும் பூஜ்யம்தான்!

அவன் செய்து கொண்டிருந்த குடும்பத் தொழிலை, வீட்டிலிருந்தபடியேதான், முன்பெல்லாம் செய்து கொண்டிருந்தான். ஆனால், இப்போது அவ் வேலைகள் அவனைத் தேடி வீட்டுக்கு வருவதில்லை. அதற்குப் பதிலாக அவன் அவற்றைத் தேடிக் கொண்டு, தெருவிலுள்ள மரத்தடிகளுக்குச் செல்ல வேண்டி வந்து விட்டது.

காலையில் ஏழு மணிக்கு வந்து, மரத்தடியில் தன் சாமான்களுடன் உட்கார்ந்து விட்டானானால், மறுபடியும் மாலை ஏழு மணிக்குத்தான் வீட்டுக்குத் திரும்புவான். தயிர் விற்கும் பெண்மணிகள், காய்கறிக்கூடை சுமக்கும் தாய்மார்கள், கட்டட வேலை செய்யும் தொழிலாளர்கள் இவர்களுக்குத்தான், சில சமயம் ரங்கனின் 'அவசியம் ஏற்படும். தொண்ணூறு ஒட்டுப் போட்டுத் தேய்ந்த அவர்களுடைய செருப்புகளை, தொண்ணூற்றி ஒன்றாவது ஒட்டு ஒன்றைப் போட்டுச் சுத்தமாகச் சரிசெய்து கொடுப்பான் ரங்கன்.

அப்படி அன்றாடம் செய்த வேலையில், ஒரு நாளில் கிடைக்கும் கூலி அதிகமானால் நான்கணாத்தான். இப்படியாக ஒவ்வொரு நாளும், தனக்கு வருமானம் என்ற பெயரில் கிடைக்கும், மூன்று நான்கு அணாக்களை, தன் கையில் வைத்துப் பெருமூச்செறிவான் ரங்கன்.

அவன் கைக் குழந்தை கண்ணம்மா, ஒரு நாள் அவனிடம் கூறிய மழலை மொழிகளை அவன் உயிர் உள்ளவரை மறக்க முடியுமா! "ஏன் அப்பா! நீ இப்போ ஒண்ணும் வாங்கி வர்றதில்லே! அம்மா கூட, ஒண்ணும் இல்லேங்கிறாளே. எனக்கு ரொம்பப் பசிக்குதப்பா!" என்றாள்.

குழந்தையின் இந்தத் தீனமான மழலைமொழிகள் அவன் இதயத்தை, வாள் கொண்டு அறுப்பது போல் இருந்தன. பொங்கி வந்த கண்ணீரை அடக்க முடியவில்லை அவனால். குழந்தையை இறுக அணைத்துக் கொண்டான்.

இப்போது "செருப்பு ஜோடு ரிப்பேர்!" என்று தெருத்தெருவாகக் கத்தவும் ஆரம்பித்தான் அவன். காலும் தொண்டையும் தேய்ந்ததுதான் மிச்சம்!

இப்படிப்பட்ட எண்ணக் கயிறுகளால் பின்னப்பட்டவனாகத் தன்னையே மறந்து சென்று கொண்டிருந்தான் ரங்கன். கடந்த காலச் சம்பவங்கள் அவனுக்கு ஒரு கனவைப் போல் தோன்றின.

சிறிது நேரம் கழித்துக் கனவிலிருந்து விழித்தவன் போல், நான்கு புறமும், மலங்க மலங்க நோக்கினான். நேரம் கொஞ்சங் கொஞ்சமாக இருட்டிக் கொண்டே வந்தது. பின்னால் வந்து கொண்டிருந்த மாட்டு வண்டியைக் கூடக் காணவில்லை. அது எப்போதோ முன்னேறியிருக்க வேண்டும். நேரம் ஆக ஆக அவனது கால்களின் வேகம் அதிகரித்தது. அவன் இப்பொழுது ஏதாவது வேலையை நாடிக் காத்தான் புதூருக்குச் சென்று கொண்டிருக்கிறான். அசலூரிலாவது வேலை கிடைக்காதா என்ற எண்ணம் அவனுக்கு.

ரங்கனுக்குப் பின்னால் சைக்கிளில் வந்த ஒருவர் அவனைத் தாண்டிச் சிறிது தூரத்தில் இறங்கினார். ரங்கன் அவரைச் சமீபித்தான். அவர் தன் சைக்கிளில் கழன்றிருந்த சைக்கிள் செயினைத் திரும்பப் போட்டுக் கொண்டிருந்தார். அவரது உடையிலிருந்து, அவர் ஒரு பாங்க் தொழிலாளியாக இருக்கலாம் என்று யூகித்தான் ரங்கன். அவன் எண்ணத்தை ஆமோதிப்பது போல் சைக்கிளுடன் சேர்க்கப்பட்டி



ருந்த "ஜலஜா பாங்க் லிமிடெட் காத்தான் புதூர்" என்ற போர்டு அவனைப் பார்த்துச் சிரித்தது.

சிறிது நேரத்தில் அவர் போய்விட்டார். ரங்கன் இன்னும் நடந்து கொண்டுதான் இருந்தான். நடந்து, நடந்து அவன் காலில் கனுக்கனுவாக வலியெடுக்க ஆரம்பித்தது. ஆனாலும், அவன் மனத்தின் வலியை விடக் கால் வலி அத்தனை பெரிதாகத் தோன்றவில்லை. அவனுக்குத் திடீரென்று அவனது காலில், மிருதுவான ஒரு பொருளின் ஸ்பரிசம் ஏற்பட்டது. சட்டென்று இரண்டடி பின்னால் சென்றான் ரங்கன். பாம்போ என்ற பயம் அவனுக்கு!

மறுபடியும் குனிந்து பார்த்தான். அந்த மங்கலான வெளிச்சத்தில் ஏதோ வெண்மையான ஒரு பொருள், சற்று நீண்ட வடிவத்தில் கிடப்பதைக் கண்டான். உடனே அதை எடுக்கக் குனிந்தான். மறு கணம் நிமிர்ந்து விட்டான். அதை எடுக்கலாமா! வேண்டாமா! என்று யோசித்தான். சிறிது நேரத்தில் ஒரு முடிவுக்கு வந்தவனாய் அதைச் சட்டென்றுஎடுத்துச் சுற்றுமுற்றும் பார்த்தான். கண்ணுக் கெட்டிய தூரத்தில் அவனுக்கு முன்னாலும், பின்னாலும் ஒருவரும் காணப்படவில்லை. எனவே, தைரியமாகத் தன் தோளின் கீழ் தொங்கும் பையில் அதைப் போட்டுக் கொண்டு மேலே நடக்கலானான். அந்த இடத்தில் அதைப் பிரித்துப் பார்த்து என்னவென்று தெரிந்து கொள்ள அவனுக்குத் தைரியம் ஏற்படவில்லை.



மறுபடியும் அதை வெளியே எடுத்தான். தன்னை யாராவது பார்த்து விடுவார்களோ என்ற எண்ணத்தில், சுற்றிலும் ஒருமுறை பார்த்தான். தனக்குக் கிடைத்த பொருளைப் பார்த்தான். அதன் மேல் ஒரு கைக்குட்டை சுற்றப்பட்டிருந்தது. அதை அப்படியே பைக்குள் போட்டுக் கொண்டு வேகமாக நடக்க ஆரம்பித்தான்.

* * * *

அவன் கனகாபுரத்தை அடையும் போது, சுமார் எட்டு மணி இருக்கும். கனகாபுரம் என்பது, காத்தான்புதூரைச் சேர்ந்த ஒரு பகுதி. நகர வசதியுடன் கூடிய ஒரு பெரிய கிராமம் என்று கூடச் சொல்லலாம். போகும் வழியிலேயே ஒரு பாழடைந்த கட்டடம் தென்பட்டது. அதில் அநேகம் பேர் இருந்தனர். ரங்கன் தானும், அன்று இரவை அங்கே கழிக்க விரும்பினான். தன் மனைவி கட்டிக் கொடுத்த களி மூட்டையைப் பிரித்தான். நடந்த களைப்புடன், சரியான பசி வேறு; தொட்டுக் கொள்ள ஒன்றும் இல்லாத போதிலும் அந்தக் களி, அவனுக்கு அமுதமாகவே இருந்தது. உருட்டி உருட்டி விழுங்கினான். சிறிது தண்ணீரும் வீதிக் குழாயில் குடித்தான். அவனுடைய களைப்பு பாதி நீங்கி விட்டது போல் தோன்றியது.

தன் பையிலிருந்து பழைய துணியை எடுத்துக் கீழே விரித்தான். பையையே, தலையணையாக வைத்தபடி படுத்தான். சிறிது ஓய்வு பெற்ற மனம், மறுபடியும் சாலையில் நடந்த சம்பவத்தை எண்ண ஆரம்பித்தது. அசதியினால் அவன் அப்படியே கண்ணயர்ந்தான்.

கண் விழிக்கும் போது பலபலவென்று விடிந்திருந்தது. எழுந்து மடமட வென்று தெருக் குழாயடியில், பல் விளக்கி முகம் கழுவிக் கொண்டான். ஒரு மரத்தடியில் தன் சாமான்களுடன் கடை பரப்ப ஆரம்பித்து விட்டான்.

எப்போதும் வேலையினால் பளபளவென்றிருக்கும் அவனுடைய ஆயுதங்கள், மங்கித் துரு ஏறிக் கிடந்தன. சற்றுத் தூரத்தில் ஒரு வாலிபன் ஒரு சைக்கிளுடன் தன்னை நோக்கி வருவதைக் கவனித்தான். அவன் காலை இழுத்து இழுத்துக் கொண்டு நடந்ததிலிருந்து, அவனது செருப்பு ரிப்பேர் ஆக வேண்டியிருந்தது தெரிந்தது ரங்கனுக்கு. அவன் நினைத்தபடிதான் நடந்தது. ஒரு தையலுக்கு இரண்டு தையலாகப் போட்டு, நிமிஷத்தில் சரி செய்து கொடுத்தான் ரங்கன். அவ்வாலிபன் தன் காலுக்குச் சரி பார்த்து விட்டுத் தன் ஜேபியிலிருந்து, எட்டணா நாணயம் ஒன்றை எடுத்துக் கொடுத்தான். பின்பு சிறிது நேரத்தில் அந்த வாலிபன் போய் விட்டான்.

திகைப்புடன், ரங்கன், அவ்வாலிபன் போன திசையையே பார்த்துக் கொண்டிருந்தான். பின்பு அவனது கண்கள் நாணயத்தை நோக்கின. "இது இந்த ஊரின் வழக்கமா? அல்லது, இந்த ஆள் தான் ஊருக்குப் புதிசா!" என்று சந்தேகப்பட ஆரம்பித்தான்.

இந்த மாதிரி எட்டணா நாணயத்தை அவன் பார்த்துக் குறைந்தது ஒரு வாரத்துக்கு மேல் இருக்கும். "அவன் மகாராசனா இருக்கணும்" என்று வாயார வாழ்த்தினான். அந்த அணாவைக் கொண்டு

தன் சாமான்களை மூன்று முறை சுற்றினான். பின்பு அதைக் கண்ணிலும் ஒற்றிக் கொண்டான். அதைத் தன் பழைய துணியில் மூடிய எண்ணெய்ப் பைக்குள் கையை விட்டான். அவன் கையில், முதல் நாள் கிடைத்த பொருள் தட்டுப்பட்டது. இப்பொழுது அவனால் ஆவலை அடக்கவே முடியவில்லை. பைக்குள் இருந்தபடியே கைக்குட்டையைப் பிரித்தான், அதன் கீழ் கவர் ஒன்று காணப்பட்டது. அதைப் பிரித்துப் பார்த்த அவன் கண்கள் ஆச்சரியத்தாலும், பயத்தாலும் விரிந்தன. அவன் இதயமே ஒரு விநாடி நின்று விட்டதைப் போல் தோன்றியது.

அவன் நிலைக்குக் காரணம் இல்லாமலில்லை. அந்தக் கவரில் கத்தையாக ரூபாய் நோட்டுக்கள் இருந்தன. காரணம் தெரியாத பயத்தினால் அவன் முகத்தின் ரத்தம் சுண்டி, முகம் வெளிறிப் போய் விட்டது. அவன் கண்களை, அவனால் நம்பவே முடியவில்லை. சீக்கிரம் கைக் குட்டையிலேயே அதை மூடினான். அதைப் பத்திரமாகத் தன் பையின் அடியில் திணித்தான். அதன் மேல் தன் சாமான்களையும் வைத்துக் கொண்டான். தன் மூட்டையுடன் ஊருக்குக் கிளம்பி விட்டான்.

பசி வயிற்றைக் கிள்ளியது. கால்கள் அவனை ஒரு 'டீக் கடையின்' முன் நிறுத்தின. நாலணா செலவு செய்தது போக, மீதி நாலணா இருந்தது கையில். அதில் இரண்டணாவுக்குப் பலகாரம் வாங்கிக் கொண்டான். மீதி இரண்டணாவுக்குத் தன் ஊருக்குப் பஸ்ஸிலேயே போவதற்குத் தீர்மானித்தான் ரங்கன்.

***

பஸ் நிலையத்துக்குச் சென்று வேப்பனூர் செல்லும் பஸ்ஸில் ஏறி உட்கார்ந்தான். வழி நெடுக இதே யோசனை. இத்தனை பணத்தையும் யார் தொலைத்திருக்கக் கூடும்! சட்டென்று அவனுக்குச் சைக்கிள்காரரின் நினைவு வந்தது. ஒருவேளை இந்தப் பணம் அவருடையதாக இருக்குமோ என்று எண்ணினான். அவரது நிலையில் தன்னை நிறுத்தி பார்த்துக் கொண்டான். அவன் தேகம் எல்லாம் சிலிர்த்தது.

அவனுக்குத் தனக்குக் கிடைத்தது இத்தனை தான் என்று திட்டமாகத் தெரியா விட்டாலும், அவன் பார்த்த அரை நிமிஷத்திலிருந்து அதில் குறைந்தது ஐம்பது ரூபாயாவது இருக்கும் என்று நம்பினான். அதனால்தான், 'எத்தனை இருந்தாலும் சரி; கடவுள் கொடுத்தார்' என்று மனத்தைச் சரி செய்து கொண்டு ஊருக்குக் கிளம்பி விட்டான்.

தன் ஊரை அடைந்து விட்டதும், அவனுடைய கால்கள் ஓட்டமும் நடையுமாக வீட்டை நோக்கிப் பறந்தன.

வீட்டுக்குள் நுழைந்ததும், அவன் கண்ட காட்சியானது அவனது இதயத்தை யாரோ கசக்கிப் பிழிவது போல் இருந்தது. ஒருபுறம் கிழவியான அவனது தாய், தன் நினைவின்றிச் சுருண்டு கிடந்தாள். பசி மயக்கத்தில் கண்கள் பாதிதான் திறந்திருந்தன.

சிறு பையன் மாணிக்கம், ஒரு பலகையைத் தரையில் தேய்த்தவாறு 'பாம் பாம்' என்று மோட்டார் ஓட்டிக் கொண்டிருந்தான். ரங்கனது மனைவியும் குழந்தையும் காணப்படவில்லை.

ரங்கன் நேரே தன் தாயிடம் சென்றான். அவளுடைய பரிதாபமான மயக்க நிலையைக் கண்டு அவன் கண்களில் நீர் முட்டியது. "அப்பப்பா! வறுமை என்பது எப்பேர்ப்பட்ட கொடிய வியாதி!" இப்படி முணுமுணுத்தன அவன் உதடுகள். "அம்மா!" என்று அழைத்தபடி அவள் அருகில் சென்று உட்கார்ந்தான். தன் தகப்பன் குரலைக் கேட்ட மாணிக்கம் "அப்பா" என்று கத்திக் கொண்டே அவனுடைய மடியில் உட்கார்ந்தான்.

தன் மகனின் குரலைக் கேட்ட கிழவி மெதுவாகக் கண்ணைத் திறந்தாள். அவள் முகம் மலர்ந்தது. அடுத்த நிமிஷம் ஒருவித சந்தேகம் படர்ந்தது. "ஏன் தம்பி! இத்தனை சீக்கிரமே வந்து விட்டே! வேலை ஒண்ணும் பாக்கவில்லையா!"

ரங்கன் ஒன்றும் பேசவில்லை. பேசாமல் தான் வாங்கி வந்த பலகாரத்தைத் தாயின் முன் வைத்தான். கிழவி அதை நான்கு பங்காகப் பிரித்தாள்.

அவனும் மாணிக்கமும் தின்றது போக, மீதிப் பங்கைக் காகிதத்திலேயே கட்டி வைத்தாள். "பாவம்! செல்லமும் காலையிலிருந்து ஒண்ணும் சாப்பிடல்லே; கொழந்தைக்கும் பசிக்கும். பாவம் பசியோட கஞ்சிக்குப் போயிருக்கா, புள்ளையையும் கூட்டிக்கிட்டு" என்று தனக்குள்ளேயே கூறிக் கொண்டாள்.

கிழவி கூறி முடிப்பதற்கும், செல்லம் அங்கு வருவதற்கும் சரியாக இருந்தது. கண்ணம்மா தன் தகப்பனைக் கண்டதும் ஓடி வந்தாள். செல்லத்தின் கையில் ஒரு சட்டி இருந்தது. அதை அவள் பிடித்துக் கொண்டிருந்த விதத்திலிருந்து அதில் ஏதாவது இருக்கும் என்று எண்ணிக் கொண்டான் ரங்கன்.

இவ்வளவு சீக்கிரம் ரங்கன் திரும்பி விடுவான் என்று அவள் எதிர்பார்க்கவில்லை. தன் கணவனை ஏறிட்டு நோக்கிய அவள் கண்கள் பல கேள்விகளை உதிர்த்துக் கொண்டிருந்தன. சட்டியுடன் உள்ளே சென்றாள். அதில் இருந்த கஞ்சியுடன் கொஞ்சம் தண்ணீரும் ஊற்றி உப்பும் போட்டாள். முதல் நாள் சாயந்திரம் ரங்கனுக்குக் கட்டிக் கொடுத்தது போக, மீதி இருந்த சிறிது களியையும் அதில் கரைத்தாள். வாடிய பச்சை மிளகாய் இரண்டு இருந்ததையும் அதில் நறுக்கிப் போட்டாள். ஒரு கிண்ணத்துடன் வந்து, எல்லோருக்கும் ஒவ்வொரு கிண்ணம் கொடுத்துத் தானும் ஒரு கிண்ணம் குடித்தாள்.

ரங்கன் செல்லம் கொடுத்த கஞ்சியை எங்கேயோ பார்த்தவாறு குடித்துக் கொண்டிருந்தான். இதற்குள் செல்லம் அவனிடம், அவன் தாய் கேட்ட கேள்வியையே திருப்பிக் கேட்டாள்.

"ஏன், மச்சான்! இத்தனை சீக்கிரம் வந்துட்டீங்க! வேலை ஒண்ணும் கிடைக்கலியா!"

அவர்களுக்கு என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் விழித்தான். "என்ன தம்பி முளிக்கிறே! என்ன விசயம்! சொல்லு" என்று துரிதப்படுத்தினாள் கிழவி.

இன்னும் மௌனம் சாதிக்க விரும்பவில்லை அவன். கதவைச் சாத்தும்படி, தன் மனைவிக்கு ஜாடை காட்டினான். பின்பு சுற்றுமுற்றும் பார்த்தான். குழந்தைகள் சற்றுத் தூரத்தில் விளையாடிக் கொண்டிருந்தன. ரங்கன் தன் பையைத் திறந்து, ஒவ்வொரு சாமானாக வெளியே வைத்தான். கடைசியில் கைக்குட்டையில் சுற்றிய பணம் வெளி வந்தது. அவனும் அதைச் சரியாகப் பார்க்கவில்லை யாதலால் அவசர அவசரமாக அதைப் பிரித்தான். அடுத்தாற்போல் கவரையும் பிரித்து, அதிலிருந்த நோட்டுக்களைக் கையில் எடுத்தான்.

"ஆ!" என்று தன்னையுமறியாமல் கத்தி விட்டாள். அதிலிருந்தவை அத்தனையும், புத்தம் புது நூறு ரூபாய் நோட்டுக்கள்!

தன் மகனின் கையில் திடீரென்று இத்தனை நோட்டுக்களைக் கண்ட கிழவியின் முகத்தில்,



குழந்தை சதா சிணுங்கியவண்ணம் அடம் பண்ணிக் கொண்டேயிருந்தது. மேலும் அதன் வயதிற்கேற்ற புஷ்டியுமில்லை. இதனால் தாயார் மனவேதனை அடைந்ததில் ஆச்சரியமில்லையே!



நாளொரு வண்ணமும் பொழுதொரு மேனியுமாய்ச் சந்தோஷத்துடன் திகழ்ந்து விளங்கும் குழந்தைகளையுடைய, தாய்மார்களான தனது சிநேகிதிகளின் யோசனையை நாடினாள் அவள். அவர்கள் எல்லோருமே 'க்ளாக்ஸோ'வைச் சிபாரிசு செய்தனர்.




திடமான எலும்புகளும், பற்களும் உண்டாவதற்கெனவே விடமின் 'டி' யும், சுத்த ரத்த வளர்ச்சிக்காக இரும்புச்சத்தும் சேர்த்துத் தயாரிக்கப்பட்ட 'க்ளாக்ஸோ' ஒரு சிறந்த சுத்தமான போஷாக்களிக்கும்பால் ஆகாரம்.



'க்ளாக்ஸோ' குழந்தைக்கு எத்தகைய மாறுதலை உண்டாக்கிவிட்டது! இப்பொழுது குழந்தை நன்கு உறங்குகிறது. அன்றியும் கிரமமான தேக திடமும் மனச் சந்துஷ்டியும் பெற்றிருக்கிறது.

**Glaxo**

'க்ளாக்ஸோ' ஒரு சிறந்த சுத்தமான போஷாக்களிக்கும் பால் ஆகாரம்

க்ளாக்ஸோ லேபரடரீஸ் (இந்தியா) லிமிடெட், பம்பாய் - கல்கத்தா - மதருஸ்

# கணக்கற்ற ஜனங்கள் தினப்படி விரும்புவது
# ப்ருக் பாண்ட் தேயிலை




அதற்குக் காரணம் தோட்டத்திலிருந்து கடைகளுக்கு அதிவேகமாக அனுப்பப்படும் ப்ருக் பாண்ட் தேயிலை நித்தமும் புத்தம் புதியதாக இருக்கிறது. மேலும் காற்று உட்புகாது பாக் செய்யும் முறை தேயிலையை மாசு மருவற்று, கலப்பற்று, களங்கமற்று விளங்கச் செய்கிறது.




## மற்றெந்த தேயிலையையும் விட ப்ருக் பாண்ட் தேயிலையையே அதிகப்படியான ஜனங்கள் வாங்குகிறார்கள்!

BB 59 D

கோபமும், வெறுப்பும் தாண்டவமாடின. அவள் வாயிலிருந்து வார்த்தைகள் வெடித்தன.

"ஏண்டா, ரங்கா! நீயாடா, இப்பிடி பண்ணினே! சீச்சீ! வயித்துக்குக் கஞ்சிக்கில்லாட்டி, உன்னைத் திருடவா சொல்லிச்சு! இதைவிடத் தூக்குப் போட்டுண்டு செத்தா என்னடா நீ! உங்கப்பன் பேரைக் கெடுக்கணுமுன்னு, எத்தனை நாளாடா காத்திருந்தே, பாவிப் பயலே!" கோபத்தினால் அவள் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது.

தாயின் வார்த்தைகளால் அவன் கோபப்படவில்லை. அவன் சாந்தமாகவே பதில் சொன்னான். "அம்மா! நீ நெனச்சது சரிதான். ஏழை ரங்கன் கையிலே, இத்தனை பணத்தைப் பாத்தா உலகமே அப்பிடித்தான் நம்பும். அம்மா! உன் பையன் அத்தனை அயோக்கியனா!" என்று சொல்லி விட்டு அந்தப் பணம் கிடைத்த விவரத்தைக் கூறினான்.

முதலில் இருவரும் இதை நம்ப மறுத்தனர். 'இப்படியும் நடக்குமா!'—என்று அதிசயப்பட்டார்கள் அவர்கள். அடுத்த நிமிஷம் செல்லம் அங்கே காணப்படவில்லை. சுவாமி படத்தின் முன் கண் மூடிக் கை குவித்தபடி நின்று கொண்டிருந்தாள். அவள் மூடிய கண்களிலிருந்து, கண்ணீர்—ஆம்! ஆனந்தக் கண்ணீர்—வடிந்து கொண்டிருந்தது. இந்தக் காட்சி மற்ற இருவரையும் மெய்மறக்கச் செய்தது.

கிழவி மெதுவாக ரங்கனிடம் நகர்ந்து உட்கார்ந்தாள். பிறகு "அதில் எத்தனை இருக்குது, தம்பி!" என்றாள். அவள் குரலில் உஷ்ணம் ஓரளவு குறைந்திருந்தது.

"நூறு ரூபா நோட்டா, பத்து நோட்டிருக்குது அம்மா! எங்கப்பன் கூட இத்தனை பணத்தையும், சேத்துப் பாத்திருக்க மாட்டாரு."

சிறிது நேரம் யோசித்த கிழவி "தம்பி! இத்தனை பணத்தையும் இந்த ஊரிலே இருந்துட்டு, எப்படிச் செலவு பண்றது? நானே உன்னை நம்பாத போது இந்த உலகம் உன்னை எப்பிடி நம்பும்! அப்புறம் ஆபத்தால்ல முடியும்!" என்று கவலையுடன் கேட்டாள்.

"அதுதான் நானும் யோசிக்கிறேன்; இனிமேல் எப்படியானாலும், நாம் இங்கே இருக்கமுடியாது."

அன்று சாயந்திரமே உற்றாரையும், ஊரையும் விட்டுக் கிளம்பிவிட்டது அந்தக் குடும்பம்.

***

இப்போது ரங்கனைப் பார்ப்பவர்களுக்கு அவனை அடையாளம் தெரியாது என்றால், ஆச்சரியப்படுவதற்கில்லை. அன்று, அவன் தோளின் மீது கிழிந்த துணியும், சில துணியும், தேய்ந்த செருப்புக்களும் நிறைந்த அழுக்குப் பை தொங்கிக் கொண்டிருந்தது. ஆனால், இன்று...! அதே இடத்தில் உயர்ந்த அங்கவஸ்திரம் ஒன்று காணப்பட்டது. அன்று, நடந்து நடந்து தேய்ந்து போயிருந்த கால்களில் நல்ல உயர்தரமான ஜோடுகள் ஏறியிருந்தன.

உண்மைதான்! ரங்கன் இப்போது ஒரு பெரிய ஏழு, எட்டு ஆட்கள் வேலை செய்யும்படியான, சிறந்த பெயர் பெற்ற "தலை அலங்கார நிலைய"த்தின் முதலாளி. அவனுக்கு அந்த வேலை தெரியாவிட்டாலும், அவன் கீழ் அநேக ஆட்கள் வேலை செய்கின்றனர். இதைத் தவிர, அறுபது எழுபது என்று வாடகை வரக்கூடிய இரண்டு வீடுகளும் இப்போது அவன் பெயருக்கு இருந்தன.

ரங்கன் தனக்குக் கிடைத்த பணத்தை வகையாய்ச் செலவு செய்ததன் பயனாக, இன்று இந்த நிலையில் இருக்கிறான். ஆனாலும் அவன் தனக்குக் கிடைத்த பணம் யாருடையது என்பதைத் திட்டமாக அறிவதற்கு, முயன்று கொண்டிருந்தான். இப்போது அந்தப் பணத்தை அவர்களிடமே திருப்பி அனுப்புவதும் அவனுக்குக் கடினமான காரியமல்ல. 'அவன் சந்தேகித்தது போலவே, அந்தப் பணம் அந்த பாங்க் தொழிலாளி தொலைத்ததுதான். அதை மிகுந்த சிரமப்பட்டு அறிந்தான்.

பொன்னன் "ஜலஜா பாங்கில்" கடந்த முப்பத்திரண்டு வருடங்களாக வேலை பார்த்து வருபவன். கண்ணியமும், மரியாதையும் நிறைந்த அவன் அந்த பாங்கிலேயே நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களில், முதன்மை ஸ்தானம் பெற்றவன். அவனுக்கு பாங்கின் பின்புறமே இலவசமாக வீடும் கொடுக்கப்பட்டது. அவனுடன் இருப்பவர்கள், அவனது மனைவியும், நான்கு குழந்தைகளும். அவனுக்கு மாத வருமானம் நாற்பது ரூபாய்.

பாங்கின் பணத்தைத் தொலைத்ததற்காக, பாங்கின் சொந்தக்காரர் அவன் மாதச் சம்பளத்தில் இருபது ரூபாயைப் பிடித்துக் கொண்டுதான் கொடுக்கிறார். அதுவும், பல வருடங்கள் நேர்மையாய் உழைத்தவன் என்ற தயவினால்!

இத்தனை விஷயங்களையும் சேகரிக்க ரங்கன் பட்ட கஷ்டங்கள் கொஞ்சமல்ல. "எதற்கு இத்தனை கஷ்டம்! அதை அவனுக்குத் திருப்பி அனுப்பிவிட்டால் என்ன!" என்று பலர் நினைக்கலாம். ஆனால் ரங்கனால் அப்படி இருக்க முடியவில்லை. "அவர் ரூபாயின் பலனை நாம் அனுபவிப்பது; நிரபராதியான அந்த மனிதன் தனது குறைந்த சம்பளத்திலும் பாதியை இழப்பது." இதை நினைத்துப் பார்க்கக்கூட முடியவில்லை ரங்கனால். அவன் அடுத்த நாளே அதைத் திருப்பி அனுப்ப எண்ணினான். ஆனால் எப்படி அனுப்புவது! சாதாரண முறையில் அனுப்ப முடியாது. நமது விலாசம் தெரிந்து விட்டால், இத்தனை நாள் வைத்துக் கொண்டிருந்த குற்றம் நம்மைச்

சார்ந்து விடும். இதற்கு என்ன வழி என்று யோசிக்கலானான்.

அவன் விலாசம் ரங்கனுக்கு நன்றாகத் தெரியுமாதலால், ஊரும் பேரும் போடாமல் ஒரு கவரில் பணத்தைப் போட்டு அனுப்பிவிடத் தீர்மானித்தான். அதேபோல் மறுதினம் ஒரு நீண்ட கவரில் புத்தம் புது நோட்டாகப் பன்னிரண்டு நூறு ரூபாய் நோட்டுகளுடன் ஒரு கடிதத்தையும் இணைத்தான். தக்க ஸ்டாம்பு ஒட்டி விலாசம் எழுதித் தபால் நிலையத்தில் போட்டு விட்டு வந்த அவன் முகத்தில் ஒரு அமைதி காணப்பட்டது. 'தன் கடமையைச் செய்து விட்டோம்' என்ற திருப்தியில் அவனுடைய மனத்திலிருந்து நிம்மதியான பெருமூச்சொன்று வெளிப்பட்டது.

***

"சார்! தபால்!" என்ற குரலைக் கேட்டு வெளியே வந்து கடிதத்தை வாங்கினாள் பொன்னனின் மனைவி தங்கம். பிறகு அதைப் படத்தின் பின்னால் செருகி வைத்தாள். தங்கத்துக்குப் படிக்கத் தெரியாது. எனவே, அது எங்கிருந்து வந்தது! அதிலிருப்பது என்ன விஷயம்! என்பதைப் பற்றி அறிய, அவளுக்கு எந்தவித அக்கறையும் ஏற்படவில்லை.

ஒரு மணிக்குச் சாப்பிட வந்த பொன்னனிடம், அன்று வந்த கடிதத்தைக் கொடுத்தாள் தங்கம். உறையின் ஓரத்தைக் கிழித்து உள்ளே பார்த்த பொன்னனால் வியப்பைத் தாங்க முடியவில்லை. "நமக்கு யார் பணம் அனுப்புவதற்கு இருக்கிறார்கள்!" என்று நினைத்தபடி பணத்தைக் கையில் எடுத்தான். அதில் புதிய நூறு ரூபாய் நோட்டுகளாக, பன்னிரண்டு நோட்டுகள் இருந்தன. அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. தன் கணவன் கையில் இத்தனை நோட்டுகளைக் கண்ட தங்கம், விஷயம் புரியாமல் விழித்துக் கொண்டிருந்தாள்.

பொன்னனுக்குத் தன் நினைவு வரச் சிறிது நேரம் பிடித்தது. சட்டென்று அந்தக் கடிதம் அவன் கண்ணில் பட்டது. படிக்கலானான்.

"அன்புள்ள 'ஜலஜா பாங்க்' தொழிலாளி பொன்னன் அவர்களுக்கு, ஒரு ஏழை வணக்கத்துடன் எழுதிக் கொண்டது.

ஐயா! இந்தக் கடிதமும், பணமும் உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கலாம். என்னை நீங்கள் அறிய மாட்டீர்கள். ஆனால், உங்களை எனக்கு நன்றாகத் தெரியும்.

உங்கள் பாங்கின் பணமான ஆயிரம் ரூபாயைத் தொலைத்து விட்டு, இப்போது இருபது ரூபாய் சம்பளத்தில் நீங்கள் படும் கஷ்டத்தையும் நான் நன்றாக அறிவேன். உங்கள் பணம் என் கையில் தான் கிடைத்தது. அதன் பயனாய், பட்டுப் போய்க் கொண்டிருந்த என் குடும்பச் செடி துளிர்த்து, இப்போது பூத்துக் குலுங்குகிறது.

உங்கள் பணத்தால் நான் இப்போது ஒரு குறையுமின்றி வாழ்கிறேன். ஆனால் நிரபராதியான நீங்கள் சம்பளத்தில் மாதம் இருபது ரூபாய் தண்டனை அடைகிறீர்கள். இதனால் தினம் என் மனச்சாட்சி என்னை வதைத்துக் கொண்டே இருக்கிறது. மாதம் இருபது ரூபாயில் ஒரு பெரிய குடும்பம் எப்படி நடக்கும் என்பது ஏழையிலும் ஏழையாயிருந்த எனக்குத் தெரியாதா?

என் கையில் கிடைத்த பணம் உங்களுடையது தான் என்பதை நிச்சயமாகத் தெரிந்து கொள்ள, நான் பட்ட கஷ்டங்களை அந்தக் கடவுள்தான் அறிய முடியும். அதற்குப் பலனும் கிடைத்து விட்டது. நீங்கள் செய்த உதவியை நான் என்றும் மறக்க மாட்டேன். இத்துடன், நீங்கள் தொலைத்த பணமான ரூபாய் ஆயிரமும் அதற்குரிய இத்தனை நாள் வட்டி இருநூறும் இருக்கிறது. தயவுசெய்து இதை ஏற்றுக் கொள்ளும்படி தாழ்மையாய் வேண்டிக் கொள்கிறேன். இன்னொன்றும் உங்களைக் கேட்டுக் கொள்வது என்னவென்றால், உங்களுக்கு முடியுமானால், "மனச்சாட்சி" பத்திரிகையின் மூலம் பணம் உங்களிடம் சேர்ந்த விஷயத்தைத் தெரியப்படுத்துமாறும் கேட்டுக் கொள்கிறேன்."

இதைப் படிக்கப் படிக்க, பொன்னனின் கண்களை ஆனந்த மிகுதியால், கண்ணீர் திரையிட்டு மறைத்தது. "ஆமாம், ஏழையின் கஷ்டத்தை ஏழைதான் அறிய முடியும். இதே பணம் வேறு யாரிடம் கிடைத்திருந்தாலும், திருப்பி அனுப்புவார்கள் என்று என்ன நிச்சயம்! கோடியில் ஒருவன் இந்த மனிதன்!" என்று வாய் விட்டுக் கூறிக் கொண்டே பாங்கை நோக்கிப் பணத்துடனும் கடிதத்துடனும் ஓடினான்.

'மனச்சாட்சி' பத்திரிகையில் பத்தாம் தேதி கீழ்க்கண்ட சமாசாரத்தைப் படித்தபடியே தன்னை மறந்துபோய் ஆனந்த மிகுதியால் உட்கார்ந்து கொண்டிருந்தான், ரங்கன்.

## கிடைத்து விட்டது!

*நீங்கள் அனுப்பிய பணம் 'ஜலஜா பாங்க்' தொழிலாளியாகிய என்னிடம் கிடைத்துவிட்டது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். உங்கள் உதவியால் என் சம்பளம் பழையபடி ஆகிவிட்டதுடன், பத்து ரூபாய் அதிகமாகியிருக்கிறது என்பதையும் நன்றியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.*

தெருவிலிருந்து கிடைக்கும் பொருள்களை, உரியவர்களிடம் சேர்ப்பிக்க அனேகமாக ஒருவருக்கும் மனம் வராது. ஆம்; மனம் வந்தது! யாருக்கு ஒரு ஏழைத் தொழிலாளிக்கு! அதுவும் நூற்றுக் கணக்கான ரூபாய்களை உரியவரைத் தேடி வட்டியும் முதலுமாகத் திருப்பிக் கொடுக்க!

# உயர் பதவிக்கு உகந்தவன்













## ஸெவன் ஓ'க்ளாக் பிளேடுகளால் உங்களுக்கு என்ன அனுகூலம்

பணம் மிச்சமாகிறது. டீக்கான தோற்றம்.
க்ஷவரசுகம். பரிசுத்தத்தன்மை.
வெற்றிக்கான மார்க்கம்.

தினசரி ஸெவன் ஓ'க்ளாக் பிளேடுகளால் க்ஷவரம் செய்துகொள்ளுங்கள்.

# 7 o'clock BLADES



# சக்கரவர்த்தித் திருமகன்

## 50. கழுகின் வீரம்

ராஜாஜி

"ஐயோ சீதா, ஐயோ லக்ஷ்மணா" என்று மாரீசன் கதறியதைக் கேட்ட சீதை, அது ராமன் கதறியதே என்று எண்ணி விட்டாள். பெருஞ்சுழற் காற்றில் அகப்பட்ட வாழை மரத்தைப் போல் நடுங்கிப் பதைபதைத்து, "லக்ஷ்மணா! அதோ அண்ணன் குரல் தெரியவில்லையா? ஓடு, ஓடு" என்றாள்.

தாங்க முடியாத திகிலடைந்து லக்ஷ்மணனைப் பார்த்து, "நாயகனுடைய துயரக் குரல் கேட்கிறதே! ஐயோ, என் உயிர் நிற்காது, நான் மாய்வேன்! போ! போ! நிற்காதே!" என்று பொறுக்க முடியாத துயரத்திலும் பயத்திலும் தத்தளித்துக் கதறினாள்.

"காட்டில் ஏதோ அபாயத்தில் சிக்கி விட்டான். பெரும் கூச்சல் போட்டானே, கேட்கவில்லையா? இன்னும் இங்கே நிற்கிறாயே!" என்று அழுதாள்.

"ராக்ஷசர்களிடையில் உன் அண்ணன் அகப்பட்டுக் கொண்டு கதறுகிறான். ஒரே பாய்ச்சலாக ஓடி அவனைக் காப்பாற்ற வேண்டாமா? சும்மா நிற்கிறாயே!" என்று கதறினாள்.

அரக்கர்களுடைய மோசத்தை அறிந்த லக்ஷ்மணன் அண்ணன் இட்ட ஆணையை நினைவில் கொண்டு அசையாமல் நின்றான்.

ஜானகிக்கு உண்டான கோபமே கோபம்! வயிற்றில் இரண்டு கைகளாலும் அடித்துக் கொண்டு, "சுமித்திரையின் மகனே! சத்துருவாகி விட்டாயா? இவ்வளவு நாளும் வேஷம் போட்டாயா? ராமனுடைய மரணத்துக்கா இவ்வளவு நாள் காத்திருந்தாய்? அவன் இறந்தால் அவனுக்குப் பின் என்னை அடைந்து விடலாம் என்று எண்ணி இத்தனை நாள் ஏமாற்றினாயா? துஷ்டனே, ராமன் கதறிக் கூவுவதைக் கேட்டும் போகாமல் இங்கே நிற்கிறாயே? அண்ணனிடம் நீ காட்டிக் கொண்ட பிரியமெல்லாம் பெருஞ் சூழ்ச்சியா? துன்மார்க்கனே!" என்றாள்.

லக்ஷ்மணன் காதுகளை மூடிக் கொண்டான்.

துயரத்தால் துடிதுடித்துக் கொண்டு, உடலெல்லாம் கண்ணீரில் தோய்ந்து புத்தி முற்றிலும் இழந்து போய் இப்படிப் பேசிய சீதையைப் பார்த்து லக்ஷ்மணன் மெதுவாகச் சொன்னான்:

"வைதேகி! உன் புருஷன் தேவ அசுர மானுட ஜாதிகளில் எவன் எதிர்த்தாலும் அவனுடன் போர் செய்து கொன்று விட்டுத் திரும்பி வருவான், இது நிச்சயம். பயப்படாதே! என் அம்மையே! புத்தியை சுவாதீனப் படுத்திக்கொள். பயப்பட வேண்டாம்! நம் ராமனை எந்த அரக்கனும் எந்த மிருகமும் எந்த பட்சியும் எந்தப் பேயும் எந்த கந்தர்வனும் எந்த தேவனும் எந்த அசுரனும் தீண்ட முடியாது. நீ இப்படிப் பேசலாகாது, என் அருமைத் தாயே! ராமனுடைய பலம் எனக்குத் தெரியும். மூன்று உலகத்தில் யார் வந்து அவனை எதிர்த்தாலும் ராமனுடைய வெற்றி நிச்சயம். நீ துயரப்பட வேண்டாம். கொஞ்ச நேரத்தில் உன் நாயகன் அந்த



மானைக் கொன்றுவிட்டு அ
எடுத்துக் கொண்டே வருவான்
நீயே பார்ப்பாய்! இந்தக் குர
அவனுடைய குரல் அல்ல. இ
ராக்ஷசனுடைய மாயை. அ
னால் நீ ஏமாந்து துயரப்பட
வேண்டாம். உன்னை அண்ணன் எ
னிடம் ஒப்புவித்து விட்டுப் போயிரு
கிறான். உன்னைத் தனியாக விட்
விட்டு என்னைப் போகச் சொல்
வேண்டாம். அண்ணன் ஆணை
நான் மீறலாகாது. ஜனஸ்தான ராக்
சர்களை நாம் கொன்றதனால் ப
வாங்க இப்படி ராக்ஷசர்கள் ப
வித மோசம் செய்து வருகிறார்கள்
அவர்கள் போடும் வேஷங்களையு

மாற்றுக் குரல்களையும் நம்பலாகாது. இது ராமன் போட்ட கூக்குரல் அல்ல; நீ கொஞ்சமும் பயப்பட வேண்டாம்'' என்றான்.




இப்படி லக்ஷ்மணன் சொன்ன போதிலும் சீதை கண்கள் சிவந்து போய்ப் பெரும் கோபமடைந்து சொல்லத் தகாத வார்த்தைகளைச் சொன்னாள்:

"அண்ணன் ஆணை என்று சமாதானம் சொல்லி, அண்ணன் கதறிக் கூவினாலும் போகாமல் அவனைச் சாக விடுகிறாயா? ஆகா, உன்னை நம்பி என்ன மோசம் போனோம் ராமனும் நானும்! நீசனே! துஷ்டனே! ராமனுக்குப் பகையாய் வந்த வஞ்சகனே! ராமனுக்கு ஆபத்து வந்தது என்று மகிழ்ச்சி அடைகிறாயா? ஏமாற்றப் பார்க்கிறாயா? ராமனோடு நீ வனத்துக்கு வந்த நோக்கத்தை இப்போது நான் கண்டு கொண்டேன். அடே பாவி! பரதனுடைய தூண்டுதலா இது? எல்லாரும் என் நாயகனுடைய சத்துருக்கள் ஆகி விட்டீர்களா? நீங்கள் எல்லாரும் சேர்ந்து என்ன செய்ய யோசிக்கிறீர்கள்? ராமனோடு வாழ்ந்த நான் உங்களைக் கண்ணெடுத்தும் பார்ப்பேனா? ராமன் இறந்த பிறகு ஒரு நிமிஷம் உயிருடன் இருக்க மாட்டேன், அறிவாய்!'' என்றாள்.

மயிர்க் கூச்சலெடுக்கும்படியான இந்த வார்த்தைகளைக் கேட்டு லக்ஷ்மணன் இரண்டு கைகளையும் கூப்பி, "தாயே! என் தெய்வமே! ஜனகருடைய புத்திரியே! இத்தகைய மொழிகள் உன் வாயிலிருந்து வரலாமா? பழுக்கக் காய்ச்சின இரும்பு போல் காதுகளில் புகுகின்றனவே! நீ எண்ணுவது அநீதி, பொய். பார்த்துக் கொண்டிருக்கும் தேவர்கள் சாக்ஷியாகச் சொல்லுகிறேன். வன தேவதைகள் சாக்ஷியாகச் சொல்லுகிறேன். என்னைச் சந்தேகப் பட்டுப் பேசினாயே! ஆகா! இன்று பெண்களுடைய குணக் குறைவு உன்னிடமும் இருப்பதைக் கண்டேன். எனக்குப் பாப எண்ணம் சூட்டினாயே, அடடா! இது உன்னுடைய கெட்ட காலம் என்றே எண்ணுகிறேன். பெரிய விநாசம் உன்னைத் தாக்கி விடுவது நிச்சயம்'' என்றான் அப்பாவி லக்ஷ்மணன். பயத்தால் நடுங்கினான்.

"இதோ, உலர்ந்த கட்டைகளிருக்கின்றன. தீ மூட்டி அதில் விழப் போகிறேன். கோதாவரியில் விழுந்து உயிர் நீப்பேன். அல்லது தூக்குப் போட்டுக் கொண்டு சாவேன். மலையிலிருந்து கீழே குதித்தோ அல்லது விஷம் குடித்தோ சாவேன்! என்ன நினைக்கிறாய்? ராமன் கூக்குரலிட்ட இடம் போவாயா, இல்லையா?'' என்றாள் சீதை.

இவ்வாறு சொல்லி சீதை வயிற்றில் அடித்துக் கொண்டு கதறி அழுதாள். இதைக் கண்டு பொறுக்க முடியாமல் லக்ஷ்மணன் கை கூப்பி நமஸ்கரித்து, "சீதையே! சரி, நீ சொல்லுகிறபடி அண்ணன் ஆணையை மீறி உன்னைத் தனியாக விட்டு விட்டுச் செல்கிறேன். உனக்கு மங்களம்! வன தேவதைகள் உன்னைக் காப்பார்களாக! நீ சொல்லு

திறபடியே போகிறேன். ஐயோ, கெட்ட நிமித்தங்கள் காண்கிறேனே! பயமாகத் தானிருக்கிறது. நான் வந்து மறுபடி உன்னை ராமனுடன் பார்ப்பேனு! சந்தேகமாக இருக்கிறது. ஆயினும் இதோ போகிறேன்!'' என்று சொல்லி விட்டுச் சென்றான்.

போகும்போது அடிக்கடி திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே கொஞ்சம் கூட மனமில்லாமல் சென்றான்.

* * *

லக்ஷ்மணன் மனத்தைக் கோபமும் துயரமும் சேர்ந்து வாட்டின. சீதை சொன்ன கோரமான மொழிகளை அவன் எப்படிச் சகிப்பான்? அல்லது மறப்பான். அனைத்தையும் விட்டு விட்டு அண்ணனுடன் வனத்துக்கு வந்த ராஜ குமாரன் மனத்தை அந்த மொழிகள் மிகவும் துன்புறுத்தின.

ராமன் போன வழியிலேயே லக்ஷ்மணன் சென்றான். அந்த சமயத்துக்காகக் காத்துக்கொண்டிருந்த ராவணன் சுத்தமான காவித் துணி அணிந்து, இருப்பிடமின்றி பிக்ஷை எடுத்துத் திரியும் சன்யாசியாகத் தன்னை மாற்றிக் கொண்டு, மனத்தில் தீய எண்ணமும் வாயில் வேத மந்திரங்களும் சொல்லிக் கொண்டு ராமனுடைய ஆசிரமத்தண்டை சென்றான்.

குடிசை வாயிலில் வைதேகி தனியாக நின்று கொண்டிருந்தாள். ராமன் வருவானு என்று வனத்தைப் பார்த்தவண்ணமாக நின்றாள். ராவணன் சீதையைப் பார்த்தான்.

பார்த்ததுமே, சூர்ப்பனகை எழுப்பிய ஆசை அவன் உள்ளத்தில் ஊர்ஜிதப் பட்டு நன்றாக உருக்கொண்டு விட்டது. எப்படியாவது இவளை அடைய வேண்டுமென்று நீசன் தீர்மானித்து விட்டான்.

* * *

காஷாயம் தரித்து, கமண்டலமும் திரிதண்டமுமாக வந்த பரிவ்ராஜ சந்நியாசி ஆசிரமத்தண்டை நின்றபடியால் ஆசார முறைப்படி சீதை அவனுக்கு உபசாரம் செய்தாள். கடமைப்படி ஆசனம் அமைத்து, பழமும் கிழங்கும் அவன் முன் வைத்தாள். அந்தக் காலத்தில் இது தவறக் கூடாத பண்பாடு.

அமைத்த ஆசனத்தில் சந்நியாசி உட்கார்ந்து சீதையைப் பார்த்தான். அவன் ஆசை இன்னும் அதிகரித்து முற்றிப் போயிற்று.

கேவலம் மிருகானுபவத்துக்கு மட்டும் ராக்ஷசேந்திரன் ஆசைப் படவில்லை. பாவியாயிருந்தாலும், பச்சை ஊன் தின்னும் அரக்கர் குலத்தவனாக இருந்தாலும், அவனுடைய எண்ணம் சீதையின் காதலைப் பெற்று அவளை மனைவியாக்கிக் கொண்டு மேலான இன்பத்தை அனுபவிக்க வேண்டும் என்பது. லங்கேசனுடைய ஆசை அவளுடைய சம்மதத்தைப் பெறவேண்டும் என்று. வனவாசத்தில் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் ஏழை ராமனை விட்டுவிட்டு சம்பத்தும் சக்தியும் வாய்ந்த தன்னிடம் சந்தோஷமாக சீதை வந்து விடுவாள் என்றும் அதுவே ராமனுக்குச் சரியான அவமானமுமாகும் என்றும் ராவணன் எண்ணினான். தான் கண்ட மற்ற ஸ்திரீகளைப் போல் சீதையும் இருப்பாள் என்று எதிர்பார்த்தான்.

* * *

இலை முன் உட்கார்ந்த சந்நியாசி கூச்சமில்லாமல் சீதையின் அழகைப் புகழ்ந்து பேசினான்.

"நீ யார்? மிருகங்களும் ராக்ஷசர்களும் நிறைந்த இந்த பயங்கரமான காட்டில் தனியாக இருக்கிறாய்?'' என்று கேட்டான்.

ஆசார முறைப்படி செய்ய வேண்டிய உபசாரத்தைச் செய்து கொண்டும் கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்லிக் கொண்டும் வந்தாள். ஆயினும் ராஜ குமாரர்கள் சீக்கிரம் வர மாட்டார்களா என்று வாயில் பக்கம் பார்த்த வண்ணமாகவே இருந்தாள்.

அரக்கன் மெள்ளமெள்ளத் தான் யார் என்பதைச் சொல்ல ஆரம்பித்தான். தன் குலத்தின் பெருமையை எடுத்துச் சொன்னான். தன் சக்தி, தன் ஐசுவரியம் இவற்றையெல்லாம் சொன்னான். தன்னுடைய பிரதாபத்தைச் சொல்லி ராமனை இகழ்ந்தும் பேசினான்.

"எனக்கு மனைவியாவாய்; லங்கையில் சுகமாக இருக்கலாம், போவோம்!'' என்று முடித்தான்.

இப்படி எதிர்பாராத சங்கட நிலையடைந்ததும் சீதையானவள் கற்பின் சக்தியால் அபார தைரியமடைந்து அரக்கனை லட்சியம் செய்யாமல், "நீசனே! துஷ்டனே! உன் விநாசம் நெருங்கிற்று! நீ மடிவாய், விலகிப் போ, உயிரைக் காப்பாற்றிக் கொண்டு ஆசிரமத்தை விட்டுப் போ!'' என்று சீறினாள்.

அரக்கனுக்குக் கடுங் கோபம் உண்டாகி விட்டது. மாறு வேஷம் நீக்கிவிட்டுத் தன் நிஜ ரூபத்தைத் தரித்துக்

# I am Vitaminised..

ORT/G/13

# KALZANA-D
## VITAMIN ACTIVATED CALCIUM

கல்ஸாணு-D கால்ஷியம் குறைவைத் தடுத்து, நோயை எதிர்த்துப் போராடும் சக்தியை அதிகரித்து உறுதியான பற்களையும் எலும்புகளையும் அளித்து, இரத்தத்தையும் சருமத்தையும் சுத்தப்படுத்துகிறது.

---

கூந்தலையும் கூந்தலழகையும்
பாதுகாக்கும் மருந்து

# கேசவர்த்தினி




காலையில் தடவியதால் பொடுகு நீங்கி, நாள் முழுவதும் பளபளவென்று கேசம் விளங்கட்டும்.

சிறு வயதிலிருந்து தடவுவதால், ஆயுள் முழுவதும் அழகிய கூந்தல் பெருகட்டும்.

இனி தலை அரிப்பு ஏன்? மயிர் உதிர்வதேன்? இள நரையைத் தள்ளி வையுங்கள். கூந்தலை ஆரோக்கியமுள்ளதாக்குங்கள்.

**கேசவர்த்தினியினால்**
**கூந்தலை விருத்தி செய்யுங்கள்**
ஷாம்புவினால் தலை சுத்தமாகவும், சுகந்தமாகவும் ஆக்குங்கள்

கேசவர்த்தினி அணா 14. ஷாம்பு அணா 14. தபால் செலவு வேறு. எங்கும் கிடைக்கும்.

கேசவர்த்தினி ப்ராடக்ட்ஸ், கோயமுத்தூர்

NO. 6

கொண்டான். அவள் தலைமயிரை ஒரு கையில் பற்றி மற்றொரு கையால் அவளைப் பிடித்துத் தூக்கிக் கொண்டு வனத்துக்குள் வேகமாகச் சென்று ஆயத்தமாக இருந்த தேரில் சீதையைத் தூக்கியவாறு ஏறி ஆகாயத்தில் கிளம்பி விட்டான்.

"ஹா என் நாதனே! ராமா! எங்கே போய் விட்டாய்? லக்ஷ்மணா தலைசிறந்த பக்தனே! பிடிவாதம் செய்து உன்னைத் துரத்தினேனே!" என்று கதறி அழுதாள். அரக்கன் அவளை அசையாமல் அழுத்திப் பிடித்துத் தேரை வேகமாகச் செலுத்தினான். கீழே காட்டிலுள்ள செடிகளையும் மரங்களையும் கூவிக் கூவி, "ராமனிடம் சொல்லுங்கள்" என்று சீதை கதறினாள்.

அப்போது ஒரு மரத்தின் மேல் அரைத் தூக்கமாக உட்கார்ந்திருந்த ஜடாயு வேகமாகச் சென்று கொண்டிருந்த ரதத்தைப் பார்த்தான். சீதையின் குரலைக் கேட்டு, யார் என்று தெரிந்து கொண்டான். சீதையும் ஜடாயுவைக் கண்டாள்.

"நீ என்ன செய்வாய், பறவையே! லங்கேசன் என்னைத் தூக்கிச் செல்கிறான். இந்தக் கொடிய அரக்கன் எல்லா ஆயுதங்களோடு மிருக்கிறான். நீ எதிர்த்தால் உன்னைக் கொன்று விடுவான். உன்னால் என்னை மீட்க முடியாது. விஷயத்தையாவது ராமனிடம் சொல்" என்று அழுதாள்.

• • •

ஜடாயு தேரில் ராவணனைப் பார்த்து "ஏ! லங்கேசனே! நான் ஜடாயு, கழுகு ராஜன், நீண்ட நாள் உன்னைப்போல் நானும் அரசனாக வாழ்ந்தவன். தம்பீ! தகாத காரியத்தைச் செய்யாதே! நில்! அரசன் என்று சொல்லிக் கொள்ளுகிற நீ இத்தகைய காரியத்தைச் செய்யலாகாது. பெண்களைக் காப்பதல்லவா அரசனுடைய கடமை? அதிலும் ராஜ ஸ்திரீயை இவ்விதம் செய்யலாமா? அழிந்து போவாய். ஜாக்கிரதை! உடனே அவளை விட்டு விட்டுத் திரும்பிப் போ! அவளுடைய கோபப் பார்வையால் நீ சுட்டெரிந்து மாண்டு போவாய்! அவள் யார் என்று எண்ணுகிறாய்? விஷப் பாம்பை மடியில் கட்டிக் கொள்ளாதே! காலனுடைய பாசம் உன் கழுத்தின் மேல் விழுந்து உன்னை இழுத்துப்போக ஆயத்தமாக இருப்பதை நீ அறிவாய். துஷ்டனாக நடந்து கொள்ளாதே! தாங்காத பாரத்தைச் சுமந்து போகப் பார்க்காதே! விஷத்தைத் தின்று பிழைக்கப் பார்க்காதே. நான் கிழவன். நீ யுவன். கவசம் பூண்டு தேரும் வில்லுமாக இருக்கிறாய். ஆயினும் என் கண் முன்னில் நீ வைதேகியை எடுத்துப் போக விடமாட்டேன். ராமன் இல்லாத சமயமா சீதையை எடுத்துப் போகிறாய்? ராமன் பேரில் உனக்குக் கோபம் இருந்தால் நின்று ராமனுடன் போர் செய். உனக்கு அந்த தைரியமில்லை என்பது எனக்குத் தெரியும், கோழையே! இதோ நான் இருக்கிறேன். இறங்கி என்னுடனாவது போர் செய். நான் உயிருடன் இங்கே இருக்க நீ ராமன் மனைவியைத் தூக்கிப் போக முடியாது. ரதத்திலா இருக்கிறாய்? தப்பலாம் என்று எண்ணுகிறாயா? பார், உன் தலைகள் பனம்பழம் போல் கீழே உதிர்ந்து விழப் போகின்றன. ஓடாதே, நில்!" என்றான்.

• • •

இந்தப் பேச்சைக் கேட்ட ராவணன் சினம் கொண்டு பறவையான ஜடாயுவைத் தாக்கினான்.

பெரும் காற்றுக்கும் மேகக் கூட்டத்துக்கும் நடக்கும் யுத்தத்தைப்போல் ஒரு அற்புத யுத்தம் அந்த வனத்தில் நடந்தது. சிறகு கொண்ட மலையைப் போல் ஜடாயு தாங்காத கோபத்துடன் யுத்தம் செய்தான். கொல்லும் நாராசங்களை ராவணன் விடுத்தான். அவற்றையெல்லாம் கழுகரசன் தடுத்து ராவணனுடைய உடலைக் கிழிக் கிழித்தான். அரக்கன் ரோஷம் கொண்டு சர்ப்பங்கள் போன்ற மிகவும் கூரிய சஸ்திரங்களைப் பறவையின் மேல் விடுத்தான்.

கழுகரசன் மிகவும் துன்பப்பட்டான். தேரில் இருந்த சீதையைப் பார்ப்பான். கண்ணீர் பெருகிய அவள் கண்களையும் பார்ப்பான். அந்தக் காட்சியைச் சகிக்காமல் ராவணனைப் பலமாகத் தாக்கினான். தன் உடலில் உண்டாகிய பெரும் காயங்களையாவது அரக்கன் செலுத்திய அம்புகளையாவது கொஞ்சமும் கவனியாமல் தாக்கினான். தன் சிறகுகளினால் அரக்கன் தலையிலிருந்த ரத்தின கிரீடத்தையும் அவன் கையிலிருந்த வில்லையும் ஒடித்துத் தள்ளினான்.

இந்த அவமானத்தைத் தாங்காமல் பெரும் கோபம் அடைந்த ராவணன் இன்னொரு வில்லெடுத்துச் சரமாரி பொழிந்தான். பக்ஷிராஜன் தன் சிறகுகளால் அந்த அம்புகளை உதறித் தள்ளி அரக்கன் பிடித்த இரண்டாவது வில்லையும் ஒடித்துத் தள்ளினான்.

அதன்மேல் ஜடாயு தேரைத் தாக்கி, பிசாசு முகங்களைக் கொண்ட கோவேறு கழுதைகளையும் சாரதியையும் கொன்று தேரைச் சுக்குநூருகப் பொடி செய்து விட்டான். சீதையைப் பிடித்துக் கொண்டே ராவணன் பூமியில் விழுந்தான். வாகனமிழந்து சாரதியையும் இழந்து அரக்கன் பூமியில் விழுந்த போது, பூதங்கள் எல்லாம் 'சரி' 'சரி' என்று பக்ஷிராஜனைப் பாராட்டின.

வயோதிக நிலையும், யுத்தத்தின் சிரமமும் காயங்களும் எல்லாம் சேர்ந்து ஜடாயுவைக் களைப்படையச் செய்தது. ஒரு நிமிஷம் தள்ளாமல் நின்ருன். அதைக் கண்டு ராவணன் இதுதான் சமயம் என்று சீதையைப் பிடித்திருந்த வண்ணமே தேரின்றி அப்படியே ஆகாயத்தில் கிளம்பிப் போகப் பார்த்தான். உடனே பக்ஷி ராஜன் மறுபடியும் ராவணனைத் தாக்கி நிறுத்தி, "அரக்கனே! திருடனைப் போல் ஓடுகிருயா? நீசனே! நீ நாசமாகப் போவது நிச்சயம். நின்று யுத்தம் செய்! யுத்தத்தில் உன் தம்பி கரன் அடைந்த கதியை நீயும் அடைவாய். கோழையைப் போலும் திருடனைப் போலும் ஓடித் தப்பப் பார்க்காதே!" என்று சொல்லி அவனுடைய முதுகின்மேல் திடீரென்று மேலிருந்து இறங்கி, கால் நகங்களாலும் கூரிய மூக்காலும் கொத்தியும் கீறியும் ரணமாக்கி ராவணனை மிகவும் துன்புறுத்தினன்.

இதைத் தாங்க முடியாமல் ஒரு பக்கம் சீதையைப் பிடித்துக் கொண்டே தன் முதுகின் மேலிருந்த ஜடாயுவைத் தன் கைத் தலங்களால் அடித்து விரட்டப் பார்த்தான். சீதையைப் பிடித்த கைகளை பக்ஷிராஜன் ஒன்றன்பின் ஒன்ருகக் கொத்திப் பிடுங்கி எறிந்தான். பிடுங்கி எறிய எறிய ராவணனுக்குப் புதுக் கைகள் புற்றிலிருந்து பாம்பு வருகிற மாதிரி முளைத்து வந்தன. வலி தாங்காமல் கோபம் மேலிட்டு ராவணன் சீதையைக் கீழே விட்டு விட்டு ஜடாயுவைக் கைகளால் அடித்தும் கால்களால் உதைத்தும் பலமாகத் தாக்கினன்.

இந்த கோர யுத்தம் வெகு நேரம் நடந்தது. கிழவனுகிய ஜடாயு மிகவும் கஷ்டப்பட்டான். பிறகு ராவணன் தன் கத்தியை எடுத்து பக்ஷிராஜனுடைய சிறகுகளையும் கால்களையும் கருணையின்றி வெட்டினன். பக்ஷி அதற்கு மேல் ஒன்றும் செய்ய முடியாமல் தரையில் குற்றுயிராக வீழ்ந்தது.

ஜானகி குதித்து ஓடித் தரையில் வீழ்த்தப்பட்ட பறவையை இறுகத் தழுவிக் கொண்டு "என் அப்பனே! எனக்காக உயிர் விட்டாயே! என் நாதனுக்கு மற்ெருரு தகப்பனுக வந்தாயே, இறந்தாயே!" என்று புலம்பினுள்.

மகா சௌரியத்தோடு யுத்தம் செய்து விட்டு, காட்டுத் தீ எரிந்து அணைந்து விட்டது போல் தரையில் விழுந்த பறவையைப் பார்த்துவிட்டு ராவணன் திருப்தியடைந்தான். சீதையோ பறவையை அணைத்துக் கொண்டு, "இறந்த என் மாமனுர் தசரத ராஜா உயிர் பெற்றது போல் யுத்தம் செய்தாயே" என்று புலம்பினுள்.

பிறகு அரக்கன் அவளைத் தூக்கிப் போகச் சென்ருன். "ஐயோ!" என்று கதறிக் கொண்டு அவள் இங்குமங்கும் அனுதையாக ஓடினுள். அங்கிருந்த மரங்களைப் பிடித்துக் கொண்டு, "ராமா! எங்கிருக்கிருய்? லக்ஷ்மணு, எங்கிருக்கிருய்? ஓடி வாருங்கள்!" என்று புலம்பினுள். ராக்ஷசன் அவளைப் பலாத்காரமாகத் தூக்கிப் பிடித்துக் கொண்டு ஆகாயத்தில் கிளம்பினுன்.

மேலே கருமேகத்தை அடுத்த மின்னலைப் போல் பிரகாசித்தாள் சீதை. அரக்கன் அவளைத் தூக்கிச் செல்லும் போது காட்டுத் தீ பற்றி எரிந்துகொண்டிருக்கிற ஒரு மலைபோல் காணப்பட்டான். வைச்ரவனுடைய தம்பியாகிய ராவணனின் தேகம் ஆகாயத்தில் வேகமாகச் செல்லும்போது சீதையின் பிரகாசத்தால் ஒரு தூமகேதுவைப் போல் இருந்தது.

* * *

இப்படி ஜானகி அரக்கன் கையில் அகப்பட்டு அபகரிக்கப்பட்டாள். அச்சமயம் சூரியன் தன் பிரகாசத்தை இழந்தான். இருள் சூழ்ந்தது. சர்வ பூதங்களும் புலம்பின.

"தர்மம் அழிந்தது. சத்தியம் மறைந்தது. நீதிநெறி, கருணை எல்லாம் ஒழிந்தன" என்று பிரலாபித்தன.

தரையிலிருந்து பார்த்த ஊமைப் பிராணிகளும் கண்களில் நீர் விட்டன.

ராவணன் ஆகாயத்தில் கருணையின்றிப் பிராட்டியைப் பிடித்துக்கொண்டு தன் விநாசத்தை நோக்கி வேகமாகச் சென்ருன். சீதை சூட்டியிருந்த மலர்களின் இதழ்கள் சிந்திச் சிதறின. ராவணனுடைய சம்பத்து சிதறி விழும் என்று சொல்லிக் கொண்டு விழுவது போல் காணப்பட்டன.



# கடினமான வேலை

# கடினமான விளையாட்டு



சுறுசுறுப்பான வேலைகளுக்கு (சுறு சுறுப்பான விளையாட்டுகளுக்கும்) உடலில் ஏராளமான நேக்க சக்தி தேவை. இது சாதாரண உணவில் எப்போதுமே கிடைக்காது. இந்த சந்தர்ப்பங்களில் 'ஓவல்டின்' அதிகப்படி சக்தி அளித்து, உடலையும், மூளையையும், நரம்பையும் பலப் படுத்துகிறது.

சுறுசுறுப்பான, சந்தோஷமான அன்றாட வாழ்க்கைக்கு ஓவல்டின் இன்றியமையாத பதில் கொடுக்கிறது!

விநியோகஸ்தர்கள்:
ரெஹ்ராம்ஸ் ட்ரேடிங் கோ.,
(இந்தியா) லி-ட்.

## -அருந்துங்கள் ருசிகரமான

# ஓவல்டின்




**... ஊக்கத்திற்கும்**
**உற்சாகத்திற்கும்!**

ரேடியோ சிலோனிலிருந்து ஓவல்டின் அமெச்சூர் நேரங்களை கேளுங்கள்:
(அந்தி-41.72 மீட்டர்கள்), சனிக்கிழமைகள் இரவு 8 முதல் 8-30 மணி.
(இங்கிலீஷ் 9520 கிலோசைக்கிள் 31 மீட்டர்கள்)
ஞாயிறுகள் இரவு 8 முதல் 8-30 வரை

IV.459

# ஹாஸ்யக் களஞ்சியம்












என்னைப் பார்த்து இவன் காப்பி அடிக்கிறான், சார்!



"நாம் வளர்க்கிறது போறுதின்னு, இருக்கிற பால் எல்லாவற்றையும் குடித்து விட்டு நம் வீட்டு நாய் தானுகவே நமக்குத் தெரியாமல் வளர ஆரம்பித்து விட்டது!"



"கையெழுத்துப் போடணுமா, இதைக் கொஞ்சம் பிடித்துக் கொள்ளுங்கள்!"



"இதென்னடா, வம்பாயிருக்கு! உன்னைப் பிடிக்க வரவில்லே! கறிகாய் வாங்கத்தான் கூப்பிட்டேன்! நில்லு!"










முன் அழகு கண்ணாடியில் பார்த்தாகி விட்டது. கண்ணாடியைத் திருப்பிப் பின்னழகைப் பார்க்கும் நூதனக் கண்ணாடி கண்டு பிடிக்கப்படுமா?



"நீங்க மறுக்கப்படாது! அவசியம் உபன்யாசத்துக்கு வரணும்!"
"சரி! வீட்டில் தூங்குகிறதை அங்கு வந்து தூங்குகிறேன்!"



"அப்பளத்தைச் சுட்டு விடலாம் என்றால் நெருப்பு இல்லை!"
"அதற்கு நான் என்ன பண்ணறது?"
"இந்தா! இந்தத் துப்பாக்கியாலே சுட்டுவிடு!"



"சமயம் வரும் போது சந்தர்ப்பத்தைத் தாவிப் பிடித்து விடுங்க! பெரிய மனிதர் ஆகிவிடலாம்!"
"அந்த சமயம் எப்படித் தெரியும்?"
"சும்மா தாவிக்கிட்டே இருங்க! கையில் தானாகச் சிக்கிக் கொள்ளும்!"

"ஐயோ! கார் இவ்வளவு கிட்ட வந்து விட்டதே!"




சாமா




## 18. சிங்கப் போர்

நொண்டி காட்டுக்குள் போவது அபாயம் என்று சொல்வதைக் கேட்ட பிரபாகரனும், உமாவும் ஒன்றும் பேசாமல் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். "ஐயா! நீங்கள் எங்கள் நன்மையைக் குறித்துத் தான் சொல்லுகிறீர்கள். ஆனால் நாங்கள் எடுத்துக் கொண்ட காரியம் நிறைவேறும் வரையில் எந்த ஆபத்துக்கும் பயப்படப் போவதில்லை. ஆதலால் தயவு செய்து காட்டுக்கு எந்தப் பக்கமாகப் போக வேண்டும் என்று மாத்திரம் தெரிந்தால் சொல்லுங்கள். எங்களுக்கு நேரமாகி விட்டது" என்றான் பிரபாகரன்.

அதற்கு நொண்டி, "உங்கள் பையில் ஏதோ பொருள் இருப்பதுபோல் தோன்றுகிறதே, அது என்ன?" என்று கேட்டான்.

"அது ஒன்றுமில்லை; ஒரு மாம்பழம்!" என்றான் பிரபாகர்.

"அதுதானே கேட்டேன். மாம்பழத்தைப் போல இருந்ததினால்தான் சந்தேகித்துக் கேட்டேன். இந்த நொண்டிக்கு மாம்பழம் என்றால் மிகவும் பிரியம். தயவு செய்து அந்த மாம்பழத்தைக் கொடுங்கள். உங்களுக்குக் கோடிப் புண்ணியம் உண்டு" என்றான். அந்த நொண்டி மாம்பழத்தைக் கேட்டவுடனே பிரபாகரனுக்கும், உமாவுக்கும் தூக்கிவாரிப் போட்டது.

உடனே பிரபாகரன், "ஐயா, இந்த மாம்பழத்தைப் பிறருக்குக் கொடுப்பதற்காக நான் வைத்துக் கொள்ளவில்லை. தயவு செய்து அதைக் கொடுக்கும்படி என்னை வற்புறுத்த வேண்டாம்" என்றான்.

நொண்டிக்குக் கோபம் வந்து விட்டது. "கொடுக்கா விட்டால் போங்கள். நீங்கள் சொல்லும் காட்டுக்குப் போக வழி ஒன்றும் கிடையாது" என்று சொல்லிக் கொண்டே தடியை எடுத்துக் கொண்டு நொண்டி அந்த இடத்தை விட்டு அகன்றான். போகும்பொழுது 'இவர்களை என்ன பயமுறுத்தினாலும் அவர்கள் எடுத்துக் கொண்ட காரியத்தைச் சாதித்தே தீருவார்கள் போலிருக்கிறது' என்று மனத்தில் சொல்லிக்கொண்டே சென்றான் அந்த நொண்டி. அவன் பேச்சிலிருந்து வயற் காட்டுக் கிழவிதான் அந்த உருவத்தில் வந்து விட்டுப் போகிறாளோ என்ற சந்தேகம் யாவருக்கும் உண்டாகும்.

நொண்டி கோபத்துடன் போனதைப் பார்த்த பிரபாகரன், "உமா, நாம் இனிமேல் ஒருவரையும் காட்டுக்கு வழி கேட்க வேண்டாம். கேட்டால் இந்த நொண்டியைப்போல நம்மைப் பயமுறுத்தி மேலே செல்லாமல் தடுப்பார்கள். வா, நாம் அதோ தெரிகிறதே மற்றொரு குறுகிய பாதை, அதன் வழியாக நம் பிரயாணத்தைத் தொடர்ந்து நடத்துவோம். அந்த வழி காட்டுக்குச் செல்லா விட்டால் பிறகு வேறு வழியாகச் சென்றால் போகிறது" என்றான். பிறகு பிரபாகரனும் உமாவும் அந்தக் குறுகிய பாதை வழியாகத் தங்களுடைய பிரயாணத்தை மேலே தொடர ஆரம்பித்தார்கள்.

குறுகிய பாதை வழியாகக் கொஞ்ச தூரம் சென்றவுடன் பிரபாகரன், "அதோ பார்த்தாயா, உமா! இரும்புக் கம்பிகள் வெகு உயரமாகப் பொருத்தப்பட்டிருக்கின்றன. அதுதான் காட்டின் ஆரம்பமென்று தெரிகிறது. துஷ்ட மிருகங்கள் தப்பிப் பட்டணத்துக்குள் வராமலிருக்க இரும்புக் கம்பிகளைப் பலமாக நாலு பக்கமும் அமைத்திருக்கிறார்கள் போலிருக்கிறது. வா, அருகில் சென்று பார்ப்போம்" என்றான். உமா, பிரபாகரனின்

கையைப் பிடித்துக் கொண்டு மெதுவாக நடந்து சென்றாள்.

அந்த இடத்தில் ஒரு பெரிய பலகையில், ''இந்த இரும்புக் கம்பிகளுக்கப்பால் ஒரு பெரிய அடர்த்தியான காடு இருக்கிறது. அந்தக் காட்டுக்குள் பல கொடிய மிருகங்களும் மற்ற விஷ ஜந்துக்களும் இருக்கின்றன. யாராவது உத்தரவு மீறிப் போனால் துஷ்ட மிருகங்களால் அவர்களுக்கு அபாயம் நேரிடா விட்டாலும், அரசனால் கட்டாயம் கைது செய்யப்படுவார்கள். இந்தக் காடு அரண்மனையின் இரகசிய இடம்'' என்று கொட்டை எழுத்துக்களால் எழுதி இரும்புக் கம்பிகளில் மாட்டித் தொங்க விட்டிருந்தது.

இதை வாசித்த உமா, ''இப்பொழுது என்ன செய்கிறது? இங்கு ஆள் நடமாட்டமே காண வில்லையே? இந்தக் கம்பிகளுக்கப்பால் செல்லுவதற்கு ஒரு வழியும் இருப்பதாகத் தெரியவில்லை. நீ இதற்குள் போவதற்கு அரண்மனையிலிருந்து எப்படி உத்தரவு வாங்கிக் கொண்டு வருவாய்?'' என்றாள்.

''உமா, அசடே என்ன உளறுகிறாய்? நாம் போய்க் கேட்டால் நமக்கு உத்தரவு கொடுத்து விடுவார்களா? அதுவும் இவ்வூர் அரசன் மிகவும் பொல்லாதவன் என்று எல்லோரும் சொல்லுகிறார்கள். நாம் போய் உத்தரவு கேட்டுக் கிடைக்கா விட்டால் பிறகு நாம் எடுத்துக் கொண்ட காரியம் நிறைவேறாது. பேசாமல் என்னுடன் வா. அதோ தெரிகிறது பார், அந்தச் சுவரின் கட்டையில் காலை வைத்துக் கம்பியைத் தாண்டி உள்ளே செல்லலாம். நான் மேலே சென்றதும் உன்னையும் கையைப் பிடித்துத் தூக்கி அந்தப் பக்கம் விட்டு விடுகிறேன்'' என்றான் பிரபாகரன்.

''ஐயோ, எனக்குப் பயமாக இருக்கிறதே! யாராவது வந்து நம்மைப் பிடித்துக் கொண்டால் என்ன செய்வது?''

''அதற்காகப் பயந்து நாம் காரியத்தைக் கைவிட்டு விடுவதா? அது மாத்திரம் பிரபாகரனிடம் ஒரு நாளும் நடக்காது. எப்படியும் கல்லறைத் தீவுக்கு இந்தக் காட்டின் வழியாகத்தான் போக வேண்டும் என்று சொல்லப்படுகிறது. நாம் கல்லறைத் தீவுக்குப் போயே ஆக வேண்டும். 'நடப்பது நடந்தே தீரும்' என்று துறவி நமக்குச் சொல்ல வில்லையா? ஏன் பயப்படுகிறாய்?'' என்றான்.

''அதற்கில்லை, அண்ணா! காட்டுக்குள் சென்றவுடன் ஏதாவது துஷ்ட மிருகங்கள்......'' என்று தயங்கினாள் உமா.




''துஷ்ட மிருகங்கள் இருக்கட்டுமே. இதோ இருக்கும் இந்த அம்பினால் என் சாமர்த்தியத்தைக் காட்டி அந்த மிருகத்தைக் கொல்லுவேன். அது என் குறிக்குத் தப்பினால் என்னைக் கொல்லும்.''

''ஐயோ, அண்ணா! அப்புறம் நான் என்ன செய்வேன்?''

''என்ன உளறுகிறாய்? என்னைக் கொன்ற மிருகம் உன்னை மட்டும் சும்மா விட்டு விடுமா? நீயும் கொல்லப்படுவாய். பிறகு எதற்காகக் கவலைப்பட வேண்டும்? உனக்கு வருவதற்குப் பயமாக இருந்தால் உன்னைப் பட்டணத்தில் ஒரு இடத்தில் பத்திரமாக வைத்து விட்டு, நான்மட்டும் சென்று வருகிறேன். வெற்றியுடன் திரும்பி வந்து சீக்கிரம் மறுபடியும் உன்னை அழைத்துப் போகிறேன்.''

''அண்ணா, வேண்டாம். உன்னுடன் தான் நான் வருவேன். உனக்கு என்ன நேர்ந்தாலும் அந்த ஆபத்து எனக்கும் நேரட்டும்'' என்றாள் உமா.

''உமா, உன்னை விட்டு விட்டு நான் போகவே மாட்டேன். நீ என்ன சொல்லுகிறாய் என்று பார்த்தேன்! 'நான் நன்றாக வில் விடுகிறேன்' என்று நீதானே சொன்னாய்? பிறகு ஏன் கவலைப்படுகிறாய்? எந்த மிருகங்கள்தான் வரட்டுமே. என் கையில் வில்லும், என்னுடைய மனத்தில் தைரியமும் இருக்கும் பொழுது ஒரு பயமும் இல்லை. வா, நான் சொல்லுகிறபடி அந்தச் சிறிய சுவரின் உதவியால் கம்பிகளைத் தாண்டி உள்ளே செல்லலாம்!'' என்று கூறி உமாவின் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போனான் பிரபாகரன்.

இரண்டு பேரும் வெகு சிரமப்பட்டுக் கம்பியைத் தாண்டினார்கள். பிரபாகரன் தன் தோளில் மாட்டியிருந்த வில்லைத் தன் கைகளில் வைத்துக் கொண்டான். உமாவை ஒரு கையினால் பிடித்துக் கொண்டான். மெதுவாக நடந்து சென்றான்.

கொஞ்ச தூரம் சென்றார்கள். ஆங்காங்கே மிகவும் அடர்ந்த செடிகளும் பெரிய பெரிய மரங்களும் காணப்பட்டன. போவதற்கு என்று நேரான பாதையே தென்படவில்லை. கொடிகளைத் தள்ளிக் கொண்டும், மரத்தின் சந்துகளின் வழியாகவும் போக வேண்டியிருந்தது. பலவித வர்ணமுள்ள வண்ணாத்திப் பூச்சிகள் இங்கும் அங்குமாகப் பறந்து சென்று கொண்டிருந்தன. அடிக்கடி பெரிய எலிகள் ஓடிக் கொண்டிருந்தன. அவற்றைத் துரத்தியபடியே சில காட்டுப் பூனைகள் வேகமாகப் போய்க் கொண்டிருந்தன. அவைகளைத் தவிர



## உதவி ஷெரீப்

வியாபாரத் துறையில் வெற்றி பெற்றதற்கு அறிகுறியாக அரசாங்கம் அளிக்கும் கௌரவம் 'ஷெரீப்' பதவி. இந்த ஆண்டு துணை ஷெரீப் ஆகும் வாய்ப்பு ஸ்ரீ என். எஸ். பாலசுப்பிரமணியம் அவர்களுக்குக் கிடைத்திருக்கிறது. ஸ்ரீ பாலசுப்பிரமணியம் தம்முடைய பதவிக் காலத்தில் அதன் கௌரவத்தை மேலும் உயர்த்துவதற்குப் பாடுபடுவார் என்று எதிர்பார்க்கிறோம்.

வேறு ஒன்றும் அங்கு அப்பொழுது காணப்படவில்லை.

"அண்ணா, துஷ்ட மிருகங்கள் இருக்கும் என்று சொன்னீர்களே. ஒன்றையுமே காண வில்லையே?" என்றாள் உமா.

"அவசரப்படாதே, இப்பொழுது தானே காட்டுக்குள் பிரவேசித் திருக்கிறோம்! போகப் போகப் பார்க்கலாம். அதோ பார், ஒரு பெரிய மானும் அதனுடன் ஒரு மான் குட்டியும் துள்ளி விளையாடிய வண்ணம் போய்க் கொண்டிருக்கின்றன" என்றான்.

அந்தச் சமயத்தில் அவர்களுக்கு எதிரே இருந்த ஒரு பெரிய புதரில் சலசல வென்று சப்தம் உண்டாயிற்று.

"அண்ணா, அண்ணா! எனக்குப் பயமாக இருக்கிறது. இந்தப் புதரில் துஷ்ட மிருகங்கள் ஏதாவது பதுங்கிக் கொண்டிருக்கும் போல் தோன்றுகிறது" என்று பிரபாகரனின் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள் உமா. பிரபாகரன் உடனே வில்லைத் தன் கையில் எடுத்து அம்பை விடுவதற்குத் தயாராகப் புதரை நோக்கினான். அடுத்த நிமிஷத்தில் புதருக்குள் இருந்த ஒரு பெரிய பெருச்சாளி இவர்களைக் கண்டு பயந்து வெகு வேகமாகக் குறுக்கே ஓடியது. பிரபாகரன் பலமாகச் சிரித்தான்.

"உமா, போயும் போயும் பெருச்சாளியைக் கண்டு இப்படிப் பயந்தாயே?" என்றான் பிரபாகரன்.

"நீ மாத்திரம் என்ன? நான் சொன்ன உடனே வில்லைத் தயாராக வைத்துக் கொண்டாயே? நீ நடுங்கவில்லையா? என்னைச் சொல்லுகிறாயே!" என்றாள் உமா.

இப்படி வேடிக்கையாகப் பேசிக்கொண்டு முயல், மான், கிளி இன்னும் பல பறவைகள் முதலியவற்றைப் பார்த்து அனுபவித்துக் கொண்டே இருவரும் உல்லாசமாக நடந்து சென்று கொண்டிருந்தார்கள்.

கொஞ்ச தூரம் சென்றவுடன் உமா, "அண்ணா, அந்த மயில் என்ன அழகாகத் தோகையை விரித்து ஆடிக் கொண்டிருக்கிறது, பார்த்தாயா?" என்று மயிலைச் சுட்டிக் காண்பித்தாள். ஒரு மயில் ஆடிக் கொண்டிருந்தது. பிறகு மற்றொரு மயில் அங்கு வந்தது. பிறகு சில நிமிஷங்களுக்கெல்லாம் பல மயில்கள் சேர்ந்து காட்டின் நடுவில் தோகையை விரித்து ஆட ஆரம்பித்தன. ஆனால் உமா மாத்திரம் மயில்கள் ஆடுவதைப் பார்த்துக் கொண்டிருந்தாளே தவிர, பிரபாகரனின் ஞாபகங்கள் எல்லாம் எங்கேயோ சென்றிருந்தன.

அப்பொழுது மரத்தில் உட்கார்ந்திருந்த குரங்குகளும் அவற்றின் குட்டிகளும் கீச் கீச் என்று சத்தமிட்டுக் கொண்டு வெகு வேகமாக மரக் கிளைக்கு மரக் கிளை தாவி ஓட ஆரம்பித்தன. ஆங்காங்கு உட்கார்ந்திருந்த காகங்கள் 'கா, கா' என்று கத்திக் கொண்டு வெகு வேகமாகப் பறக்க ஆரம்பித்தன. காட்டில் திடீரென்று ஒரு பரபரப்பு ஏற்பட்டதாகத் தெரிந்தது.

அதற்குக் காரணம் ஒரு பெரிய சிங்கம் மெதுவாக அப்பொழுது அங்கு வந்து கொண்டிருந்ததுதான். அது சாதாரணமாக மிருகக் காட்சிச் சாலைச் சிங்கங்களைப் போலக் காணப்படவில்லை. அது வெகு நீளமாக இருந்தது. நீளத்துக்குத் தகுந்த பருமன். உடலின் பருமனுக்குத் தகுந்தபடி அதன் அகலமுள்ள முகம். அந்த முகத்தைப் பார்த்தாலே பயப்படாதவர்கள்கூட பயப்படுவார்கள். வாலை மெதுவாக ஆட்டிக் கொண்டு இங்குமங்குமாகப் பார்த்தபடியே அந்தச் சிங்கம் வந்து கொண்டிருந்தது. அடர்ந்து நன்றாக வளர்ந்திருந்த பிடரி மயிர் இரண்டு பக்கங்களிலும் தொங்கிக் கொண்டிருந்தது. அந்தப் பிடரி மயிரிலிருந்து, அங்கு வந்து கொண்டிருந்த சிங்கம் ஆண் சிங்கம்தான் என்று எவரும் நிச்சயமாகச் சொல்லி விடலாம்.

மெதுவாக நடந்து கொண்டே வந்த சிங்கம் எதையோ தனது கூர்மையான கண்களால் பார்த்து விட்டுத் திடீரென்று நின்றது.

பிறகு வேகமாகப் பாயத் தயாராக இருந்தது. சிங்கம் பார்த்த அதே சமயத்தில் உமாவும் அந்தச் சிங்கத்தைப் பார்த்தாள். காட்டில் திடீரென்று ஒரு பரபரப்பு ஏற்பட்டதைக் கண்ட பிரபாகரனும் திரும்பிப் பார்த்தான். அந்தச் சமயத்தில் சிங்கம் பாய்ந்தது. 'ஓ'வென்று அலறிக் கீழே விழுந்தாள் உமா. ஒரு வினாடியில் பிரபாகரன் வில்லில் அம்பை வைத்துக் குறி பார்த்து எய்தான். (தொடரும்)

# முடிவில்! ஆக்பாகலர் நெகடிவ்களிலிருந்து பிரமிக்கத்தக்கதான கலர் பிரிண்டுகள் எடுக்கலாம்!

## at last! WITH REVOLUTIONARY Agfacolor

போட்டோ கலையில் ஈடுபட்டுள்ள அபிமானிகள் வெகுகாலமாக எதிர்பார்த்தது இதுவே. இந்தியாவில் முதன் முதலாக சிறந்த ஆக்பாகலர் —நெகடிவ்—பாஸிடிவ் பிராஸஸ்— பிலிம்களை வெளியிடுவதில் பெருமையும் மகிழ்ச்சியும் அடைகிறோம்.

சாதாரண போட்டோக்களை எடுப்பது போலவே ஆக்பாகலரில் எடுப்பதும் மிகவும் சுலபமானது. இதற்காக விசேஷ காமிராவோ பில்டரோ, உபகரணமோ அவசியமே இல்லை. ஒரு லென்ஸ் ஹுட் தான் தேவை. ஆக்பாகலர் நெகடிவ் பிலிமை காமிராவில் பொருத்தி, படம் எடுக்க வேண்டியதுதான்,—ஒவ்வொரு ஆக்பாகலர் நெகடிவிலிருந்தும் உங்களுக்குத் தேவையான தத்ரூபமான அழகிய கலர் பிரிண்ட்களையோ அல்லது என்லார்ஜ்மெண்டுகளையோ எடுக்கலாம். அதே கலர் நெகடிவிலிருந்து உங்களுக்கு வேண்டிய சாதாரண பிரிண்ட்களையும் என்லார்ஜ்மெண்ட்களையும் கூட எடுக்கலாம்.

## YOU CAN GET COLOUR PRINTS FROM COLOUR NEGATIVES!

### உங்கள் டீலரிடம் ஆக்பாகலர் நெகடிவ் பிலிம்களைக் கேளுங்கள்

"T" டைப் பிலிம்கள் பகல் வெளிச்சத்திற்கும் எலக்ட்ரானிக் பிளாஷ் மற்றும் நீல நிறம் பூசப்பட்ட பிளாஷ் பல்புகளுக்கும் சிறந்தது. செயற்கை வெளிச்சத்திற்கு உகந்தது "K" டைப் பிலிம்கள். இவ்விரண்டு டைப் பிலிம்களும் கீழ்க்கண்ட விலைகளில் கிடைக்கும். பிரபல B2/8 (120) சைஸ் ரோல் பிலிம் ரூ. 9/8. 35mm. 20 எக்ஸ்போஷர் கார்ட்ரிட்ஜஸ் ரூ. 12/12.

படங்களை எடுத்த பின்பு அந்த ரோல் பிலிமை ப்ரோஸஸ் செய்ய உங்கள் டீலரிடம் கொடுங்கள். ஆக்பாகலர் பிலிம் மிகத் திருப்திகரமானதாக இருக்க, திறமையும் தேர்ச்சியும் பெற்றவர்களால் விசேஷ கருவிகள் அமைந்த லேபரேட்டரியில் ப்ரோஸஸ் செய்யப்படுகிறது.

SOLE DISTRIBUTORS IN INDIA
AGFA INDIA LIMITED
16, JAMSHEDJI TATA RD., BOMBAY 1.
BRANCHES :
NEW DELHI—CALCUTTA—MADRAS

ACF - 3

## Agfacolor

THE FOREMOST NEGATIVE-POSITIVE PROCESS

ரேடியோ சிலோனில் பிரதி செவ்வாய்க்கிழமை இரவு 7–30 மணிக்கு 31, 49 மீட்டர் பாண்டில் ஆங்கிலத்தில் "மியூஸிகல் ஸ்னாப்ஷாட்ஸ்" நிகழ்ச்சிகளைக் கேளுங்கள். தமிழ்ச் செய்திகளுக்கு திங்கள், புதன், வெள்ளிக்கிழமைகளில் மாலை 6–15 முதல் 6–30 மணி வரை 41 மீட்டர் பாண்டில் கேளுங்கள்.

---




சென்னைக்கு அருகில் ஆவடியில் அறுபதாவது காங்கிரஸ் மகாசபை கூடிய இடத்திற்கு "சத்தியமூர்த்தி நகர்" என்று அத் தீரருக்கு மரியாதையும் நன்றியும் செலுத்தும் வகையில் பெயர் இடப்பட்டது. மகாசபை கூடிய இடத்தின் கோபுர வாசலுக்கு எதிரில் தீரரின் திருவுருவச்



சிலையைப் பண்டித நேரு திறந்து வைத்து, மிக்க உருக்கமான ஒரு பிரசங்கம் புரிந்தார். உருவச் சிலைக்குப் பக்கத்தில் நேருஜியும், சத்தியமூர்த்தியின் மனைவியாரும், புதல்வியும், பேரனும் இருப்பதைக் காணலாம். இந்த வைபவம் நிகழ்ந்த 20-ம் தேதி காலை விஷயாலோசனைக் கமிட்டியில் நேருஜியும் ராஜாஜியும் அளவளாவுவதையும் மேலே படத்தில் காணலாம்.




குழந்தைகள் பள்ளிக்கூடம் செல்லுவது சாதாரண நிகழ்ச்சிதான். ஆனால் ஒரு விடுமுறையன்று, அதுவும் மாலை நேரத்தில் குழந்தைகள் மகிழ்ச்சியோடு கூட்டம் கூட்டமாகப் பள்ளிக்கூடம் செல்வது சாதாரண நிகழ்ச்சியா! அந்த அசாதாரண நிகழ்ச்சி பொங்கல் விடுமுறையின் போது நிகழ்ந்தது.

இந்த வருஷம் திருவல்லிக்கேணி குழந்தைகளுக்கு யோகம். வருஷத்துக்கொரு பேட்டையாகக் குழந்தை எழுத்தாளர் சங்கத்தார் புத்தகக் காட்சியை நடத்தி வருகிறார்கள். இது ஐந்தாவது புத்தகக் காட்சியாம். இது திருவல்லிக்கேணி கெல்லட் ஹைஸ்கூலில் ஜனவரி மீ 13உ மாலை நிகழ்ந்தது.

புத்தகக் காட்சியின் திறப்பு விழாவுக்குப் பேராசிரியர் திரு ரா. பி. சேதுப் பிள்ளை அவர்கள் தலைமை வகித்தார். குழந்தை இலக்கியம் கூட அன்னிய நாட்டிலிருந்து இறக்குமதியான சரக்கு என்றல்லவா பலர் கருதுகிறார்கள்! சொல்லின் செல்வர் தம் தலைமை உரையில் அத்தகைய சந்தேகங்களைக் களையும் வகையில் பண்டைத் தமிழ் இலக்கியத்தில் குழந்தைகளுக்காகவே இயற்றப்பட்ட பாடல்களைப் பற்றிக் கூறினார். குழந்தை இன்பத்தை நன்கு அனுபவித்ததால் எழுந்த "பிள்ளைத் தமிழ்" நூல்களைப் பற்றிச் சுவைபடப் பேசி மகிழ்வித்தார்.

புத்தகக் காட்சியை அமெரிக்கச் செய்தி இலாகா டைரக்டர் ஜேம்ஸ் வின்ஸென்ட் ஜாய்ஸ் திறந்து வைப்பதாக இருந்தார். அவருக்கு உடம்பு அசௌகரியத்தால் ஜாய்ஸ் தாம் பேச இருந்ததை எழுதி அனுப்பி விட்டார். அந்தக் காரியாலயத்தைச் சேர்ந்த ஸ்ரீ ஸ்டெப்னி கார்டர் கிப்பின் படித்த அந்தப் பேச்சில், "குழந்தைப் புத்தகம் என்றால் அது பாடப் புத்தகம் போல் அறிவு வளர்ப்பது ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டிருக்கலாகாது. குழந்தைகளுக்குப் பொழுது போக்குப் புத்தகங்களும் நிறைய வேண்டும். பாடப் புத்தகம்தான் ஆகட்டும், அது இன்னும் எளிய நடையில் எழுதப்பட்டுக் கவர்ச்சிகரமாக வெளிவந்தால் எவ்வளவு நன்றாகயிருக்கும்!" என்று ஜாய்ஸ் குறிப்பிட்டிருந்தார்.

ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன் "குழந்தை இலக்கியம்" என்ற தலைப்பில் பாட்டும் பேச்சும் கதையுமாக ஒரு பிரசங்கம் செய்தார்.

"சங்குச் சக்கரச் சாமி"ப் பாட்டு, நிலாப் பாட்டு முதலியவற்றைப் பாடி, தமிழில் எளிய நடையில் அருமையான குழந்தை இலக்கியம் வாய்மொழியாகவே பரவியிருப்பதைக் குறிப்பிட்டார்.

குழந்தை எழுத்தாளர் சங்கத் தலைவரான குழந்தைக் கவிஞர் வள்ளியப்பா தமது வரவேற்புரையில் இன்று தமிழில் குழந்தை இலக்கியம் என்ன நிலையில் இருக்கிறது என்பதை விளக்கினார். "தமிழில் நல்ல இலக்கியம் இருக்கிறது. ஆனால், கவர்ச்சிகரமான முறையில் நிறையப் புத்தகங்கள் வரவில்லை. பெரியவர்களுக்காகவே புத்தகங்கள் வெளியிட்டு வரும் பதிப்பாளர் ஒவ்வொருவரும் ஆண்டுக்கு ஒரு குழந்தைப் புத்தகமாவது சிறந்த முறையில் வெளியிட்டால் அதுவே குழந்தைகளுக்குச் செய்யும் ஒரு சிறந்த தொண்டாகும்" என்றார்.

ஐந்தாவது குழந்தைப் புத்தகக் காட்சி இவ்வாறு திறந்து வைக்கப்பட்டது. சுமார் 900 ஆங்கிலப் புத்தகங்களும் 500 தமிழ்ப் புத்தகங்களும் காட்சியில் இருந்தன. தெலுங்கு, கன்னட, மலையாள, உருது, வங்காள, சீன, ஜப்பான்மொழிக் குழந்தை நூல்களும் வைக்கப்பட்டிருந்தன.

அன்றும், காட்சி நடந்த அதற்கடுத்த, பொங்கல், மாட்டுப் பொங்கல் தினங்களிலும் திருவல்லிக்கேணி கெல்லெட் பள்ளிக்கூடத்தைக் குழந்தைகள் மொய்த்த வண்ணம் இருந்தார்கள்.

புத்தகக் காட்சியை யொட்டி "குழந்தை இலக்கிய மலர்" ஒன்று வெளியிட்டிருக்கிறார்கள். மலரில், சங்கத்தைப் பற்றிய செய்திகளோடு, பெ. நா. அப்புஸ்வாமி, பெ. தூரன் இருவரும் குழந்தை இலக்கியத்தைப் பற்றிக் கட்டுரைகள் எழுதியிருக்கிறார்கள்; பிற மொழிகளில் குழந்தை இலக்கியம் பற்றியும் தமிழில் குழந்தை இலக்கியத்தைப் பற்றியும் கட்டுரைகள் வெளி வந்திருக்கின்றன. மலர் வேண்டுவோர் குழந்தை எழுத்தாளர் சங்கம், 10, வைத்தியராமய்யர் தெரு, சென்னை 17. என்ற முகவரிக்கு இரண்டணா தபால் தலை அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம்.

# ஆவடி அமளி


"இந்த உற்சவத்தை ஆனியில் வைத்துக் கொள்ளலாமா? ஆடியில் வைத்துக் கொள்ளலாமா? என்று யோசனை செய்து, இரண்டுக்கும் பொதுவாக ஆவடியில் வைத்துக் கொண்டு விட்டார்கள்!"


"என்னமோ, இந்த வெய்யிலைப் போய்ப் பிரமாதப் படுத்துகிறீர்களே? இதெல்லாம் கண்டைக்காய் வெய்யில்! ஆவடி வெய்யிலை நீங்கள் அனுபவிக்கக் கொடுத்து வைக்கவில்லை!"


"தின்பண்டங்கள் விலை ஏறிக் கொண்டே யிருக்கிறதாம்! சீக்கிரம் சாப்பிடுங்கள்!"


"அந்தக் கூட்டத்திலே நான் காணாமற் போய் விட்டேன் என்னையே கண்டு பிடிக்க முடிய வில்லை யென்றால் கூட்டம் எப் பேர்ப்பட்டது பார்த்துக்குங்க!"


"அதோ, சாம்பார் சாதம் போகிறார்! விடாதே, பிடி!"


"அடடா! இதென்ன, இரவு மணி மூன்றாகிறது இன்ஜின் டிரைவர் இதோ வருகிறேனென்று சொல்லிக் கொண்டு போய் விட்டாரே!"


பஸ் பிரியாணி களுக்கு ஒரு விண்ணப்பம்!
"பாவம்! அறிவிப்பாளருக்குப் பசிவேளை போலிருக்கிறது!"

# கேதாரியின் தாயார்






## முன்னுரை

சமீபத்தில் பத்திரிகைகளில் "அம்மாமி அப்பளாம்" என்னும் விளம்பரத்தைப் பார்த்ததும், எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. உடனே பாகீரதி அம்மாமியின் ஞாபகம் வந்தது. அவளுடைய அருமைப் புதல்வனும், என்னுடைய பிராண சிநேகிதனுமான கேதாரியின் அகால மரணத்தை எண்ணிய போது, கண்ணில் நீர் ததும்பிற்று. கேதாரிக்கு இந்தக் கதி நேருமென்று யார் நினைத்தார்கள்? இதுபோன்ற சம்பவங்களை எண்ணும் போதுதான் மனித யத்தனத்தில் நமக்கு நம்பிக்கை குன்றி, விதியின் வலிமையில் நம்பிக்கை அதிகமாகிறது.

கேதாரி நோய்ப்பட்டுக் கிடந்தபோது அவனை வந்து பரிசோதனை செய்யாத டாக்டர்கள் சென்னையில் யாரும் இல்லை. ஆயினும் அவர்களில் யாரும் அவனுடைய நோயின் மூல காரணத்தைக் கண்டு பிடிக்கவில்லை. ஏதேதோ வியாதி யென்றும், 'காம்ப்ளிகேஷன்' என்றும் சொல்லி வைத்தியம் செய்தார்கள். கேதாரி பிழைக்கவில்லை. அவனுடைய சிநேகிதர்களையும் உறவினர்களையும் பரிதவிக்கவிட்டு இறந்துதான் போனான். இதுபற்றி அச்சமயம் டாக்டர்களுக்கே ஒரு கெட்ட பெயர் ஏற்பட்டிருந்தது. "என்ன வைத்திய சாஸ்திரம்? என்ன டாக்டர்கள்? எல்லாம் வெறும் படாடோபந்தான்" என்று ஜனங்கள் சொன்னார்கள்.

கேதாரியின் விஷயத்தில் டாக்டர்கள் பேரிலாவது, வைத்திய சாஸ்திரத்தின் பேரிலாவது யாதொரு தவறுமில்லை என்பதை வெளிப்படுத்துவதற்காகவே இதை நான் எழுதுகிறேன். அவனது உடல் நோயின் வேர் அவனுடைய மனோ வியாதியில் இருந்தது என்பதும், அந்த மனோ வியாதி நமது சமூகத்தைப் பிடித்திருக்கும் பல வியாதிகளில் ஒன்றைக் காரணமாகக் கொண்டதென்பதும் டாக்டர்களுக்கு எப்படித் தெரியும்? அவனுடைய அருமைத் தாயாருக்கும் இளம் மனைவிக்கும்கூட அது தெரியாத விஷயமே. அவனுடைய அத்தியந்த நண்பனான நான் ஒருவனே அந்த இரகசியத்தை அறிந்தவன். கேதாரி மரணமடைந்த புதிதில் அதைப் பற்றிப் பேசவோ, எழுதவோ முடியாதபடி துக்கத்தில் ஆழ்ந்திருந்தேன் நான். இப்போது ஒரு வருஷத்துக்கு மேல் ஆகிவிட்டது. என்னுடைய ஆத்ம சிநேகிதனுக்கு நான் செய்ய வேண்டிய கடமையாகக் கருதி அவனுடைய கதையை வெளியிடுகிறேன்.

ஆமாம்; ரொம்பவும் துயரகரமான கதைதான். நம்மில் சிலர் சோக ரஸத்தை அநுபவிப்பதற்காக நாடகங்களுக்குப் போவோம்; ஆனால் வாழ்க்கையில் நம் கண்முன் நிகழும் சோக சம்பவங்களைப் பார்க்கப் பிடிக்காமல் கண்களை மூடிக் கொள்வோம். அத்தகையவர்கள் கேதாரியின் கதையைப் படிக்காமல் விடுவதே நல்லது.




## 1

கேதாரிக்கு அவனுடைய தந்தையைப் பற்றிய ஞாபகமே கிடையாது. அவன் மூன்று

1935ம் ஆண்டு "ஆனந்த விகடனி"ல் வெளியானது.

வயதுக் குழந்தையா யிருந்த போது அவனுடைய தந்தை வீட்டை விட்டு, ஊரை விட்டு ஓடிப் போய் விட்டார். ஒரு நாடகக் காரியின் மையலில் அகப்பட்டு அவர் தம்முடைய இளம் மனைவியையும், மூன்று வயதுப் பிள்ளையையும் அநாதையாக விட்டு விட்டுப் போனார். இந்த விவரமெல்லாம் எங்களுக்கு வெகுநாள் வரையில் தெரியாது. கேதாரிக்குக் கல்யாணப் பேச்சு நடந்த போதுதான் அவனுடைய தாயார் சொல்லித் தெரிந்து கொண்டோம்.

பெண்ணைப் போய்ப் பார்த்து விட்டு வரும்படி பாகீரதி அம்மாமி சொன்ன போது, "நீ பார்த்து நிச்சயம் செய்தால் சரிதான். அம்மா! ஒரு மூளிப் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளச் சொன்னாலும் பண்ணிக் கொள்கிறேன்" என்றான் கேதாரி.

"பின் என்ன, அம்மாமி உங்களுக்கு? இந்தக் கலியுகத்தில் இந்தமாதிரிப் பிள்ளை இன்னொருவனைக் காணவே முடியாது. நீங்களே முடிவு செய்து விடுங்களேன்" என்றேன் நான்.

ஆனால் பாகீரதி அம்மாமி கேட்கவில்லை. "கேதாரி போய்ப் பெண்ணைப் பார்த்துப் 'பிடித்திருக்கிறது' என்று சொன்னால்தான் கல்யாணம் நிச்சயம் பண்ணுவேன்" என்று சொன்னாள். அப்போதுதான் கேதாரியின் தகப்பனார் பேச்சை அவள் எடுத்து நான் கேட்டது.

"இப்படியெல்லாம் பிள்ளையையும் பெண்ணையும் சம்மதங் கேட்காமல் கல்யாணம் பண்ணிப் பண்ணித்தான் குடும்பங்களில் கஷ்டம் ஏற்படுகிறது. இவனுடைய (கேதாரியினுடைய) தகப்பனார் எங்களை விட்டு விட்டுப் போனதற்காக ஊரெல்லாம் அவரைத் திட்டினார்கள். எனக்கும் அப்போது கோபமும் ஆத்திரமும் அடைத்துக் கொண்டுதான் வந்தது. நாற்பது நாள் படுத்த படுக்கையாய்க் கிடந்தேன். ஆனால், பின்னால் ஆற



அமர யோசித்துப் பார்த்ததில் அவர் மேல் ஒரு குற்றமும் இல்லை யென்று தோன்றிற்று. என்னைக் கல்யாணம் செய்து கொள்வதில் அவருக்கு இஷ்டமே யில்லையாம். அப்படிச் சொல்லவும் சொன்னாராம். ஆனால் பெரியவர்கள் பலவந்தப் படுத்திக் கல்யாணம் செய்தார்களாம். ஏதோ ஐந்தாறு வருஷம் பல்லைக் கடித்துக் கொண்டு குடும்பம் நடத்தினோம்.—அப்புறம் அந்தக் கூத்தாடிச்சி வந்து சேர்ந்தாள்; போய் விட்டார்."

இப்படிப் பாகீரதி அம்மாமியே அந்தப் பேச்சை எடுத்தபோது, நானும் பக்குவமாகச் சிற்சில கேள்விகளைப் போட்டு மற்ற விவரங்களையும் அறிந்தேன். கேதாரியின் தகப்பனார் சுந்தரராமையர் பார்ப்பதற்கு வாட்டசாட்டமாய் ஆள் நன்றா யிருப்பாராம். ரொம்ப நன்றாய்ப் பாடுவாராம். அப்போது திருமங்கலத்தில் தபாலாபீஸில் அவருக்குக் குமாஸ்தா உத்தியோகம். ரங்கமணி என்னும் பெயர் பெற்ற நாடகக்காரி அவ்வூரில் நாடகம் நடத்திக் கொண்டிருந்தாள். ஒரு நாள் அயன் ராஜபார்ட் போடுகிறவனுக்கு ரொம்ப உடம்பு சரிப்படவில்லை யென்றும், அன்று அநேகமாய் நாடகம் நடைபெறாதென்றும் செய்தி வந்தது. கேதாரியின் தகப்பனாருக்கு நாடகம் என்றால் பித்து. நாடகம் பார்த்துப் பார்த்து எல்லா நாடகங்களும் கெட்டுரு; பாட்டுக்கள் தலைகீழ்ப் பாடம். ஆகவே இவர் போய் "நான் ராஜபார்ட் போட்டுக் கொள்கிறேன்" என்றார். சில பாட்டுக்களும் பாடிக் காட்டினார். ரங்கமணி சம்மதித்தாள். நாடகம் நடந்தது. எல்லாரும் அதிசயிக்கும்படி கேதாரியின் தகப்பனார் நடித்தார். அம்மாமிக்குக்கூட அது பெருமையா யிருந்தது.

அப்புறம் திருமங்கலத்தில் அந்தக் கம்பெனி இருந்த வரையில் அவர்களுடனேயே இருந்தார். வேலையை ராஜிநாமாக் கொடுத்து விட்டாரென்றும், அந்த நாடகக்காரி அவரை மயக்கி விட்டாளென்றும், தன்னுடன் அழைத்துக் கொண்டு போகப் போகிறாளென்றும் ஊரிலே பேசிக் கொண்டார்கள். ஆனால் பாகீரதி அம்மாமி அதையெல்லாம் நம்பவில்லை. கடைசியில், நாடகக் கம்பெனி ஊரை விட்டுப் போயிற்று. அதற்கு மறு நாள் சுந்தரராமையரையும் காணவில்லை. நாடகக் கம்பெனி இலங்கைக்குப்போயிற்றென்றும், அங்கே போய் இவரும் சேர்ந்து கொண்டாரென்றும் பின்னால் தகவல் தெரிய வந்தது.

அதற்குப் பிறகு அவரைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. மேற்படி நாடகக் கம்பெனியார் இலங்கை, பர்மா, சிங்கப்பூர், பினாங்கு முதலிய வெளி நாடுகளிலேயே சுற்றிக் கொண்டிருந்ததாகத் தெரிந்தது. பல வருஷங்களுக்குப் பிறகு இரண்டொரு தடவை சென்னை நகருக்கும் வந்திருந்தார்கள். ஆனால் பாகீரதி அம்மாமி அதற்குள் அவரைப் பற்றி எண்ணுவதையே விட்டு விட்டாள். இப்போது அவளுடைய ஆசை முழுவதையும் கேதாரியின் மேல் வைத்திருந்தாள்.

சுந்தரராமையர் ஓடிப் போன செய்தியறிந்து, பாகீரதி அம்மாமியின் தாய் தந்தையர்கள் திருமங்கலத்துக்கு வந்து அவளைத் தங்களுடன் கிராமத்துக்கு அழைத்துப் போனார்கள். அவர்கள் சொற்பக் குடித்தனக்



எல்லாப் பள்ளிக் கூடங்களிலும் இந்த மாதிரி படிப்பில் கெட்டிக்காரனுயுள்ள பையனைப் பரிகாசம் பண்ணி உபத்தரவப் படுத்துவதற்குச் சில காலிகள் இருப்பார்கள். ஆனால் எங்கள் பள்ளிக்கூடத்தில் எனக்குப் பயந்து கேதாரியின் வழிக்கு ஒருவரும் போவதில்லை. அவர்கள் திருச்சிக்கு வந்து மூன்று வருஷத்துக்கெல்லாம், தாத்தா காலமானார். அதற்குள் அவர் கையிலிருந்த பணமும் செலவழிந்து போயிற்று. கேதாரிக்கு 'ஸ்காலர்ஷிப்' இடைத்திருந்த படியால், சம்பளச் செலவு கிடையாது. ஊரில் விளைந்து வரும் நெல் சாப்பாட்டுக்குப் போதும். ஆனால் வீட்டு வாடகைக்கும் மேல் செலவுக்கும் என்ன செய்வது? அம்மாமியும் பாட்டியும் அப்பளம் இட்டு விற்க ஆரம்பித்தார்கள்.

காரர்கள். பாகீரதியைத் தவிர அவர்களுக்கு வேறு பிள்ளை குட்டி கிடையாது. கிராமத்தில் ஐந்தாறு வருஷங்கள் இருந்தார்கள். அப்புறம் கேதாரியைப் படிக்க வைப்பதற்காகத் திருச்சினுப்பள்ளிக்கு வந்தார்கள்.

## 2

நேற்று நடந்தது போல் தோன்றுகிறது. அப்போது திருச்சினுப்பள்ளியில் மாதுர்பூதம் ஸ்டோரில் நானும் என் பெற்றோர்களும் குடியிருந்தோம். நான் முதலாவது பாரத்தில் படித்துக் கொண்டிருந்தேன். ஸ்டோரில் எங்களுக்கு எதிர்வீடு சில நாளாகப் பூட்டிக் கிடந்தது. அன்றைக்கு யாரோ புதிதாகக் குடிவரப் போகிறார்கள் என்று கேள்விப்பட்டு ஆவலுடன் அவர்களுடைய வரவை எதிர்பார்த்திருந்தேன். ஒரு தாத்தா, ஒரு பாட்டி, ஒரு அம்மாமி, ஒரு பையன்—இவர்கள் பழைய தகரப் பெட்டிகளுடனும் மூட்டை முடிச்சுகளுடனும் வந்து சேர்ந்தார்கள். அந்தப் பையன் கையில் தங்கக் காப்புப் போட்டுக் கொண்டும், தலை பின்னிக் கொண்டும், குல்லா வைத்துக் கொண்டும் இருந்ததை நான் வியப்புடன் பார்த்துக் கொண்டு நின்றது எனக்கு நன்றாய் ஞாபகம் இருக்கிறது.

அந்தப் பையன்தான் கேதாரி. அவனுடன் முதல் தடவை பேசின உடனேயே எனக்குப் பிடித்துப் போயிற்று. பட்டிக்காட்டிலிருந்து வந்தவனுதலால் எதைப் பார்த்தாலும் அவனுக்கு ஆச்சரியமாயிருந்தது. பைப்புக் குழாயிலிருந்து தண்ணீர் கொட்டுவதைக் கண்டு இடிஇடியென்று சிரித்தான். காலையில் தாயுமான ஸ்வாமிக்குத் திருமஞ்சனம் கொண்டு வருவதற்காகப் போன யானையை அவன் பார்த்த பார்வையில், விழி பிதுங்கி விடும் போலிருந்தது. ஓயாமல் அது என்ன, இது என்ன என்று கேட்டுக் கொண்டேயிருப்பான். நானும் சலிக்காமல் பதில் சொல்லி வந்தேன்.

நான் படித்த அதே பள்ளிக்கூடத்தில் அதே வகுப்பில் கேதாரியைச் சேர்த்தார்கள். நாங்கள் இணை பிரியாத சிநேகிதர்கள் ஆனோம். நிஜத்தைச் சொல்லி விடுகிறேன்; படிப்பிலே நான் கொஞ்சம் சுமார்தான். மற்றப்படி விளையாட்டு, வம்பு முதலியவைகளில் நான்தான் முதல். அவனே படிப்பில் முதல்; மற்றவைகளில் ரொம்ப சுமார்.

அதென்னமோ, சில சமயம் முன்பின் தெரியாதவர்களிடம் கூட நமக்குப் பிரியம் ஏற்பட்டு விடுகிறது. அவர்களை முதன் முதலில் நாம் பார்க்கும் வேளையைப் பொருத்ததோ என்னமோ தெரியவில்லை. பாகீரதி அம்மாமியிடம் என் சொந்தத் தாயாரைவிட அதிகப் பிரியம் எனக்கு ஏற்பட்டிருந்தது. அக்கம் பக்கத்தார்கள் அவளைப் பற்றி 'வாழா வெட்டி' என்று அவமதிப்பாகப் பேசுவதுண்டு. இதெல்லாம் அவளிடம் எனக்கிருந்த பிரியத்தை அதிகமே யாக்கிற்று. என் பள்ளிக்கூடத்துச் சிநேகிதர்களுக்கெல்லாம் சொல்லி, பாகிரதி அம்மாமியின் அப்பளங்களை நானே ஏராளமாய் விற்றுக் கொடுத்திருக்கிறேன்.

பாட்டியும் கொஞ்ச காலத்துக்குப் பிறகு இறந்து போய் விட்டாள். தாயும் பிள்ளையும் அதே வீட்டில் இருந்து வந்தார்கள். கேதாரி, அவனுடைய தாயார் அவன் விஷயத்தில் பட்ட கஷ்டத்துக்கெல்லாம் பாத்திரமாய் நடந்து கொண்டான். ஒவ்வொரு வகுப்பிலும் பரீட்சையில் முதன்மையாகத் தேறி வந்து கடைசியில் பி. ஏ. பரீட்சையில் முதலாவதாகத் தேறினுன். அந்த சந்தோஷத்தில், நான் அவ்வருஷம் 'கோட்' அடித்த வெட்கத்தைக்கூட அதிகமாய் உணரவில்லை.

## 3

கேதாரி காலேஜுக்குப் போனதிலிருந்தே பெண்ணைப் பெற்றவர்கள் அவனுடைய தாயாரைப் பிய்த்து எடுத்த வண்ணமிருந்தார்கள். இன்னொருவர் இன்னொருவரானால் "அப்பளம் இடும் தொல்லை ஒழிந்தது" என்று எண்ணி, ஏதாவது ஒரு பெண்ணைக் கேதாரியின் கழுத்தில் கட்டியிருப்பார்கள். ஆனால் பாகிரதி அம்மாமி வாழ்க்கை என்னும் பள்ளிக்கூடத்தில் மிகவும் கஷ்டமான பாடங்களைப் படித்து அறிவு பெற்றவள். "பி. ஏ. முடிகிறவரையில் கல்யாணப் பேச்சே கூடாது" என்று பிடிவாதமாய்ச் சொல்லி வந்தாள்.

ஆகவே, இப்போது கேதாரி பி. ஏ. தேறியதும், கலியாணத்தைப் பற்றி யோசிக்க வேண்டியதாயிற்று. மணிபுரம் பண்ணையார் என்று கேள்விப் பட்டிருக்கிறீர்களல்லவா? அவர் அப்போது எங்கள் காலேஜ் பழைய மாணவர் சங்கத்தின் அக்கிராசனரா யிருந்தார். ஒவ்வொரு வருஷமும், கேதாரி முதலாவதாகத் தேறி முதல் பரிசுகள் பெற்று வருவதைக் கவனித்திருந்தார். பையனுடைய முகவெட்டு, நடை உடை பாவனை எல்லாம் அவருக்குப் பிடித்திருந்தன. ஆகவே தம்முடைய பெண்ணை அவனுக்குக் கொடுப்பதென்று பேச்சுத் தொடங்கினார். பையனைக் கேட்டதில், அம்மாவைக் கேட்க வேண்டுமென்று சொல்லி விட்டான். பாகீரதி அம்மாமி இவ்வளவு பெரிய சம்பந்தம் கிடைக்கப் போகிறதை எண்ணிய போது பிரமித்துப் போய் விட்டாள். ஆனாலும் காரியத்தில் கண்ணா யிருந்தாள். இன்னொரு ஸ்திரீயா யிருந்தால் "ஐயாயிரம் வேணும்; பத்தாயிரம் வேணும்" என்று கேட்டிருப்பார்கள். பாகீரதி அம்மாமியோ "பணங்காசு ஒன்றும் வேண்டாம்; கல்யாணம் சீர் வகையரா எல்லாம் உங்கள் இஷ்டம். பையனைச் சீமைக்கு அனுப்பி ஐ.ஸி.எஸ். படிக்க வைப்பதற்கு மட்டும் ஒப்புக் கொண்டால் போதும்" என்றான்.

இந்தமாதிரி எண்ணம் அம்மாமிக்கு உண்டென்று எனக்கு முன்னாலேயே தெரியும். ஏனென்றால் ஐ. ஸி. எஸ். ஸுக்குப் போவது பற்றிய விவரங்களை யெல்லாம் ஒரு நாள் என்னை அவன் கேட்டதுண்டு. அக்கம் பக்கத்தில் எல்லாரும் அதிசயப் பட்டார்கள்; சிலர் அம்மாமியை வையக்கூட வைதார்கள். "பார்! என்ன நெஞ்சழுத்தம் இவளுக்கு? ஒரு பிள்ளை; அதைச் சீமைக்கு அனுப்புகிறாளே?" என்றார்கள்.

பண்ணையார் நரசிம்மய்யர் ரொம்ப வைதிகம். ஆகையால் முதலில் தயங்கினார். கடைசியில், பெரிய சாஸ்திரிகள் எல்லாருடனும் யோசித்து "சாஸ்திரங்களில் சமுத்திரப் பிரயாணத்துக்குப் பிராயச்சித்தம் இருக்கிறது" என்று உறுதிப்படுத்திக் கொண்டு சம்மதித்தார். எனக்கென்னமோ, "ஒரு ஸ்திரீக்குள்ள மனோதிடம் நமக்கு வேண்டாமோ?" என்ற எண்ணத்தினாலேதான் அவர் சம்மதித்தார் என்று தோன்றியது.

இதற்குப் பிறகுதான், கேதாரியைப் போய்ப் பெண் பார்த்து விட்டு வரும்படி அம்மாமி சொன்னது. நானும் கூடப் போயிருந்தேன். கேதாரி தன் தாயிடம் வைத்திருந்த நம்பிக்கை எவ்வளவு நியாயமானது என்று விளங்கிற்று. கிளி என்றால் கிளி, பெண் அவ்வளவு அழகாயிருந்தாள். பதின்மூன்று, பதினாலு வயது இருக்கலாம்.

அந்தக் கதையை யெல்லாம் இப்போது வளர்த்துவதில் பயன் என்ன? சுருக்கி விடுகிறேன். கல்யாணம் சிறப்பாக நடந்தது. அடுத்த வருஷம் கேதாரி இங்கிலாந்துக்குப் பிரயாணமானான். பம்பாய் வரையில் நான் சென்று கப்பல் ஏற்றி விட்டு வந்தேன்.

பாகீரதி அம்மாள் தங்கள் வீட்டிலேயே வந்திருக்க வேண்டும் என்று மணிபுரத்தார் எவ்வளவோ வருந்தி அழைத்தார்கள். அம்மாமி கேட்கவில்லை. அவளுடைய சித்தி ஒருத்தி இரண்டு குழந்தைகளை அநாதையாய் விட்டு விட்டு இறந்து போய் விட்டாள். அவர்களைக் கிராமத்திலிருந்து தருவித்துத் தனியாக ஒரு வீட்டில் ஜாகை ஏற்படுத்திக் கொண்டு அவர்களைப் பராமரித்து வந்தாள். ஆனால் சம்பந்திகளின் கௌரவத்தையும் மற்ற விஷயங்களையும் உத்தேசித்து அப்பளம் இட்டு விற்பதை மட்டும் நிறுத்தி விட்டாள்.



## 4

கேதாரி சீமைக்குப் போய் ஏழெட்டு மாதங்களுக்குப் பிறகு, மணிபுரம் மிராசுதார் வீட்டிலிருந்து ஆள் வந்து என்னைக் கூப்பிட்டான். அவ்வாறே போயிருந்தேன். நரசிம்மய்யர் என்னிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்துப் படிக்கச் சொன்னார். அது இரங்கூனிலிருந்து சுந்தரராமய்யர் என்பவரால் எழுதப்பட்டது. தன்னுடைய புதல்வனுக்கு இவர்கள் பெண்ணைக் கொடுத்திருப்பதாக அறிந்து சந்தோஷப்படுவதாகவும், திருச்சியிலிருந்து சமீபத்தில் இரங்கூனுக்கு வந்த ஒருவர் மூலம் சகல விவரமும் தெரிந்து கொண்டதாகவும், தாம் இப்போது திரும்பவும் ஜன்ம தேசம் வந்து எல்லாரையும் பார்க்க விரும்புவதாகவும், அதற்குப் பிரயாணச் செலவுக்காகப் பணம் அனுப்ப வேண்டுமென்றும் எழுதியிருந்தது.

"சங்கரா, இது என்ன நிஜமாயிருக்குமா?" என்று நரசிம்மய்யர் கேட்டார்.

"நிஜமாயிருக்கலாமென்றே தோன்றுகிறது. எல்லாவற்றிற்கும், அம்மாமியைக் கேட்டுக் கொண்டு வருகிறேன்" என்று சொல்லி விட்டுக் கடிதத்தை எடுத்துக் கொண்டு சென்றேன்.

அம்மாமியிடம் கடிதத்தைக் கொடுத்தேன். அவள் ஒருவேளை அழுது கண்ணீர் விட்டுத் தடபுடல் செய்வாளோ என்று நான் பயந்ததெல்லாம் வீண் எண்ணம்

என்று தெரிந்தது. தன்னுடைய ஏக புதல்வனைச் சீமைக்கு அனுப்பி வைக்கும்படி நெஞ்சைக் கல்லாக்கிக் கொண்ட அம்மாமி யல்லவா? கடிதத்தைப் படித்து விட்டு, "இது அவருடைய கையெழுத்துத்தான்" என்றாள். பிறகு மௌனமாய் யோசனையில் ஆழ்ந்தவள் போல் இருந்தாள். இரண்டொரு தடவை பெருமூச்சு மட்டும் வந்தது. ஒரு துளி கண்ணீர்கூட வரவில்லை.

"அம்மாமி! நரசிம்மய்யர் பணம் அனுப்புவதாகச் சொல்கிறார்" என்றேன்.

அம்மாமி அவசரமாய் உள்ளே எழுந்து போய், பெட்டியிலிருந்த பண நோட்டுகளை எடுத்து வந்து என்னிடம் கொடுத்தாள். எண்பது ரூபாய் இருந்தது.

"சங்கரா! நான் அப்பளம் இட்டுச் சேர்த்த பணத்தில் மீதி இது. அவருக்கு என் பேரால் அனுப்பு. இந்த விட்டு விலாசம் கொடுத்து நேரே இங்கே வரச் சொல்லு" என்றாள்.



அம்மாமியின் குரல் கொஞ்சம் கம்பி யிருந்தது. அவ்வளவுதான். எனக்கோ கண்ணில் அருவி போல் ஜலம் வந்தது.

மேல் சம்பவங்களைப் பற்றி நினைத்தாலே எனக்கு என்னமோ செய்கிறது; கைகூட கிடுகிடென்று நடுங்குகிறது.

பத்து நாளைக்கெல்லாம் மணியார்டர் திரும்பி வந்து விட்டது. மணியார்டரை எந்த விலாசத்துக்கு அனுப்பினேனோ அந்த வீட்டிலிருந்து ஒருவர் மணியார்டர் வருவதற்கு முன் சுந்தரராமய்யர் காலஞ் சென்று விட்டதாகவும், அநாதைப் பிரேத சம்ஸ்காரம் செய்யப் பட்டதாகவும் கடிதம் எழுதி யிருந்தார்.

பதினெட்டு வருஷமாகக் கண்ணால் பாராத புருஷனுக்காகப் பாகீரதி அம்மாள் துக்கம் காத்தாள். பத்தாம் நாள் பிராம்மண சாதியில் வழக்கமான அலங்கோலங்கள் அம்மாமிக்கும் செய்யப்பட்டன.

கேதாரிக்கு இதைப் பற்றி ஒன்றும் எழுதக் கூடாதென்றும், திரும்பி ஊருக்கு வந்த பிறகு தெரிவித்தால் போதுமென்றும் அம்மாமி கண்டிப்பாய்ச் சொல்லி விட்டாள்.

## 5

காலம் எப்படியோ சென்றது. நானும் மலையைக் கெல்லி எலியைப் பிடித்து பி. ஏ. பாஸ் செய்து, நான் படித்த பள்ளிக்கூடத்திலேயே உபாத்தியாயர் ஆனேன். கேதாரி ஊருக்குத் திரும்பும் காலம் சமீபித்தது.

எதிர்பார்த்தது போலவே அவன் மிகச் சிறப்புடன் ஐ. ஸி. எஸ். தேறினான். அவனுடைய தகப்பனாரின் மரணத்தைப் பற்றியும், மற்ற விவரங்களைப் பற்றியும் அவனைத் திடுக்கிடச் செய்யாத முறையில் கடிதம் எழுதி, அது பம்பாயில் அவன் கையில் கிடைக்கும்படி அனுப்பி யிருந்தோம். ஆனால் அவனுக்கிருந்த அவசரத்தில், கப்பலிலிருந்து நேரே ரயிலுக்கு வந்து விட்டானாதலால், மேற்படி கடிதம் அவன் கையில் சேரவில்லையென்று பின்னால் தெரிய வந்தது.

அவன் வரும் விவரம் தந்தியில் தெரிவித்திருந்தானாதலால் விட்டு வாசலில் தயாராய்க் காத்துக் கொண்டிருந்தேன்.

என் கழுத்தைக் கட்டிக் கொண்டு இழுத்த வண்ணம் அவசரமாய் உள்ளே போனான். தாழ்வாரத்தில் உட்கார்ந்திருந்த அம்மாமியின் மேல் அவன் பார்வை விழவில்லையோ, அல்லது விழுந்தும் அடையாளம் தெரியவில்லையோ, நான் அறியேன். அவன் பாட்டுக்கு "அம்மா! அம்மா!" என்று கூப்பிட்டுக் கொண்டு ஆவலோடு உள்ளே சென்றான்.

அம்மாமியின் கண்களில் கண்ணீர் வந்ததை முதன்முதலாக அப்போதுதான் நான் பார்த்தேன்.

"அடே கேதாரி! என்னடா இது? அம்மா இதோ இருக்கிறாள்; எங்கேயோ தேடிக் கொண்டு போகிறாயே?" என்றேன்.

கேதாரி திரும்பி வந்தான். வெள்ளைப் புடவை யணிந்து மொட்டைத் தலையை முக்காடால் மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்த பாகீரதி அம்மாமியைச் சற்று நேரம் உற்றுப் பார்த்தான்.

"ஐயோ! அம்மா!" என்று பயங்கரமாக ஒரு கூச்சல் போட்டுத் தொப்பென்று கீழே உட்கார்ந்தான். தலையைக் கைகளில் பிடித்துக் கொண்டான்.

* * *

கேதாரிக்குக் கடுமையான ஜுரம் அடித்துக் கொண்டிருந்தது. திருச்சினாப்பள்ளியில் அவனை வந்து பார்க்காத டாக்டர்கள் இல்லை; அவனுக்குச் செய்யாத சிகிச்சைகள் ஒன்றும் பாக்கி கிடையாது. ஒன்றும் பயன்படவில்லை.

அவனுடைய உடம்பு கொதித்துக் கொண்டிருந்ததைப் போல் உள்ளமும் கொதித்துக் கொண்டிருந்தது. ஒரே நினைவு, ஒரே ஞாபகந்தான். நான் தனியாய் அவனுடன் இருக்க நேர்ந்து விட்டால் போதும்; உடனே அது வெளியே வந்து விடும்.

"சங்கரா! அது என்ன சாஸ்திரமடா அது? அநாதையாய் விட்டுப் பதினெட்டு வருஷம் திரும்பிப் பாராமலிருந்த புருஷன் செத்ததற்காகத் தலையை மொட்டை யடிக்கச் சொல்லும் சாஸ்திரம்! அதைக் கொண்டு வாடா, தீயில் போட்டுக் கொளுத்துவோம்" என்று உணர்ச்சியுடன் கத்துவான்.



கல்கி மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ டி. சதாசிவம் அவர்களும், அவரது மனைவி ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களும், சென்ற 23–ந் தேதி மாலை நாலு மணிக்கு நமது பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேருவைத் தங்களது இல்லத்தில் வரவேற்று உபசரிப்பதை மேலே படத்தில் காணலாம்.

"இதோ பார், சங்கர்! என் தாயார் ரொம்ப புத்திசாலி. இந்த முட்டாள்தனத்துக்கு ஒருநாளும் உட்பட்டிருக்க மாட்டாள். எல்லாம் என்னால் வந்ததுதான். நான் பெரிய இடத்தில்—வைதிகக் குடுக்கைகளின் வீட்டில்—கல்யாணம் செய்து கொண்டேனல்லவா? அவர்களுடைய ஏச்சுக்குப் பயந்துதான் அம்மா இந்த அலங்கோலத்துக்குச் சம்மதித்திருக்க வேண்டும்" என்பான்.

ஒருநாள் வாசலில் இரண்டு கூலி வேலைக்காரர்கள் பேசிக் கொண்டு போனார்கள். ஒருவன் "அண்ணே! இன்று காலை புறப்படும்போது ஒரு மொட்டைப் பாப்பாத்தி எதிரில் வந்தாள். அதுதான் வேலை அகப்படவில்லை" என்று சொன்னது கேதாரியின் காதில் விழுந்து விட்டது.

"சங்கர்! கேட்டாயா? என் தாயார் முகத்தில் விழித்தால் சகல பீடைகளும் நீங்குமென்று சொல்வார்களடா! அவளும் இப்போது மொட்டைப் பாப்பாத்திதானே? அபசகுனந்தானே?" என்று புலம்பினான்.

எவ்வளவோ சமாதானம் சொல்லித் தேற்றினேன். ஆனாலும் அவன் அந்தப் பேச்சை மட்டும் விடுவதில்லை.

"இதைக் கேள், சங்கர்! உத்தியோகமும் ஆயிற்று, மண்ணும் ஆயிற்று. நான் மட்டும் பிழைத்து எழுந்தேனானால் ஒரே ஒரு காரியந்தான் செய்யப் போகிறேன். பிராம்மண ஸ்திரீகள் புருஷன் இழந்தால் தலையை மொட்டையடிக்கும் வழக்கத்தை யொழிக்க ஒரு பெரிய கிளர்ச்சியை நடத்தப் போகிறேன். இந்தத் தனிக் கௌரவம் நம்முடைய சாதிக்கு மட்டும் வேண்டாம்" என்றான்.

ஆனால் ஐ. ஸி. எஸ். வர்க்கத்தைச் சேர்ந்த ஒருவன் இந்தமாதிரி அற்ப காரியங்களில் இறங்குவது யமதர்மனுக்கே விருப்பமில்லை போலிருக்கிறது. கேதாரி உடம்பு குணமடையாமலே, சீமையிலிருந்து திரும்பி வந்த இருபத்தோராம் நாள் காலஞ் சென்றான்.

* * *

இந்தப் பரிதாப வரலாற்றில் சொல்ல வேண்டியது, இன்னும் ஒன்றுதான் பாக்கியிருக்கிறது. கேதாரியின் மாமனார் அவனுடைய புகைப்படம் ஒன்று இருந்தால் கொண்டு தரும்படி எனக்குச் சொல்லியிருந்தார். நானும் அவனும் சேர்ந்து எடுத்துக் கொண்ட படம் ஒன்று என்னிடம் இருந்தது. அதிலிருந்து அவனுடைய படத்தை மட்டும் தனியாக எடுக்கச் செய்து சட்டம் போட்டு எடுத்துக் கொண்டு போனேன். அப்போது அவர்களுடைய வீட்டில் தற்செயலாய்க் கேதாரியின் மனைவியைக் காண நேரிட்டது. அவளைப் பார்த்ததும் என் உடம்பு சிலிர்த்தது. அவளைக் "கிளி" என்று சொன்னேனல்லவா? அந்தக் கிளிக்கு இப்போது தலையை மொட்டையடித்து முக்காடும் போட்டிருந்தார்கள்!



# நீண்ட, அடர்ந்த ஒளிக்கூந்தலுக்கு

இளமையின் ஒளியும் அற்புத ஜ்வலிப்பும் பெற கூந்தலுக்கு கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயிலை தடவுங்கள். கூந்தலின் இயற்கை அழகை அது எடுத்துக் காட்டி எல்லோரையும் பிரமிக்கச் செய்யும்.



எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப் படுத்துக.

# கால்கேட்
## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

---

# அந்த இருமலை நிறுத்துக—

தொண்டை ரணத்தை சமனமூட்டி குணப்படுத்துக. மார்பு மற்றும் சுவாசப்பை அடைப்பை நீக்குக. எல்லாம் க்ஷணத்தில் முடிக்க.




# PEPS

பெப்ஸ் சாப்பிடுங்கள்.




உலக பிரசித்தி பெற்ற
தொண்டை, மார்புவலி நிவாரண மாத்திரைகள்.
எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

பெப்ஸ் தொண்டை, மார்புவலி நிவாரண மாத்திரைகளில் சமனமூட்டி, குணப்படுத்தும் ரசங்கள் அடங்கியுள்ளன. பெப்ஸை சுவைக்கும்போது இந்த ரசங்கள் ஆவியாக மாறி ஸ்வாசத்துடன் தொண்டை, சுவாசக்குழாய் மூலமாக சுவாசப் பைக்குச் செல்லும் நோயின் ஆரம்ப ஸ்தானத்திற்கே சென்று வேலை செய்கின்றன. இதனால்தான் பெப்ஸ் கைகண்ட ஔஷதமாயும் உலக பிரசித்தி பெற்றும் விளங்குகின்றது. பெப்ஸ் இருமலை நிறுத்தி, தொண்டை ரணத்தை சமனமாக்கி, கபத்தை உடைத்து அடைப்பை நீக்குவதுடன் இன்ப்ளுயன்ஸா மற்றும் பிராங்கைடிஸ் சிகிச்சையில் இன்றியமையாததாயுமுள்ளது.

மதராஸிற்கு ஸோல் ஏஜெண்டுகள்: தாதா & கம்பெனி, பார்க் டவுன்

# ஆரோக்கிய வாழ்வு

சீதாலக்ஷ்மி குமாரசாமி

## 4. வைடமின் பி—2. 'காம்ப்ளெக்ஸ்'

இந்தச் சத்தின் முக்கியத்துவம் சமீப காலத்தில்தான் உணரப்பட்டது. இதுவும் மிக முக்கியமாய் நமது உணவில் இருக்கக் கூடிய சத்து. இந்த வைடமின் 'பி' 2–க்கு 'நியாசின்' அல்லது 'நிகோடினிக் ஆசிட்' என்று சொல்லுவதும் உண்டு. இது நரம்புகளின் பலத்துக்கும், ஜீரணம் சரிவர நடைபெறுவதற்கும், சருமம் ஆரோக்கியமாய் இருப்பதற்கும் உதவுகிறது. கிராணி பேதி இந்தச் சத்து குறைவினால் உண்டாகும்.

மற்றும் 'ரிபோபிளேவின்', 'பான்டாதேனிக் ஆசிட்', வைடமின் பி. 6 முதலியன முக்கியமானவை. இவைகளெல்லாமுமே வைடமின் பி.யுடன் சேர்ந்தவைதான். ரிபோபிளேவின் குறைவு ஏற்பட்டால் வாயிலும் நாக்கிலும் புண் ஏற்படும். சிலருக்கு இரு ஓரங்களில் வெள்ளையாகப் புண் போல் இருப்பதன் காரணம் இந்த ரிபோபிளேவின் என்ற சத்தின் குறைவேதான். மற்றும் உள்ளங்காலில் எரிச்சல் ஏற்பட்டு வருவதும் இதன் காரணமாய் உண்டாவதுதான்.

எனவே, இந்த வைடமின் பி.யில் பதினெட்டு வகைகள் கண்டு பிடித்ததின் முக்கிய நோக்கமே எந்தெந்த சத்துக்கள் எந்தெந்த வேலை செய்கின்றன, அந்தச் சத்துக்கள் குறைந்தால் என்ன ஆகும், அப்படிச் சத்துக்கள் குறையும் போது அதை நிரப்பத் தோதாய் இருக்கும் பொருட்டு உடனே இந்தச் சத்துள்ள மாத்திரையோ, மருந்தையோ கொடுக்க வேண்டும் என்பதுதான். இது வைத்திய உலகத்தினர்களுக்குச் சிறந்த முறையே. இந்த நோக்கத்துடன் பலவாறு ஆராய்ச்சிகள் நடத்தி அதன் சத்துக்களைக் கண்டு பிடித்திருக்கின்றனர். மொத்தத்தில் வைடமின் பி. 1 சத்து எதெதில் இருக்கிறதோ அவைகளிலெல்லாம் மற்ற வைடமின் பி.யைச் சேர்ந்த சத்துக்களும் இருக்கின்றன என்று தெரிகிறது.

வைடமின் பி. சத்து அழியாமல் பாதுகாத்துக் கொண்டால் மற்ற பி. சத்துக்களும் சேர்ந்ததாகி விடும். அதற்கு முழுத் தவிட்டுடன் அரிசியைக் கஞ்சி வடிக்காமல் சாப்பிடுவதே உத்தமம். பொதுவாய் முழுத் தானியங்கள், கொட்டைகள், கீரைகள் இவைகளிலும் இந்தச் சத்து நிறையக் கிடக்கின்றது. அடிக்கடி முழுத் தானியங்கள் சுண்டல் செய்வது நல்லது. கீரைகள் தினசரி உபயோகிக்க வேண்டும். கொட்டைகளிலும் அதாவது வேர்க்கடலை, அக்ரூட் போன்றவைகளில் இந்தச் சத்தும் இருப்பதாலும் அவற்றையும் சேர்த்துக் கொள்ளலாம். மற்றும், கம்பு, ராகி, சோளம் போன்ற தானியங்களில் நிறைய இருக்கின்றன. மிஷின் அரிசி சாப்பிடுவோர் தினசரி நாலு அவுன்ஸாவது மேற்படி தானியங்களில் ஒன்றைச் சேர்த்துக் கொண்டால் மிஷின் அரிசியில் ஏற்படும் கெடுதல்களை ஒருவாறு தடுக்கலாம்.

இந்தக் கோளாறுகளைத் தடுக்க ஈஸ்ட் மாத்திரை உபயோகிப்பது சர்வசாதாரணமாய் இருக்கிறது.

இந்தச் சத்துக்களெல்லாம் கண்டு பிடித்து அறிலும் வெகு நுணுக்கமாக ஒன்றில் பல கண்டு பிடித்து ஒரு சில வருடங்கள்தான் ஆகின்றன. அதற்கு முன்பெல்லாம் நாம் வாழவில்லையா! சுகமாக இல்லையா! நமது முன்னோர்கள் பெரியவர்களெல்லாம் இந்த வைடமின் மாத்திரைகளை விழுங்கிக் கொண்டுதான் ஆரோக்கிய வாழ்வு வாழ்ந்தார்களா என்று யோசித்துப் பார்த்தால் நமக்கே அதன் விடை நன்கு விளங்கும்.

மெஷின் வந்து சில வருடங்களாகின்றன. அப்பொழுதிருந்துதான் நமக்கு வியாதிகளும் அதிகமாக வரத் தொடங்கின. அதற்கு முன்பு இவ்வளவு நோய்கள் கிடையா. நமக்கு மிஷின்களைக் கொடுத்து நமது நாட்டின் ஆரோக்கியத்தைக் கெடுத்தது போலவே, இன்று அதற்கு மாற்றாகச் சத்தரிசியைச் சிபார்சு செய்கிறது விஞ்ஞானம். விஞ்ஞானம் அதிகமாய் வளராத காலத்தில் தங்கள் சுய அனுபவத்தைக் கொண்டே நம் முன்னோர்கள் திடமாக வாழ்ந்தார்கள். அப்பொழுதெல்லாம் வெள்ளைச் சர்க்கரையும் கிடையாது. அது கிடைக்காமல் அவர்கள் வாழவில்லையா! அவர்கள் நம்மைவிட ஆரோக்கியத்தில் எவ்வளவோ உயர்ந்துதான் இருந்தார்கள்.

விஞ்ஞானம் வளர்வது தவறல்ல, அதன் நன்மை தீமைகளை அறிந்து நன்மைகளை மட்டும் உபயோகப்படுத்திக் கொள்ள வேண்டும். தீமைகள் ஏற்பட்டால் அவற்றைத் தடுக்கும் மார்க்கமும் தெரிய வேண்டும். அப்பொழுதுதான் சுகமாக வாழலாம். மோட்டார் வாகனம் சௌகரியமானதுதான்; அதை ஓட்ட மட்டும் கற்றுக் கொண்டால் போதாது. அபாயங்கள் நேரிடும்போது அதை நிறுத்தவும், சமாளிக்கவும் பயில வேண்டும். எந்த ஒரு பழக்கத்தையும் நாம் நிதானமாய் வைத்துக் கொள்ள வேண்டும். அதற்கே அடிமையாய் விடக் கூடாது. அதற்குத்தான் நாம் இன்னும் பல படிகள் முன்னேற வேண்டியதாயிருக்கிறது. அப்படியே மற்ற நாட்டார்கள் சொல்லுவதை எடுத்துக்கொள்வதோ கடைப்பிடிப்பதோ தவறு.

அமெரிக்காவிலும் மற்றும் விஞ்ஞானம் வளர்ந்த நாடுகளிலும் அவர்கள் விஞ்ஞான நாகரிகத்தை வளர்த்தாலும் அதனால் அவர்கள் தங்கள் ஆரோக்கியம் பாதிக்கும்படி செய்து கொள்வதில்லை. அவர்கள் உணவில் அநேகமாய் மாமிசம் அதிகம் இருக்கும். மற்றும் ரொட்டி சாப்பிடுகிறார்கள். ரொட்டி என்றால் நம்மைப் போல அதிகமாய் அல்ல. ஏதோ ஒரு துண்டு இரண்டு துண்டுகள் சாப்பிடுகிறார்கள். அப்படிச் சாப்பிடும் ரொட்டியிலும் போதிய வைடமின் சத்துக்கள் இல்லையென்று, ரொட்டி தயாரிக்கும்போதே வைடமின் சத்துக்களைச் சேர்த்தே தயார் செய்து விற்பனை செய்கிறார்கள். அதனால் அவர்கள் வெள்ளை மாவு ரொட்டி சாப்பிட்டாலும் அவர்களுக்கு ஒன்றும் செய்வதில்லை. இங்கும் சிலர் ரொட்டிகளைச் சாப்பிடுகிறார்கள். இந்த ரொட்டிகள் அநேகமாய் மரிக்கன் மாவில் தயாரிக்கிறார்கள். அமெரிக்கன் மாவு என்பது வழக்கத்தில் மரிக்கன் மாவு என்று சொல்லும் வழக்கம் ஏற்பட்டுள்ளது. அந்த மாவில் ஒருவித சத்தும் கிடையாது. வெறும் மாவு தவிர அதில் வைடமின்களோ, கனியங்களோ, கொழுப்பு, பாஸ்பரஸ்

ஒன்றும் கிடையாது. மிஷினில் தீட்டிய பச்சரிசியில் எப்படி ஒரு சத்தும் கிடையாதோ அதைப் போல இதிலும் கிடையாது. இதைத்தான் தலையணையில் பஞ்சு திணிப்பது போல் திணிக்கிறோம். உணவு ஞானம் சிறிதாவது இருந்தால் நாம் இப்படியெல்லாம் சாப்பிடுவோமா !

ஏதோ பசிக்கிறபோது வயிற்றை எதைக் கொண்டாவது நிரப்புவது என்று வழக்கமிருக்கிறதே யன்றி எப்பொருள் எவ்வளவு சாப்பிட வேண்டும், எவ்வாறு சாப்பிட வேண்டும், எவ்வகையில் சாப்பிட வேண்டும், என்று அறிந்து சுவைத்துச் சாப்பிடுவதில்லை.

அமெரிக்காவில் உள்ள மக்கள் எவ்வளவு தூரம் இந்த உணவு, நோய் விஷயத்தில் ஜாக்கிரதையாக இருக்கிறார்கள் என்பதை ஒரு உதாரணத்தின் மூலம் அறியலாம். ஒரு நண்பர் அமெரிக்காவில் நியூயார்க் நகரத்தில் போய் இறங்கினார். அன்றையப் பத்திரிகையை வாங்கிப் படித்தார். அதில் கொட்டை எழுத்துக்களில் ஒரு விஷயம் பிரசுரமாகி இருந்தது. அதாவது அந்த நகரத்தில் ஒரு வீட்டிலுள்ள குழந்தைக்கு டைபாய்ட் ஜுரம் வந்திருந்தது. அதுதான் அன்றைய முக்கிய விஷயம். "ஒரு குழந்தைக்கு டைபாய்ட் ஜுரம் வந்துவிட்டது. இது யாருடைய அஜாக்கிரதையால் வந்தது ! அரசாங்கத்தின் அஜாக்கிரதையா ! பெற்றோர்களின் அஜாக்கிரதையா ! இந்த ஜுரம் வரக் காரணம் என்ன ! உணவா ! உடையா ! ஜலமா ! எது என்பதைக் கண்டு பிடிக்க வேண்டும். உடனே இதைக் கவனித்துத் தடுக்க வேண்டும். மக்களே, ஜாக்கிரதையாய் இருங்கள். டைபாய்ட் ஜுரம் ஒரு குழந்தைக்கு வந்து விட்டது."

இம்மாதிரி பல பத்திரிகைகளில் பல வகையில் எழுதி இருந்ததாம். பத்திரிகைகளி லெல்லாம் ஒரே பரபரப்பு. மக்கள் இவைகளைப் படித்து, 'எப்படி வந்திருக்கும் !' என்ற புலம்பல் பேச்சுக்கள். இவ்வாறு அன்று நடந்தனவாம்.

நம் நாட்டில் ஒரு விரோதி வந்து குண்டு போட்டான் என்றால் எப்படியோ, அவ்வாறு டைபாய்ட் ஜுரம் ஒரு குழந்தைக்கு வந்ததைப் பற்றி எழுதியிருந்தார்கள். உடனே அதற்குத் தக்க நடவடிக்கைகள் எடுத்து அக் குழந்தையைத் தனியாய் வைத்து என்னென்ன சிகிச்சைகள் செய்ய வேண்டுமோ, அவற்றைச் செய்திருப்பார்கள் என்று நிச்சயமாக நம்பலாம். எதற்காக இதைப்பற்றி பிரஸ்தாபிக்க வந்தது என்றால், ஒரு குழந்தைக்கு டைபாய்ட் வந்தது என்றதும், அது எப்படி எவ்வாறு வந்தது என்பதில் சிரத்தை காட்டி இனி வராமல் இருக்கவும், பரவாமல் இருக்கவும் அந்த நாட்டுப் பத்திரிகைகள், அந்த நாட்டு மக்கள் அவ்வளவு சிரத்தை காட்டுகின்றனர் என்பதை எடுத்துக் காட்டத்தான்.

நமது நாட்டில் ஒரு குழந்தை என்ன, பல லக்ஷம் குழந்தைகள் டைபாய்டால் பாதிக்கப்பட்டுக் கொண்டுதான் இருக்கின்றனர். இந்த ஒரு டைபாய்ட் மட்டும் அல்ல. அம்மை, காலரா, பிளேக், க்ஷயம், குஷ்டம், பைத்தியம், குருட்டுத்தனம், ஊமை, மலேரியா மற்றும் உலகில் என்னென்ன வியாதிகள் உண்டோ அத்தனையும் இங்கு உண்டு என்று கூறலாம்.

இன்று நமது நாட்டு மக்கள் அரசியல் விஷயத்தில் அதிக சிரத்தை கொண்டுள்ளார்கள் என்றால் அது பத்திரிகைகளின் பெரும் பணியே எனலாம். அதைப் போல மக்களிடையே ஆர்வத்தையும், விஷய ஞானத்தையும், பரப்பும் ஒரு மாபெரும் சக்தி மக்கள் விரும்பிப் படிக்கும் பத்திரிகைகளின் கையில் தான் இருக்கிறது. அமெரிக்கப் பத்திரிகைகளில் முழுக்க முழுக்க உள்நாட்டு விஷயங்கள்தான் அதிகம் இருக்கும். இன்றும் நமது நாட்டைப் பற்றி அவர்கள் அவ்வளவாக அறியார்கள். அப்படி அறிந்தாலும் ஏதோ இந்தியர்கள் என்றால் மந்திரவாதிகளைப் போல சிலர் நினைக்கலாம். கிராமங்களில் வறுமையில் காட்சியளிக்கும் நமது மக்களைப் போன்று இருப்பார்கள் என்று நினைத்திருக்கலாம். அவ்வளவே.

ஆனால் நமது நாட்டில் நாம் படிக்கும்போதே ஷேக்ஸ்பியர் முதல் எஸ்கிமோவரை எல்லாம் படித்து விடுகிறோம். பெரியவர்களுக்கு அமெரிக்கா செய்தி இலாக்கா இருக்கவே இருக்கிறது. நமது நாட்டில் நமக்கிருக்கும் பிரச்னைகளை நாம் சகலரும் அறியும் வண்ணம் எல்லோரும் நடந்து கொள்ள வேண்டியது மிக அவசியம். அப்பொழுதுதான் நாமும் மற்ற நாடுகளைப் போல வாழ முடியும், பெற்ற சுதந்திரத்தினால் சுகமடைவதற்கு முடியும் என்பது உறுதி. (தொடரும்)



## வினோபாவின் கருத்துக்கள்

ஜனநாயக ஆட்சியைப் பற்றி வினோபாவின் கருத்து சற்று நக்காரமாக இருந்தாலும், அதன் அடிப்படையான உண்மை நம் கவனத்துக்கு உரியது :

"உங்களை யாராகிலும், இவ்வுலகில் அறிவாளிகள் அதிகமா, அறிவிலிகள் அதிகமா என்று கேட்டால், நீங்கள் அறிவிலிகள்தான் அதிகம் என்று கூறுவீர்கள். ஆனால் ஜனநாயகம் என்பது, நூறில் 49 பேரை 51 பேர் ஆளுவது என்பதல்லவா ? பின் ஜனநாயக ஆட்சி என்பதற்கு என்ன பொருள் ?

"இந்தச் சந்தர்ப்பத்தில் சூரதாஸரின் பாடல் ஒன்று நினைவுக்கு வருகிறது. அவர்தான் எவ்வளவு சரியாகச் சொல்லி யிருக்கிறார் :

"'விதியின் போக்குத்தான் எவ்வளவு விசித்திரமாக இருக்கிறது. அறிவிலிகள் ராஜ்யம் ஆளப் புத்திசாலிகள் பிச்சைக்காரர்களாக அலைய வேண்டியதா யிருக்கிறது !'

"ஆனால் இங்கோ விதிவசத்தினால் ஆளும் பொறுப்பை அடையவில்லை ; நாமே யல்லவா தேர்ந்தெடுத்து அவர்களை ராஜ்யம் ஆள விடுகிறோம் !"



(சென்ற வாரத் தொடர்ச்சி)

"முருகு" என்று கூப்பிட்டுக் கொண்டே வந்தான் நாகசாமிப் பாண்டியன். அவன் மருது பாண்டியனின் நெருங்கிய உறவினன். அந்தரங்கமான ஆள்.

"முருகு, என்ன இப்படிக் கவலையோடு படுத்திருக்கிறாய்?" என்று கேட்டான். முருகையா எழுந்து உட்கார்ந்தான். நாகபாண்டியனின் கேள்விக்குப் பதில் சொல்ல வில்லை.

"முருகு, உனக்கு உடையத் தேவனைத் தெரியுமா?" என்று கேட்டான் நாகு.

"அவனைத் தெரியாது. ஆனால் அவனைப் பற்றி நிறையத் தெரியும். அந்தத் துரோகியை நான் பார்த்ததில்லை. உடையத் தேவனைப் பார்த்தால் அவன் மண்டையை உடைத்துப் பார்க்க வேண்டும் என்று ஒரு ஆசை சில நாளாக மனசிலே வளர்ந்து வருகிறது!" என்றான் முருகையா.

"முருகு! ஆத்திரமாகப் பேசாதே. உடையத் தேவன் உன்னைப் பற்றி எத்தனை அன்போடு விசாரித்தான் தெரியுமா?" என்றான் நாகு.

"விசாரித்தானா?. அப்படியானால் நீயும்......"

"இந்தா—அவசரப்படுகிறாயே! உடையத் தேவன் எனக்கு ஒரு முறையில் மருமகன் வேணும். வள்ளியம்மைக்குக் கூடத் தென் பாண்டிச் சம்பந்தத்தில் கொஞ்சம் எட்டின உறவு. வள்ளியம்மையைப் பற்றியுந்தான் எவ்வளவு பிரியத்தோடு உடையத்தேவன் கேட்டான் தெரியுமா?"

"வள்ளியம்மையைப் பற்றியா?" — முருகையன் இப்படிக் கேட்டபோது வள்ளியம்மை என்ற அந்த உச்சரிப்பில் ஒரு மோகக் கிறக்கம் தொனித்தது!

"ஆமாம்! வள்ளியம்மையின் தகப்பன் இருந்திருந்தால் இதற்குள் அவளுக்கு எத்தனை விமரிசை யெல்லாம் செய்து உன் கையில் அவளை ஒப்படைத்திருப்பான் என்றெல்லாம் சொன்னான் உடையத் தேவன். நீயானால் அவனைப் பற்றி..."

முருகு நிமிர்ந்து உட்கார்ந்தான். வள்ளியம்மை என்ற பெயரைச் சொல்லி நாலு நல்ல வார்த்தை யார் பேசினாலும், பேசுபவன் பரம விரோதியாக இருந்தாலுங்கூட முருகையா அதை நிமிர்ந்து கேட்பான்; அலட்சியம் செய்ய மாட்டான்! இது நாகுவுக்கு நன்றாகத் தெரியும். உடையத் தேவனுடைய மாமனும் அவனுடைய இரகசிய உளவாளியுமான நாகு, முருகை

# மருது பாண்டியன்



யாவின் இதயத்தில் எந்த பாகம் மென்மையாக, பலவீனமாக இருந்தது என்பதை நன்கு தெரிந்து கொண்டதால், அதை எப்படிப் பயன் படுத்திக்கொள்ள வேண்டுமோ அப்படிச் செய்து கொண்டான்!

## 5

இந்த உலகில் எவ்வளவு உறுதி படைத்த மனிதராக யிருந்தாலும், அவர்கள் உள்ளத்திலும் எங்கோ ஒரு கோடியில் மென்மைக் குணம் இருக்கவே இருக்கும்! அதை நல்லவர்கள் நல்ல விதத்தில் பயன்படுத்திக் கொள்கிறார்கள். தீயவர்கள் அதைத் தீய முறையில் பயன்படுத்திக் கொள்கிறார்கள். நாகு முருகையாவின் மென்மையை, தனக்கு ஏற்ற முறையிலே பயன்படுத்தினான்.

எந்த வள்ளியின் பிரிவால் முருகையா வாடினானோ, எந்த வள்ளியை நினைத்தால் அந்த இரும்பு நெஞ்சம் பிச்சிப் பூவாக மென்மைப் பட்டுவிடுமோ, அந்த வள்ளியைச் சந்திக்கவும் அவளை மணக்கவும் வழி செய்வதாகச் சொல்லி உடையத் தேவனிடம் அழைத்துப் போனான் முருகையாவை!

இருளும் நிலவும் ஒன்றோடொன்று ஒளிந்து விளையாடிக் கொண்டிருந்த நிசி வேளை அது. கோட்டையைச் சூழ்ந்து நின்ற கானகத்தில் இரகசியமாக அமைந்த ஒரு சுரங்கப் பாதை வழியாக முருகையாவும் நாக பாண்டியனும் சென்றார்கள். வெகு தூரம் அந்த இரகசியப் பாதை வழியாகவே சென்றதும் பின்னர் மரமும் செடியும் அடர்ந்த ஒரு பாறைப் பாங்கான இடத்துக்கு வந்து சேர்ந்தார்கள். என்ன ஆச்சரியம்! அங்கே இவர்களுக்கு என்று இரண்டு குதிரைகள் காத்துக்கொண்டு நின்றன. நாக பாண்டியன் முன்னதாகவே இந்த ஏற்பாடுகளை யெல்லாம் தெரிந்து கொண்டவன் போலக் காணப்பட்டான். குதிரைகள் கனைப்பது போல் ஒரு சப்தம் செய்தான். உடனே புதருக்கு இடையே இருந்து வேலாயுதம் தாங்கிய வீரர்கள் நால்வர் அங்கு தோன்றினார்கள்!

''புறப்படலாம்!'' என்று சொன்னான் நாக பாண்டியன். வேற்படை வீரர்கள் காவல் செய்ய, இரண்டு குதிரைகளிலும் முருகையனும் நாகுவும் ஏறிக் கொண்டார்கள். குதிரைகள் எவ்வளவு வேகமாகச் சென்றனவோ அவ்வளவு வேகமாக அந்த வீரர்கள் நால்வரும் ஓடினார்கள். குதிரைக்கு முன்னால் இருவரும், பின்னால் இருவருமாக ஓடினார்கள். முருகையனுக்கு எல்லாம் ஒரே அதிசயமாக இருந்தது. இம் மாதிரி நிசி வேளையில் இத்தனை பெரிய கானகத்தில்



# கோட்டை

சோமு

இதற்கு முன்பு பல தடவை இரகசியமாகச் சென்றிருக்கிறான், முருகையன். ஆனால் இப்பொழுதோ? அந்தக் கானகத்தில் இப்படி ஒரு வழி இருந்தது என்பதும், இந்தப் பாதை வழியாகக் குதிரையின்மேல் ஓடிப் பறக்க முடியும் என்பதும் முருகையனுக்குத் தெரியாது! வழக்கமான பாதைகளை விட்டு, புதிய பாதையில் அல்லவா—எல்லா விதத்திலும்—செல்கிறார்கள் அவர்கள்!

நீண்ட தூரம் சென்ற குதிரை வீரர்கள் இருவரும், பாறை யடர்ந்த இன்னொரு புதிய பிரதேசத்தை அடைந்தார்கள். செங்குத்தான ஒரு பாறையும் அதன் அருகில் பள்ளமான அகன்ற பாறை ஒன்றும் தெரிந்தன. மரமும் புதரும் அடர்ந்திருந்த அந்த இடத்தில் மனிதர்கள் இருந்தார்கள் என்பது, பக்கத்திலே போய்ப் பார்த்த பிறகுதான் தெரிந்தது.

பாறையின் அருகே குதிரைகள் நின்றன. முருகையாவும், நாகபாண்டியனும் தங்கள் குதிரைகளினின்று இறங்கி அந்த அகன்ற பாறையை நோக்கி நடந்தார்கள். கொஞ்ச தூரம் சென்றால், அங்கே உடையத் தேவன் உட்கார்ந்து கொண்டிருந்தான்!

முருகையாவைக் கண்டதும் எழுந்திருந்து வரவேற்றான் உடையத்தேவன். "இப்படி உட்காரு, தம்பி" என்று பிரியத்தோடு அந்தப் பாறையில் உட்காரச் செய்தான். இதன்பின் உடையத் தேவன் முருகையாவிடம் ஒன்றும் பேச வில்லை. தனியாக ஒரு மரத்தடிக்கு நாக பாண்டியனை அழைத்துப் போய்ப் பேசினான்.

நாக பாண்டியன் உடையத் தேவனிடம் முருகையாவைப் பற்றிய விவரங்கள் அனைத்தையும் சொன்னான். முருகையாவை இப்பொழுது திடீரென்று மனம் மாற்றித் தங்களுக்கு உடந்தையாக இருக்கும்படி செய்வது கஷ்டம் என்றும், மெதுவாகச் செய்ய வேண்டிய காரியம் என்றும் விளக்கினான்.

"அடிக்க அடிக்க அம்மியும் நகரும் தம்பீ!" என்று ஒரே வாக்கியத்தில் அந்தச் சந்தேகத்துக்கு முடிவு கூறினான் மிக்க அநுபவசாலியான உடையத் தேவன்.

இதன்மேல் நாகபாண்டியன் ஒரு யோசனை கூறினான். முருகையா மீண்டும் மருதுபாண்டியரைச் சந்திக்காமல் இங்கேயே இருந்து விட்டால் நலம் என்றும், அப்படி இவன் மருது பாண்டியரைச் சந்திக்காமல் இருந்து விட்டால் அவர்களுக்கும் வலது கை ஒடிந்த மாதிரி என்றும் சொன்னான் நாகபாண்டியன். அப்படி ஒருவேளை முருகையா இதற்கு இடம் கொடுக்க வில்லை யென்றால், வேறு எந்தத் தொடர்பும் அவனுக்கு ஏற்படாதவாறு ஒரு சிறை வாழ்க்கையை விதித்துவிட வேண்டியதுதான் என்றும் நாக பாண்டியன் யோசனை சொன்னான்.

"தம்பீ, அவனைச் சிறை வைப்பதற்கெல்லாம் அவசியம் வராது. தம்பீ! நம்மிடம் அவன் மசியவில்லை என்றால் அல்லவா, அவனைத் துன்பப் படுத்த வேண்டும்? வாலிபப் பிள்ளை, கல்யாண வயது. ஒரு பெண்ணிடம் வேறு கிறுக்குப் பிடித்து அலைகிறான். ஒரு போர் வீரனுக்குப் பெண்ணாசை பிடித்து விட்டால் அது எளிதில் விடாது. அந்த சமாசாரம் எல்லாம் எனக்கு நன்றாகத் தெரியும். நீ கவலைப்படாதே!" என்றான் உடையத் தேவன். அவன் பேச்சில் உறுதி இருந்தது!

இருவரும் தங்களுடைய இரகசியப்பேச்சில் ஒரு முடிவுக்கு வந்ததற்கு அடையாளமாக, நாக பாண்டியன் இப்பொழுது முருகையாவைத் தனியாகக் கூப்பிட்டான். அவனுடைய திருமணத்தைப் பற்றியே இதுவரை பேசிக் கொண்டிருந்ததாகவும், உடையத் தேவன் அவனோடு முருகையா சில நாள் தங்கினால் நல்லது என்று நினைப்பதாகவும் கூறினான். முருகையாவுக்கு இதெல்லாம் முதலில் திகைப்பாக இருந்தது. பிறகு அவனுடைய சபலத்துக்கு இது ஒரு தூபமாக இருந்தது. பின்னர் பாறைக்குத் திரும்பி வந்து உடையத் தேவனோடு இருந்து பேசியதும், உள்ளத்தில் ஆசை அரும்பத் தொடங்கிற்று!

உடையத்தேவன் மிகவும் கெட்டிக்காரன். நாகுவும் அந்த நயவஞ்சகனும் சேர்ந்து முருகையாத் தேவனை மறுபடியும் காளையார் கோவிலுக்குச் செல்ல முடியாதபடி தங்களுடனேயே இருத்திக் கொண்டு விட்டார்கள். அவனிடமிருந்து என்னென்ன தகவல்கள் சேகரிக்க முடியுமோ அத்தனை தகவல்களையும் சேகரித்துக் கொண்டார்கள். மருது பாண்டியனைப் பிடிப்பதற்காக ஏதேதோ முயன்று, சில குறுநிலத் தலைவர்களின் உதவியையும் பெற்றார்கள். ஒரு வாரத்தில் மருதுத் தேவனுடைய படை பிளவுபட்டுப் பிரிவதற்கான பல பொய் வதந்திகளைப் பரப்பினார்கள். இதன் பின் நடந்த சம்பவத்தைத் தமிழ் நாட்டின் சரித்திரம் வருத்தத்தோடு கூறிக் கண்ணீர் வடிக்கிறது.

"தேனுந்து தாமன்
மருதேந்திர ராஜன்"

என்றும்,

யாரும் பணி மருது
பாண்டிய பூபன்"

என்றும் தமிழ்ப் புலவர்கள் பாடித் துதித்த மருதேந்திரரின் வாழ்க்கை ஒரு சோக நாடகமாக முடிந்து விட்டது. துரோகிகள் செய்த சூழ்ச்சியினால், மருது பாண்டியருடைய படையிலேயே பிளவு ஏற்பட்டது. மருது பாண்டியரைப் பிடிக்கும் முயற்சியில் அன்னியரோடு தமிழ் வீரர்களும் முனைந்தார்கள். அவர்களுடைய நடமாட்டம், இரகசியமாக அவர்கள் பதுங்கும் இடம், நேரம் முதலிய எல்லா விவரங்களையும் சேகரிப்பதற்காக அங்கங்கே ஐந்தாம் படையினர் வெகு தீவிரமாக வேலை செய்தனர்.

வீரனுக்கு என்றுமே நேரான மனப் போக்குதான் இருக்கும். வில்லினின்று

கிளம்புகிற அம்பு எப்படி ஓரே நேராகப் பாய்கிறதோ அப்படியேதான் அவனுடைய மன வேகமும் அமைந்திருக்கும். சூழ்ச்சி வலையைப் பின்னும் சிலந்திக் கூட்டத்தினரைப் போல அவனுடைய மனம் பின்னுவதில்லை. வளைவுகள், முடிச்சுகள், சுருக்கங்கள், கண்ணிகள்—இவையெல்லாம் மருது பாண்டியனைப் போன்ற வீரனிடம் இல்லை. அவன் தன்னுடைய சகாக்களை நம்பினான். அன்னியரை எதிர்த்துத் துரத்தும் முயற்சியில் தன்னைப் போலவே தனது நண்பர்களும், தன்னுடைய படையினரும் ஒரே சித்தத்தோடு இயங்கினார்கள் என்று அவன் நினைத்தான்! அவன் நம்பிய துணைவர்களே அவனைக் காட்டிக் கொடுப்பார்கள் என்று அவன் கனவிலும் எண்ணவில்லை.

மருது பாண்டியர்கள் கோட்டையை விட்டுக் காட்டிலே செல்லும் இரகசிய இடங்களில் ஒருநாள் அகப்பட்டுக் கொண்டனர். அவர்களைச் சூழ்ந்து நின்று தாக்கிய வீரர்களோடு திரமாக எதிர்த்துச் சண்டைசெய்தனர் என்றாலும், முடிவு வேறுவிதமாக இருந்தது!

வீர மருத பாண்டிய சகோதரர்களும் ஊமைத் துரையும் பிடிக்கப்பட்டார்கள். ஊமைத்துரையைப் பாஞ்சாலக் குறிச்சிக்கே கொண்டு சென்று, அங்கே தூக்கில் இடுவது என்று எதிரிகள் தீர்மானித்தனர். மருது பாண்டியரை அவர்களுடைய ஜன்ம பூமியிலேயே தூக்கில் இட்டால்தான் தண்டனை என்ற சொல்லுக்குப் பூரணமான பொருள் உண்டு என்று கருதினார்கள்.

ஆமாம்; எதிரியின் பீரங்கிப் பகைமையை விட "கேள் போன்ற பகைவரின் உறவு" மருது பாண்டியருக்குப் பெருங் கேடாக அமைந்தது. மருது பாண்டியனிடம் யாரெல்லாம் அதிக விசுவாசம் கொண்டிருந்தார்களோ, அவர்களையெல்லாம் சூழ்ச்சியிலே வளைத்துச் சுருக்குப் போட்டனர் சதிகாரர்! வள்ளியம்மையின் பிரிவினால் துடித்துக் கொண்டிருந்த முருகையாத் தேவனும் வலையிலே விழுந்தான்.

ராமனிடம் எல்லையற்ற அன்பு கொண்டிருந்த கைகேயியின் "தூய" சிந்தையும் மந்தரையினால் திரிந்தது என்று கூற வந்த கவி சக்கரவர்த்தி, அவருடைய மனம் அவருக்கே ஒப்பாமல்,

"......வானவர்
பெற்றநல் வரம்உண்மை
யா லும்
ஆய அந்தணர்
இயற்றிய அருந்தவத்
தா லும்!"

என்றே முடித்து விடுகிறார். அது போல ஆங்கிலேயர் சில காலம் நம்மை அடிமையாக்க வேண்டும் என்று ஒரு விதி இருந்தது. இப்படி நடந்து விட்டது என்றுதான் சொல்ல வேண்டும்! இல்லையென்றால் வீரத்துக்கும் ஒழுக்கத்துக்கும் பெயர் பெற்ற தமிழகத்து தீரர்கள் ஏன் துரோகிகளாக மாற வேண்டும்?

## 6

மருது பாண்டியர் தூக்கில் இடப்பட்ட மறுநாளே உடையத்தேவன் நவரத்தினங்க

---

<u>விநோபாவின் கருத்துக்கள்</u>

சோஷலிஸ பாணியில் நமது எதிர்கால பாரதத்தை நிர்மாணிக்க முயல வேண்டும் என்பது ஆவடி காங்கிரஸில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களில் மிக முக்கியமானதாகும். இந்தக் கருத்தை நமது நேரு வெகு நாளாகவே சொல்லிக் கொண்டு வருகிறார். இதைப் பற்றி விநோபாஜி ஒரு முறை பின்வருமாறு கூறினார்.

"எதிர்கால இந்தியா சோஷலிஸ பாணியில் அமைந்திருக்கும் என்று பண்டித நேரு கூறுகிறார். நம் நாட்டில் நிலவப் போகிற சோஷலிஸம் மேல் நாட்டு சோஷலிஸத்துக்கு முற்றும் மாறுபட்டதாக இருக்க வேண்டும்.

"உண்மையில் பிரிட்டனில், 'கன்ஸர்வேடிவ்'களுக்கும், சோஷலிஸ்டுகளுக்கும் அதிக வித்தியாசமில்லை. இரு கட்சியினரும் ஆட்சிப் பீடத்தைப் பற்றுவதில்தான் ஆர்வம் கொண்டு விளங்குகின்றனர். ஜனசக்தி என்ற ஒரு தனித் தத்துவம் இருக்கிறது என்பதை யாரும் அங்கீகரிப்பதில்லை. மக்கள் தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ளும் சக்தி பெற்றவர்கள் என்பதை உணர்வதில்லை. தற்போது நாம் எதற்கெல்லாம் மதிப்புக் கொடுக்கிறோமோ அதெல்லாம் மாறினால்தான் அது சாத்தியமாகும். ஆகவே, பூதானம் என்பது பிச்சை கேட்கும் இயக்கமல்ல; சிறிது கருணை காட்டுங்கள் என்று இரங்குவதல்ல. இது அன்பின் சக்தியால் உந்தப்பட்டு நடக்கும் இயக்கமாகும்."

னால் ஆன ஒரு மாலையை முருகையாவிடம் கொடுத்தான்.

"உங்கள் திருமணப் பரிசு இது! வேள்விக் குடிக்குப் போய் வள்ளியம்மையோடு திரும்பி வா! பாவம், எத்தனை மாதங்களாக அவள் உனக்காகக் காத்திருக்கிறாள்!" என்று வெற்றிக் களிப்போடு சொன்னான்!

முருகையாத் தேவன் ஒரு வில் வண்டியிலேறி "ஜல் ஜல்" என்று வேள்விக் குடிக்கு வந்தபோது, முந்திய இரவு மருது பாண்டியர் தூக்கிலிடப்பட்ட செய்தி இன்னும் ஊரிலே பரவவில்லை. வழக்கம் போல் தெருக்கள் காட்சி தந்தன. வில் வண்டிச் சத்தத்தைக் கேட்டதும் ஆவலோடு ஓடி வந்து திண்ணையிலே நின்றாள் வள்ளியம்மை.

முருகையா இறங்கினான். தன்னை மறந்து "முருகு!" என்றாள் வள்ளி.

வீட்டுக்குள்ளே சென்ற முருகையா, நவரத்தின மாலையை எடுத்து வள்ளியம்மையின் கையிலே கொடுத்தான். அவள் அதைக் கழுத்திலே போட்டுக் கொண்டாள்.

"எனக்கு நல்லா இருக்கா இது, முருகு?" என்று கேட்டாள் வள்ளி.

"ஓ! ஒன்பது ரத்தினத்தோடு, பத்தாவது ரத்தினம் இல்லையா நீ? நன்றாகச் சேர்கிறது!" என்றான் முருகு.

"ராஜா கொடுத்தாரா நமக்கு?—அப்பா ஒரு மட்டும் திரும்பி வந்தியே?" என்றாள் வள்ளி. முருகு பதில் பேசவில்லை. திகைத்தவாறு நின்று கொண்டிருந்தான்.

"என்ன முருகு, ஒன்றுமே பேசக் காணோம்! ராஜா என்ன சொல்லி அனுப்பினார்?" என்று கேட்டாள்.

"ராஜாவா!......" என்று தீயை மிதித்தவன் போலக் கேட்டான் முருகையா!

வள்ளியம்மை ஸ்தம்பித்து நின்றாள்.

"என்ன! ராஜாவுக்கு ஏதும் ஆபத்தா?"

—முருகு மௌனமாக நின்றான்.

"கம்பெனிக்காரன் குண்டு மார்பிலே பாய்ந்ததா, முதுகிலே பாய்ந்ததா? — ஏன் இப்படிச் சொல்வதற்கே அவமானப்பட்டு நிற்கிறாய்?"

"குண்டினால் சாகவில்லை அவர்......"

"அப்படியானால் உடம்புக்கு ஏதாவது..."

"வள்ளி, திகைக்காதே! நேற்று அவரைத் தூக்கிலிட்டு விட்டார்கள்!"

"யார்? — கம்பெனிக்காரர்களா?"

"ஆமாம்."

"நீங்கள் எல்லாம் என்ன செய்துகொண்டிருந்தீர்கள்? அவரைப் பிடிக்கும்வரை—"

"நான் காளையார் கோவிலிலே இல்லை அப்பொழுது —"

"அப்படியானால்?"

'வள்ளி ஆத்திரப்படாதே. உபயோகமில்லாத விதத்தில் பதுங்கிப் பதுங்கி எத்தனை நாள் சண்டை போடுவது? நீயே சொல் !''

''முருகு ! உண்மையைச் சொல்லி விடு. இந்த மாலை யார் கொடுத்தது? மறைக்காதே, என்னிடம். நீயும் அந்தச் சண்டாளன் உடையத் தேவனோடு சேர்ந்து விட்டாயா ?''

''வள்ளி ! உன்னைப் பார்க்காமல் எத்தனை நாள் திருடனைப் போல், கைதியைப் போல் காட்டுக்குள்ளே இருப்பது—நீயே சொல் !''

வள்ளியம்மை தன்னுடைய கழுத்திலே கிடந்த ரத்தின மாலையை எடுத்தாள். அடுத்த கணம் அவள் உடம்பெல்லாம் பதறியது. ''அட, நன்றி கெட்ட பயலே ! உனக்காகவா நான் காத்திருந்தேன் ? தூ !'' என்றாள். வீராங்கனையின் ஆவேசத்தோடு அந்த மாலையை வீசி இந்தப் புண்ணியத் தாய்நாட்டு மண்ணிலே கூட அது விழக் கூடாது என்று முருகையாவின் முகத்திலே எறிந்தாள்.

''போ ! போய் விடு ! நில்லாதே !'' என்று ஒரு கதறல். அடுத்த கணம் அவனை வீட்டுக்கு வெளியே தள்ளிக் கதவைப் பூட்டிக் கொண்டு உள்ளே சென்றாள் வள்ளி. அப்படியே தரையிலே விழுந்தாள். அழுதாள். விம்மினாள். விக்கினாள். 'ஓ' வென்று கதறினாள். உண்மையில் முருகையனை அவள் மணந்திருந்து, திடீரென்று அவன் மரணம் அடைந்திருந்தால் என்ன பாடு பட்டிருப்பாளோ, அத்தனை பாடும் பட்டாள் வள்ளி. அவளுடைய மனசாட்சி முருகையனை வெறுத்து உதறியது. ஆனால் அவளுடைய மனமோ அவனுக்கு அடிமையாகி யிருந்தது ! என்ன செய்வாள் பாவம் !

## 7

வேள்விக்குடியிலிருந்து புறப்பட்ட முருகையன் உடையத் தேவனைத் திரும்ப வந்து பார்க்கவில்லை. பைத்தியத்தைப் போல ஒரு வாரம் அலைந்தான். எந்த வள்ளியிடம் தன்னுடைய அன்பு காரணமாக இந்தக் காரியத்தைச் செய்தானோ, எவளுடைய நினைவினால் அவன் இன்பம் அடைந்தானோ, அவள் இப்படித் 'தூ' என்று தள்ளி விட்டாள். இனி என்ன செய்ய ?

''இப்படியே நடந்து விடு !'' என்றது அறிவு. ''திரும்ப அவனிடம் போய், மன்னிப்புக் கேள் !'' என்றது சபலம் ! ஒரு வாரம் சுற்றினான். மீண்டும் வந்தான் வேள்விக்குடிக்கு. ஆனால் ?—

வேள்விக்குடிக்கு முருகையன் வந்துசேர்ந்த போது ஊர் எல்லாம் வெறித்திருந்தது. மரணத்தின் சூன்யம் அந்த ஊரையே போர்த்தி மூடியிருந்தது. வள்ளியம்மையின் மாமன் வீட்டுக்கு வந்தால் அங்கே ஒருவரும் இல்லை. வள்ளியம்மையைக் காணோம் !

வள்ளியம்மை மறைந்து விட்டாள். இந்தத் துரோக பூமியிலிருந்தே அவள் மறைந்து விட்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

**விநோபாவின் கருத்துக்கள்**

சமூக வாழ்க்கைக்குச் சில லட்சணங்கள் உண்டு. சேர்ந்து கூட்டமாக ஜீவிப்பது மட்டும் சமூகம் ஆகாது. டிக்கட்டு வாங்கும் கூட்டம் சமூகம் ஆகாது. டிக்கட் வாங்கும் ஜன்னலில் மற்றவர்களைத் தள்ளிவிட்டுத் தங்கள் டிக்கட்டுக்காகக் கூச்சல் போடுகிறார்கள். ஒரே உள்ளம் படைத்த ஒரே சமுதாயம் வேண்டும். ஆயிரம் சரீரமும் ஒரே இதயமும் கிரமமாகும். ஆயிரம் சரீரமும் ஆயிரம் இதயங்களும் இருந்தால் காட்டு விலங்குகளின் வாழ்க்கையாகும். அது மனித வர்க்கமல்ல. கோடிக்கணக்கான மக்களுக்குள்ள ஒரே இதயமே ஒரு தேசத்தின் லட்சணமாகும். ஆதலால் நம்மிடையேயுள்ள பொறாமை தீய எண்ணம் எல்லாவற்றையும் அகற்றி ஒரே இதயம் உள்ளவர்களாவோம். இந்தத் திசையை நோக்கிச் செல்லவே பூதான யக்ஞம் ஒரு முயற்சி!

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

டானா? இராது. அந்த வீராங்கனை அப்படி ஒரு கோழைத்தனமான காரியம் செய்திருப்பாளா? முருகையாவுக்குப் புரியவில்லை.

இந்த சம்பவம் நடந்த சில நாட்களில் "காருண்யம் மிகுந்த" வெள்ளைக்காரர்கள் மருது பாண்டியருடைய வேலையாட்கள் எழுபது பேரையும், நண்பர்களையும், மருது பாண்டியன் மகன் சின்னஞ் சிறு துரைசாமியையும், அவனைப் பாதுகாத்து வந்த அவனுடைய உறவினர் சிலரையும் தூத்துக்குடித் துறைமுகத்திலிருந்து "ப்ரின்ஸ் ஆப்வேல்ஸ்" தீவுக்கு நாடு கடத்தினார்கள். துரைசாமியைக் கண்ணும் கவனமுமாகப் பாதுகாத்து வந்த "குற்றத்"தினால் இந்தக் கடுமையான தண்டனைக்கு உள்ளானவர்கள், மனக் கலக்கம் அடையவில்லை. அதை ஒரு பாக்கியம் என்றும், மறைந்த மன்னருக்குத் தாம் செய்த கடமை யென்றும், தேச பக்திக்குக் கிடைத்த மகத்தான பரிசு என்றும் கருதி உள்ளம் பூரித்தார்கள்.



அப்படிக் கப்பலேற்றி அனுப்ப வேண்டிய பொறுப்பு எந்த துரையிடம் கொடுக்கப்பட்டதோ, அந்த துரை கர்னல் வெல்ஷ் தமது நாட் குறிப்பில் சொல்லுகிறார்:

"யுத்தம் முடிவடைந்த பின்னர், எஞ்சிய விரோதிகள் அனைவரையும் கப்பலில் ஏற்றி அனுப்பும் பொறுப்பான காரியத்தை நானே வகிக்க வேண்டியது நேர்ந்தது. சின்ன மருது பாண்டியனின் புதல்வன் தனக்கு நேர்ந்த இந்த முடிவைக் கம்பீரமாகத் தாங்கிக் கொண்டான். பெருந்தன்மையும் தியாக உணர்ச்சியும் தவழும் முகத்தோடு காட்சி தந்த அந்தப் பையன் தன் தலைவிதியை ஒரு சிறு முணுமுணுப்பும் இன்றி ஏற்றுக் கொண்டான்...... அந்தப் பையன் துரைசாமியைக் கடல் கடந்து போகும் கப்பலில் சேர்த்த பொழுது அவன் முகத்தில் இருந்த உணர்ச்சி இப்பொழுதும் என் கண்ணெதிரே தோன்றுகிறது. அதோடு அவனைப் போலவே துயரத்துக்கு உள்ளான அவனுடைய நண்பர்கள், தாய்நாட்டைப் பிரியும் தருணத்தில் மனத்தில் எழும் வேதனையையெல்லாம் தாங்கிக் கொண்டு, மௌனமாக ஆற்றலுடன் நின்ற காட்சி இன்றைக்கும் பசுமையாக நிற்கிறது!"

சூன்னற்ற தீவிலே அனுப்பப் பட்ட அந்த வீரத் தமிழ் மறவர்கள் அங்கேயே மாண்டு மடிந்தனர். தாய் நாட்டுக்கு எத்தனையோ தொலைவில் உள்ள அந்தத் தீவில், சகோதரர்கள் என்று உரிமை கொண்டாடும் மக்கள் யாரும் இல்லாமல் தாங்களே தங்களுக்குச் சொந்தமாக வாழ்ந்து, ஆவி பிரிந்தனர் அந்தத் தியாக சீலர்கள்! நீல வானம் மேலே கவிந்து நிற்கவும், கடல் அலைகள் ஓய்வு ஒழிவின்றிக் கதறவும் அவர்களுடைய உயிர் இந்த மண்ணுலகை விட்டு நீங்கிற்று. அந்த ஏகாந்தமான தொலைத் தீவிலே! அவர்கள் வளர்த்த தேச பக்தி என்ற எரிக்கும் நெருப்பு, காந்தி மகாத்மாவின் கை பட்டு அகிம்சை என்ற சுடாத நெருப்பாக மாறி இந்தப் பாரத நாடு முழுவதையுமே "கத்தியின்றி ரத்தமின்றி"ச் சுதந்திரம் அடையச் செய்த மகத்தான காட்சியை அந்தத் தமிழர்கள் வானுலகிலிருந்து கண்டு மகிழ்ந்தார்கள். மருது பாண்டியன் கல்லையும் மண்ணையும் கொண்டு கட்டிய கோட்டைகள் இடிந்து விட்டாலும், அவன் கட்டிய மனக் கோட்டை வெற்றிக் கோட்டையாக விளங்கியதைக் கண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார்கள். பூமாரி பொழிந்தார்கள். அப்படிப் பூச் சொரிந்தவர் கூட்டத்தில் வளை குலுங்கிய இரண்டு அன்புக் கரங்கள் இருந்தன! பெண்ணாக இருந்தும் கூட, நாடு கடத்தும் அளவுக்கு, தேசத் துரோகம் என்று கூறும்படியாக அந்தப் பூங்கரங்கள் புரிந்த தேச பக்தி மிக்க மகத்தான காரியம் என்ன?

மருது பாண்டியனுடைய மகன் துரைசாமியை நெடுநாள் இரகசியமாகப் பாதுகாத்து வந்ததாகக் குற்றம் சாட்டி நாடு கடத்தப்பட்ட அந்த உறவினர் கூட்டத்தில் முக்கியமாக விளங்கியவள் தமிழகத்துப் பெண்மையின் பண்பெலாம் சேர்ந்து உருவாகிய வீராங்கனை வள்ளியம்மைதான்!

Printed and Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras-10. Editor : M. P. Somasundaram

இருமல்

ஜலதோஷம்

ப்ரான்கைடிஸ்

ஆஸ்த்மா

கக்குவான் இருமல்

தொண்டை ரணம்




இவைகளுக்கு குழந்தைகள், பெரியோர், வயோதிகர் யாவரும் பெர்டுஸின் உட்கொள்ளலாம். பெர்டுஸின் சகலவித இருமல்களுக்கும் மற்றும் இதையொட்டிய உபாதைகளுக்கும் யாதொரு கெடுதியுமின்றி துரிதநிவாரணம் அளிக்கிறது. ஆகவே பெர்டுஸின் வாங்குங்கள்!

infa

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கிறது.

இடாபா லிமிடெட், ஷான். லீஷென்ஸ்டீன் ஸ்விஸ் கஸ்டம் அண்ட் இகனமிக் டெரிடெரி இவர்களின் அநுமதியின் பேரில் இன்பா லிமிடெட் தபால் பெட்டி 1041, பம்பாய் - 1 இவர்களால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

ILY-5-TAM

REGISTERED No. M. 4392
*Registered as newspaper in Ceylon*